# அமிர்தகலசம்

வித்வான்

ல. சண்முகசுந்தரம்

# அமிர்தகலசம்

ஆசிரியர்
வித்வான், ல. சண்முகசுந்தரம்

அமிர்தகலசம் என்னும் இந்நூல் திருமலை, திருப்பதி தேவஸ் தானத்தின் பொருளுதவி பெற்று வெளியிடப்படுகிறது.

சண்முகம் பதிப்பகம்

52 - இரண்டாவது தெரு
என்.ஜி.ஓ. காலனி
குரோம்பேட்டை
சென்னை - 44

முதற்பதிப்பு : 1999 - செப்டம்பர்

விலை ரூ. 50/-

| | | |
|---|---|---|
| நூல் | — | அமிர்தகலசம் |
| பதிப்பாண்டு | — | 1999 - செப்டம்பர் |
| ஆசிரியர் | — | வித்வான். ல. சண்முகசுந்தரம் |
| உரிமை | — | ஆசிரியருக்கே |
| நூல்வகை | — | இலக்கியம் |
| பக்கம் | — | 199 |
| பிரதிகள் | — | 1000 |
| தாள்நிறை | — | சேசசாயி 14.4. kg. |
| பைண்டிங் | — | செக்‌ஷன் |
| அச்சிட்டோர் | — | சக்தி பிரிண்டர்ஸ் அண்ட் எண்டர்பிரைசஸ் சென்னை - 21, போன்: 5962867 |

# மதிப்புரை

**நீதி அரசர் - S. மோகன்**

**(முன்னாள்) உச்சநீதிமன்ற நீதிபதி**

உலகில் உள்ள எல்லா மொழிகளுக்கும் இல்லாத ஒரு சிறப்பு தமிழுக்கு உண்டு. தொன்மையில் சிறந்த மொழி மட்டும் என்பதன்றி பக்தி இலக்கியங்கள் நிறைந்த மொழியும் தமிழ் ஒன்றுதான். தொட்ட தொட்ட இடம் எல்லாம் பக்தி மணம் கமழும் தமிழில் — தமிழ்ப்பாடல்களில்.

இறையோடு இயைந்து பக்தி பரவசமாகி ஆனந்தம் சொட்டச் சொட்ட ஆழ்வார்களும் நாயன்மார்களும் ஆயிரக்கணக்கில் பாசுரங் கள் பாடி இருக்கிறார்கள்.

ஆழ்வார்கள், நாயன்மார்கள் ஆகிய இரு சாராரின் வழிகள் வேறு வேறாக இருக்கலாம். ஆனால் இரு சாரார்களுக்கும் குறிக்கோள் ஒன்றுதான்.

ஈடில்லா அழகு
எல்லையற்ற ஆற்றல்
என்றும் உள்ள உண்மை.

இவை அனைத்தும் இறையின் வடிவங்கள். இவைகளோடு ஒன்றிப்போவதால் இறைவனோடு இணைய முடிந்தது.

அதனால் அந்த மகான்கள்,

"அங்கத்தை மண்ணுக்காக்கி
ஆர்வத்தை உனக்கே தந்தேன்"

என்று பாடிப்பரவசப்பட்டார்கள். தொல்லைகளிலிருந்தும் துயரங்க ளிலிருந்தும் விடுதலை பெற்றார்கள்.

அவர்கள் என்று இறையை உணர்ந்தார்களோ - என்று அந்த உண்மையை உள்ளத்தில் நிறுத்தினார்களோ அன்றே ஆவியும், உடலும், உடைமையும் எல்லாமும் அவனுக்கே சொந்தம் என்று அர்ப்பணித்தார்கள்.

அப்படிப்பாரத்தை இறக்கிக் கீழே வைத்த உடனேயே அவர்களிடம் பாசுரங்கள் என்னும் தெய்வீகப்பாடல்கள் பூத்துச்சொ ரிந்தன.

ஒவ்வொரு பாடலும் கற்பக விருட்சம், காமதேனு, சிந்தாமணி.

செல்வத்தில் எல்லாம் மிகச்சிறந்த செல்வம் அவர்களின் அருளிச்செயல்கள்.

கலைமகள் களிநடம் புரியும் அத்தாணி மண்டபங்கள்தாம் அவர்கள் பாசுரங்கள். ஒவ்வொன்றும்:

சந்தனம்போல் கமகம என்று மணப்பவை அத்தெய்வத் தீந்தமிழ்ப்பாடல்கள். ஆனால் சந்தனம் தானாக மணப்பதில்லை. அது நறுமணம் தரவேண்டுமென்றால் அதற்கென்று உள்ள கல்லில் வைத்து அரைக்க வேண்டும்.

அப்படி அரைக்கும் ஆளாக - இன்னொரு ஆழ்வாராகவே மாறி - பாசுரங்களாகிய பாலைக்கடைந்து அமிர்தம் எடுக்கிறார் வித்வான், ல. சண்முகசுந்தரம்.

ஆழ்வார்களுடன் - அவர்களுடைய அருளிச்செயல்களுடன் அப்படியே ஒன்றி விடுகிறார் வித்வான், ல. சண்முகசுந்தரம்.

தன்னை மறந்து - தன்னையே இழந்து கவியோடு கவியாய் ஐக்கியமானால்தான் கவியின் நோக்கம், கவிக்குள் நிறைந்து கிடக்கும் ஆனந்தமயமான உண்மை அனுபவம் விளங்கும். சண்முகசுந்தரம் அப்படிக்கவியோடு கவியாய் ஐக்கியமாகி விடுகிறார்.

நம்மையும் அப்படியே கவியோடு கவியாய் ஐக்கியப்படுத்துகிறார்.

கவியின் ஆனந்தத்தைத் துய்த்து மது உண்ட வண்டுபோல் ரீங்காரம் பண்ணும் ரசிகசிகாமணி சண்முகசுந்தரம் கவியில் கரைந்து ஆனந்தக்கூத்தே ஆடுகிறார்.

இதோ பாருங்கள்:

''தெய்வீகமான இந்தப்பாசுரங்களுக்கு பதவுரை, பொழிப்புரை, இலக்கணக்குறிப்பு, விரிவுரை ஒன்றும் தேவை இல்லை.

ஒவ்வொரு பாடலும், ஒவ்வொரு வரியும், ஒவ்வொரு சீரும் தேனில் ஊறப்போட்ட மல்கோவா மாம்பழத்துண்டுகளாய் இருக்கின்றன. ஒவ்வொரு சொல்லும் அல்வாத்துண்டுதான்.

இப்படி அடித்துச்சொல்ல - ஆணித்தரமாக இயம்ப ''ஆழ்வார்'' சண்முகசுந்தரத்தால்தானே முடியும்?

ஞானக்கொழுந்தாகிய இறையின்பத்தை நயம்பட உரைக்கும் கீழ்க்கண்ட பாடலைக்காட்டி அப்படி ஒரு விளக்கம் கொடுக்கிறார் ''ஆழ்வார்'' சண்முகசுந்தரம்.

இதோ அந்தப்பாடல்:

**நாடினும் நின்அடியே**
**நாடுவன்; நாள்தோறும்**
**பாடினும் நின்னடியே**
**பாடுவன்;- சூடினும்**
**பொன்ஆழி ஏந்தீநின்**
**பொன்னடியே சூடுவன்;**
**என்னாகில் என்னே**
**எனக்கு**

தனக்கு எது வரினும் கவலைப்படாது, ''கவலையை விடுங்கள் நாரணன் இருக்கிறான்'' என்று நம்பிக்கை ஊட்டுகிறது வித்வான் சண்முகசுந்தரனாரின் விளக்கம்:

**நலம்தரும் சொல்லை**
**நான் கண்டு கொண்டேன்**
**நாராய ணா என்னும்**
**நாமம்**

என்று பாடிப்பாடிக் களிப்பவர்க்கு நலம் அன்றி எது விளையும்?

ஞானத்தமிழ் புரிந்தவர் வித்வான், ல. சண்முகசுந்தரம் அவர்கள்.

அவருடைய எளிய இனிய தமிழ்நடையை - அந்த நடைக்குள் துள்ளி விளையாடும் தமிழ்க்கூத்தை ஞாலம் போற்றும்.

தமிழுக்கு உத்சாகத்தையும் கிளுகிளுப்பையும் கொடுக்கின்றது. அவரின் பதம் பட்ட நயமான தமிழ்நடை.

தமிழின் வேகம், நயம் எல்லாம் அப்படியே நம் கண்முன் வந்து களிநடம் புரிகின்றன சண்முகசுந்தரனாரின் விளக்கத்தில்.

வித்வான், ல. சண்மகசுந்தரம் இதுபோல் பல நூல்கள் எழுதி இருக்கிறார். ஆயிரக்கணக்கானோர் அவற்றைப்படித்து அனுபவித்தி ருப்பார்கள்.

அவற்றைப் படியாதவர்களும் பலர் இருப்பார்கள்.

அப்படிப்படியாமல் இருப்பவர்களுக்கு ஒரு வார்த்தை.

இனிமேலாவது வித்வான், சண்முகசுந்தரனார் நூல்களைத் தேடிப்பிடித்து விலைக்கு வாங்கிப்படிக்க வேண்டும்.

படிப்பவர்கள் பிறவிப்பயனடைவார்கள். படியாதவர்களுக்கு அந்த ஆனந்தம் இல்லைதான்.

திருமாலை வணங்கி வழிபடாத நாளெல்லாம் செல்லரித்துப் போன நாட்கள். அது இன்றோடு ஒழியட்டும் ''சென்றநாள் செல்லாக'' என்றார் ஆழ்வார்.

அதேபோல சண்முகசுந்தரனார் விளக்கத்தைப் படிக்காத நாட்கள் எல்லாம் செல்லரித்துப்போன நாட்களேதாம்.

போனது போகட்டும். வாழ்நாளில் இன்னும் எவ்வளவோ நாட்கள் இருக்கத்தானே செய்கின்றன.

அந்த நாட்களையாவது உண்மையான வாழ்நாட்களாகப் பயன்படுத்துவோம். சண்முகசுந்தரத்தின் அருளுரைகளை ஊன்றிப்படித்து ஆனந்தம் பெறுவோம்.

இவர்தம் விளக்கங்களைப் படிக்கப்படிக்க மனம் தூய்மைபெறும். பக்தியானது பழுத்துக்கனிந்து தேன் சொட்டும்.

அதுதான் உண்மையான காதல். நம் எல்லோருக்கும் நாயகனாக ஒருவன் விளங்குகிறான். அவன்தான் இறைவன் என்பதும் விளங்கும்.

நாம் ஒவ்வொருவரும் அவனுக்கு நாயகிகளே. அப்படி என்றால் பொருள் என்ன?

மனிதர்களாகிய நாம்தான் இறைவனுக்கு வாழ்க்கைத்துணை. நம் துணை இல்லை என்றால் இறைவன் காரியம் அப்படி அப்படித்தான்.

இப்படி ஒரு உறவும் பிணைப்பும் அல்லவா இறைவனுக்கும் நமக்கும் இருக்கின்றன.

இந்த முடிச்சை அவிழ்த்துப் பக்குவமாக விரித்துக்காட்டுகிறது. அமிர்தகலசம் என்னும் சண்முக சுந்தரனாரின் விளக்கநூல், ஒரு உதாரணம்.

நான் பிறப்பதற்கு முன் திருஊரகம் என்னும் பதியில் நின்ற கோலத்தில் காட்சி கொடுத்தார் பெருமான்.

அப்படியே அமர்ந்திருந்த கோலத்தில் திருப்பாடகத்தில் தரிசனம் அருளினார். திருவரங்கத்திலோ சயன கோலத்தில் அருள் பாலித்தார்.

இனி, நான் பிறந்து அவரை உணர்ந்து அனுபவிக்க அனுபவிக்க அந்த இடங்களை எல்லாம் விட்டுவிட்டார் பெருமாள்.

நிற்பது, இருப்பது கிடப்பதெல்லாம் என்னுள்தான்.

'என் இதயத்தோடு இதயமாகத்தான்' இப்படி வருகிறது திருமழிசை ஆழ்வாரின் பாசுரம்

இதோ பாடல்

நின்ற (து) எந்தை
ஊர கத்து
இருந்த(து) எந்தை
பாடகத் து

அன்றி வெஃகு-
ணைக்கி உந்த(து)
யான் இ லாத
முன் எ லாம்;

அன்று நான் பி
றக்க கில்லேன்,
இன்று நான் பி
றந்த பின்

நின்ற தும் இ
ருந்த தும்கி
டந்த தும்என்
நெஞ்சு ளே,

இப்பாடலின் கருத்தை விளக்கி விட்டு ஆசிரியர் ஏற்றிவைக்கும் விளக்கு இதோ:

''இவர் கையாளும் துள்ளலம் துடுக்கும் மிக்க உல்லாசச் சந்தங்கள் சொற்களின் குடுமியைப் பிடித்து ஆட்டுகின்றன''.

இந்த ஆழ்வார் திருமழிசை ஆழ்வாரை எப்படி இனம் காட்டுகிறார் என்று பார்த்தீர்களா?

இன்னொரு இடத்தில்

மழை போன்ற நீலநிற வண்ணனாகிய நீயே மழைக்கு எதிர் வேலை செய்கின்றாய் (பசு மந்தையைக் காக்க மலையைக் குடையாக எடுத்துப் பிடித்தது)

எல்லாம் வேடிக்கை தான்.

இப்படி ஆழ்வார் இறைவனிடம் நையாண்டி பண்ணுவதாக ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

வினைமயக்கத்திலிருந்து விடுபட வேண்டும் என்றால் அதற்கு வழி ஒன்றுதான். திருமாலின் திருவடி மலர்களை மனம்மறக்கவே கூடாது.

இப்படி அறதியிட்டுக் கூறும் ஆழ்வார்களின் பாசுரங்களை அமிர்தமாக வடித்து நமக்கு ஊட்டும் அமிர்தகலசம் என்னும் இந்நூலை எத்தனை முறை வேண்டுமானாலும் படிக்கலாம். மகிழலாம். மாண்புறலாம்.

திருமாலின் திருவருள் பெறலாம்.

"தேனார்பூஞ் சோலைத்
  திருவேங் கடச் சுனையில்
மீனாய்ப் பிறக்கும்
  விதிக்கு...

வழிவகுக்கும் ஆசிரியப் பெருந்தகை, நமக்கு கிடைத்த ஒரு ஞானக்களஞ்சியம்.

பிறவிப் பெருங்கடலை நீந்த நமக்குக் கிடைத்த நல்லதொரு தோணி.

தமிழ் செய்த தவப் பேறு.

சூடிக் கொடுத்த சுடர்க்கொடி (ஆண்டாள்)யிடம் ஒருவரம் கேட்டார் பக்தர் ஒருவர்.

"அம்மையே! தாயே! திருமாலே தஞ்சம் என்ற உறுதியில் நீ நின்றாய். அதே உறுதியை எங்களுக்கு நீ அருள வேண்டும்.

**சூடிக்கொடுத்த**
  **சுடர்க்கொடியே! தொல்பாவை**
**பாடி அருளவல்ல**
  **பல்வளையாய்! - நாடி நீ**

**வேங்கடவற்(கு) என்னை**
**விதி என்ற இம்மாற்றம்**
**நாம் கடவா வண்ணமே**
**நல்கு.**

*நாமும் ஆசிரியரிடம் இதுபோன்ற வரத்தைத்தான் கேட்க வேண்டும்.*

*ஐயா சண்முகசுந்தரனாரே! தமிழை மிளிரச்செய்யும் இது போன்ற பல நூல்களை நீங்கள் தொடர்ந்து வடிக்க வேண்டும்.*

*தமிழர்கள் படித்துப் பரந்தாமன் அருள் பெறவேண்டும்.*

*இனி என்னுடைய தனிவழிபாடு.*

*திருவேங்கடமுடையான் உங்களுக்கு சீரும் சிறப்பும் கொடுத்து அருள வேண்டும்.*

*நான் இறைவனிடம் வேண்டுவது இது ஒன்றுதான்.*

*வைணவத்துக்கு உங்களைத்தவிர வேறு யார் செய்வார் இந்த உபகாரத்தை.*

*திருப்பாற்கடலிலிருந்து எம்பெருமான் எடுத்து தேவர்க்கு வழங்கிய அமுதம் நிறைந்த கலசம் அல்லவா உங்களுடைய அமிர்தகலசம்.*

*எம்பெருமானுடைய லீலையில் ஒன்றாக இருக்கிறது உங்கள் தமிழும் பக்தியும்.*

*வாழ்க நீவிர் பல்லாண்டு, பல்லாண்டு, பல்லாயிரத்தாண்டு, பல கோடி நூறாயிரம் ஆண்டு.*

*வித்துவான் என்னும் திருவிளக்கே, வையகத்தின் எழில் உரைக்கும் மாமுகிலே*

**S. மோகன்.**

# நன்றியுரை

''பேரண்டத்திலேயே அழகான பொருள் மனிதன்தான். உயர்ந்த வஸ்துவும் மனிதன்தான்.

சிருஷ்டி தத்துவத்தின் மணிமகுடமாக விளங்குகிறான் மனிதன்.

மனிதன் மட்டும் இல்லை என்றால் இறைவனுடைய லீலாவி நோதம் வெறும் பொம்மலாட்டந்தான். வெறும் ஊமை நாடகமே தான்.

கொஞ்சி விளையாடுவதற்குக் கடவுள் வைத்துக்கொண்ட தெய் வக்குழந்தைதான் மனிதன்''.

மனிதனுக்கு மட்டும் இப்படி ஒரு அரும்பெரும் சிறப்பு எப்படி வந்தது?

காரணம் இதுதான்.

மனிதனிடந்தான் மனம் என்று ஒன்று இருக்கிறது. அந்தமனமோ பக்தியாக ஊறிக்கொண்டே இருக்கிறது.

பக்தி என்றால் குருட்டு நம்பிக்கையோ, அறியாமையோ, இருட் டடிப்போ இல்லை.

பகுத்துணர்ந்து பார்க்கும் மெய்யுணர்வுதான் பக்தி. விஞ்ஞான பூர்வமான மெய்ஞ்ஞானந்தான் பக்தி.

நான் என்கிற திமிர் (ஆணவம்) கரைய உண்மையைக் கண்டு உருகி ஆனந்திப்பதுதான் பக்தி.

உருகிப்பரவசப்படப் பரவசப்பட மரியாதை பெருகும். பயம் கழலும். காதல் ஊறும்.

அதுதான் ஆனந்தம். அதுதான் விடுதலை.

கோவிலுக்குப் போய்ச்சாமி கும்பிடுவதுதான் பக்தி என்று பொது வாக ஒரு நினைப்பு. இதில் ஓரளவுதான் உண்மை.

ஒரு புல் முளைத்து வருகிறதைப்பார்த்து அதிசயப்படுவதும் பக்திதான். அந்தப்புல் பசுவுக்குள் சென்று ரத்தமாக மாறிப் பாலாகச் சொரிகிறதே அதைப்பார்த்து அதிசயப்படுவதும் பக்திதான்.

கம்யூனிஸத்தின் பிதாமகர் என்று போற்றப்படுகிறவர் காரல் மார்க்ஸ்.

மூலதனம் என்னும் 'கேபிடல்' புத்தகத்தை மட்டும் அவர் எழுதவில்லை.

கலையும் பண்பாடும் (ஆர்ட் அண்ட் கல்ச்சர்) என்கிற புத்தகமும் அவர் எழுதியதுதான். அதில் அவர் சொல்கிறார்.

''உலக அதிசயங்களில் எல்லாம் மேலான உன்னதமான அதிசயம் ஒன்று உண்டென்றால் அது இந்தியர்கள் கண்டுபிடித்த கொழு

என்றும் விவசாயக்கருவிதான்''

''எகிப்தில் உள்ள ஊசிமுனைக் கோபுரங்களின் கூம்புகளைவிட மகத்தான கலைநுட்பமும் பண்பாட்டு நலமும் நிறைந்தது கொழு''.

எப்படி இருக்கிறது மார்க்கிஸின் உண்மை அனுபவம்.

பூமாதேவியின் மேனியைக் கிண்டியும் கிளறியும் புளகாங்கிதப்ப டுத்துகிறது கொழு. அந்த ஆனந்தத்தில் நெல்லும், கரும்பும், வாழை யும், பருத்தியும், பருப்பும் என்று பூத்துப் பொலிகிறாள் புவிமடந்தை.

கோடான கோடி மக்களின் உயிருக்குயிராக இருக்கிறது அவள் மேனி கொட்டும் அரிய ரத்தினங்கள்.

பூமாதேவி அப்படிக்கொட்டுவதற்குக் கொழுதான் மூலமந்திரம்.

அதைக் கண்ணாரக்காண்கிறார் மார்க்ஸ். அப்படியே அதிசயப்ப டுகிறார்.

அதிசயம் பக்தியையே உண்டாக்கிவிடுகிறது.

காரல்மாரக்ஸுக்குப் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழகத்து உழவர்கள் கொழுவையும் அது பூட்டிய ஏரையும் தொட்டு வணங்கி இருக்கிறார்கள்.

தொட்டு வணங்கியபின்பே உழுதார்கள். இந்தப்பக்தியை மூடத் தனம் என்றா எப்படிச் சொல்ல முடியும்?

அப்படிச் சொல்கிறவர்கள்தாம் மூடர்கள்.

விஞ்ஞானமோ மெய்ஞ்ஞானமோ ஞானத்துக்கெல்லாம் தாயும் தந்தையும் பக்திதான்.

அந்தப்பக்தியின் திருவோலக்கக்காட்சி முழுவதையும் ஜஸ்டிஸ் மோகன் அவர்களுடைய மதிப்புரையில் பார்க்கலாம். திரு. மோகன் அவர்கள் உச்சநீதிமன்றத்தின் நீதிபதியாக இருந்து நீதித்துறைக்கு வல்லமை ஊட்டியவர்கள்.

நீதிதேவதையின் கண்ணுக்கு சட்டத்துறையை வெறும் கண்ணா டியாக வைத்துக்கொண்டவர்கள் திருவாளர் மோகன்.

நீதிதேவதையின் கண்ணாக - கண்ணுக்குக் கண்ணான பார்வை யாக அமைந்தது கருணைதான் என்னும் நம்பிக்கை உடையவர்கள் திரு. மோகன்.

நம்பிக்கைக்குத் துரோகம் பண்ணாமல் அப்படியே செயல்பட்ட வர்கள்.

சிறந்த கல்விமான், உயர்ந்த பண்பாடு உடையவர். நல்ல சிந்தனையாளர். எழுத்தாளர். இத்தனையும் நிறைந்த பாத்திரந்தான் திரு. மோகன்.

எல்லாவற்றுக்கும் மேலாக உத்தமமான நண்பர். எனக்கு மட்டு மல்ல.

பழகுகிறவர்கள் அத்தனை பேருக்கும் இனிய நண்பர்.

அதற்கும் மேலாக அவர் ஒரு மனிதர், மா மனிதர் திரு. மோகன்.

அன்னாருக்கு என் மனப்பூர்வமான நன்றி.

இனி திரு இராமவீரப்பன் அவர்களைப்பற்றி பொதுவாக உலகம் அறிந்தது அவர் ஒரு அரசியல் தலைவர், நெறிமுறை பிறழாத அமைச்சர், கட்சித்தலைவர் என்று இப்படிப் பல.

இதில் ஓரளவு தான் உண்மை. முழு உண்மை வேண்டும் என்றால், திரு. இராம வீரப்பன் அவர்களை தூய அன்பினர் என்று சொல்லவேண்டும்.

நண்பர்களுக்கு மட்டு மல்ல, கலைக்கு பண்பாட்டுக்கு, தமிழுக்கு, நேர்மைக்கு, உண்மைக்கு இப்படி பலபல பண்புகளுக்கு அவர் அன்பர்.

அன்பர் என்றால் பொருள் என்ன.

அத்தனை பண்புகளுக்கும் அவர் துணையாக இருக்கிறார்.

அவர் நமக்கு உற்றதுணையாக இருக்கிறாரே என்ற நினைப்பில் மேலே குறிப்பிட்ட பண்புகள் தலைநிமிர்ந்து நிற்கின்றன.

ஊக்கத்தோடும் அதே நேரத்தில் கனிவோடும் அவை எழுந்து நிற்கின்றன.

இப்படி ஒரு பாதுகாவலன் கிடைத்தது தமிழ் செய்த யோகந்தான்.

என் நூல்கள் சிலவற்றைப் படித்துவிட்டு மனம் கசிந்து பாராட்டி எழுதி இருக்கிறார் திரு. இராம வீரப்பன் அவர்கள்.

அவர்களுக்கு என் மனப்பூர்வமான நன்றி.

இனி, எத்தனையோபேர் அச்சகம் வைத்து நடத்துகிறார்கள். கையிலே காசு வாயிலே தோசை என்கிற கணக்கில் முழுக்க முழுக்க வணிகநோக்கிலேயே நடத்துகிறார்கள்.

கலை உணர்வோடு அச்சகம் நடத்துகிறவர் ஒருவர் உண்டென்றால் அது சக்தி பிரண்டர்ஸ் உரிமையாளர் திரு, பாஸ்கர் ஒருவர்தான்.

கோவிலில் மூர்த்தியை எப்படி ஆர்வத்தோடு குருக்கள் பட்டர் அலங்காரம் பண்ணுகிறார்கள், அப்படி ஒரு ஆனந்த உணர்ச்சியோடு தாம் அச்சிடும் நூல்களை அலங்காரம் பண்ணி வெளியிடுகிறார் திரு. பாஸ்கர்.

லாப நஷ்டக்கணக்கை இதில் அவர் பார்ப்பதில்லை.

இந்தக் கலியுகத்தில் இது ஒரு அதிசயந்தானே. அன்னாருக்கும் என் இதயபூர்வமான நன்றி.

இப்படிக்கு
**ல. சண்முகசுந்தரம்**

## பிரார்த்தனை

மனசோடு ஒட்டிப்பிறந்தவன் மனிதன். அப்படி மனசோடு சேர்ந்து பிறந்ததனால்தான் சகல பாக்கியங்களுக்கும் அதிபதியாக இருக்கிறான் மனிதன்.

கல்வி, அறிவு, உணர்ச்சி, பண்பாடு, எல்லாம் மனதின் மூலம் உண்டானவைதாம்.

விவசாயம், வணிகம், சட்டம், மருத்துவம், பொறிஇயல், சங்கீதம், பரத நாட்டியம், ஓவியம், சிற்பம், முதலிய எல்லாத்துறைகளுமே மனசிலிருந்து உதித்து வந்தவைதாம்.

இவ்வளவுக்கும் மேலே மனைவி, மக்கள், குடும்பம், உற்றார், உறவினர், நண்பர் என்கிற அற்புதங்களும் மனசு என்கிற தத்துவம் உண்டாக்கி நடத்துகிற காரியங்கள்தாம்.

ஏனைய பிரயாணிகள் ஒன்றினிடமும் இந்த அரிய பெரிய செல்வம் இல்லை.

மனிதனிடந்தான் இந்த மண்ணுலகையே பொன்னுலகாக மாற்றி அனுபவிக்கிற பெரும்பேறு இருக்கிறது.

அந்த அரிய பெரிய பெரும்பேறு மனசிலிருந்து தோன்றியது.

இந்த அற்புதமான மனதுதான் அன்புக்கு ஊற்றுக்கண். ஆனந்தத்துக்கு நாற்றங்கால். இன்பத்துக்கோ வைரச்சுரங்கம்.

ஆனாலும் ஒன்று! அது என்ன?

எல்லையற்ற பெரும்பேறுகளுக்கெல்லாம் தாயாகத் திகழும் இந்த அற்புதமனந்தான் தீராத கவலைகளுக்கும் தொல்லைகளுக்கும் மூல காரணமாகத் திகழ்கிறது.

கடன் கொடுத்தவன் தொல்லை, கடன் வாங்கினவன் தொல்லை; வேலைக்காரன் தொல்லை, அதிகாரிகள் தொல்லை, குடும்பத்தொல்லை, ஊர்த்தொல்லை, உடம்பின் தொல்லை, வைத்தியனின் தொல்லை என்று அடுக்கிக்கொண்டே போகலாம். தொல்லைகளுக்கு எல்லையே இல்லை.

இவ்வளவும் மனிதனுக்குத்தான். யானைக்கும் இல்லை. பூனைக்கும் இல்லை.

காரணம் மனம் என்கிற ஒன்று மனிதனிடம் மட்டுமே இருக்கிறது. அதனால் இன்பம் போல துன்பமும் மனிதனிடமே உறவாடுகிறது.

ஏனைய பிராணிகளுக்கு மனிதனைப்போல மகிழ்ச்சியும் துயர் உணர்ச்சியும் இல்லைதான்.

இது காரணமாகவே ஆன்றோர்கள் கவலையை வெறுமனே கவலை என்று சொல்லவில்லை. மனக்கவலை என்றே அழுத்திக் காட்டினார்கள்.

ஆனாலும் கவலையிலிருந்து தப்பிக்க மனிதனிடம் உபாயம் ஒன்றும் இருக்கிறது.

எல்லாம் இறைவன் மயம். இன்பமும் அவன்தான். துன்பமும் அவன்தான்.

மகிழ்வதும் இறைவன்தான். துன்புறுவதும் அவன்தான் என்று

பாரத்தை இறக்கி வைத்துவிட்டால் போதும். விடுதலை பெற்றுவிட்டால் போதும்.

பிறகு தொல்லைக்கு இடமே இல்லை மனிதனிடம்! இந்த உபாயம் எளிதில் கிடைத்து விடவா செய்யும்?

கிடைக்க வேண்டுமென்றால் அதற்கு ஒரே ஒரு வழி பக்திதான்.

பக்தியை வளர்க்கிற சாதனங்கள்தாம் கோவில், கோபுரம், தேர், திருவிழா, மேளதாளம், மூர்த்தி, அபிஷேகம், அலங்காரம், ஆராதனை முதலிய தத்துவங்கள்.

இந்தியா என்றால் பக்திக்கும் பரவசத்துக்கும் பண்பட்ட உரக்கால் நன்செய். அதிலும் விந்திய மலைக்குத் தெற்கே கன்னியாகுமரி வரையுள்ள பூமி முழுவதும் கோவில்களும், ஞானிகளும், பக்தியும், பரவசமும் நிறைந்த அருள்மயமான ஞானபூமி.

அருள் உலகம் என்று போற்றப்படுகின்ற பொன்முடியில் பதிக்கப்பட்ட அரிய ரத்தினமாக ஒளிவீசுகிறிது திருமலை-திருப்பதி தேவஸ்தானம்.

திருமலை திருப்பதி தேவஸ்தானம் பக்தியையும் ஆனந்தத்தையும் விளைவிப்பதோடு நின்று விடாமல் சமுதாயத்துக்கு வேண்டிய திருப்பணிகளை - அறக்கொடைகளை மலைமலையாகச் செய்து கொண்டிருக்கிறது.

அவற்றுள் ஒன்று கலைவளர்ச்சிக்கும் பண்பாட்டு வளர்ச்சிக்கும் தேவஸ்தானம் வழங்கும் உபகாரம்.

அமிர்தகலசம் என்னும் இந்நூல் அச்சிட்டு வெளிவரத்திருமலை, திருப்பதி தேவஸ்தானம் ரூபாய் இருபதனாயிரம் உதவி இருக்கிறது.

இந்த அரிய பெரிய உதவியைச் செய்து எனக்கு மட்டுமல்ல தமிழுக்கும், சமயப் பண்பாட்டுக்கும் ஆக்கமும் ஊக்கமும் தேடித்தந்த திருமலை-திருப்பதி தேவஸ்தானத்துக்கும் - தேவஸ்தான இலக்கிய வெளியீட்டு ஆசிரியர் அவர்களுக்கும், பொறுப்பு மிக்க நிர்வாகத்தலைவர் (தேவஸ்தான கமிஷன்) அவர்களுக்கும் மற்றுமுள்ள அதிகாரிகளுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தொல்லைகளை நீக்கி எல்லை இலா இன்பத்தை நல்கும் ஏழுமலையானின் இன்னருள் எல்லோருக்கும் கிடைக்க பிரார்த்திக்கின்றேன்!

கவலையை வெல்ல ஒரே வழி ஏழுமலையானும் அவன் அருளை நினைந்து உருகிய அடியார்களின் அருளிச்செயல்களுமே. இந்த நம்பிக்கையை இந்த அமிர்தகலசம் என்னும் நூல் உண்டாக்க வேண்டும் என்பதே என் பிரார்த்தனை.

இப்படிக்கு
நூலாசிரியர்
ல. சண்முகசுந்தரம்
30.8.99

# பொருளடக்கம்


1. மதிப்புரை ........ 5
2. அணிந்துரை ........ 11
3. நன்றியுரை ........ 15
4. முகவுரை ........ 18
5. பொய்கைஆழ்வார் ........ 30
6. பூதத்தாழ்வார் ........ 55
7. பேயாழ்வார் ........ 56
8. நம்மாழ்வார் ........ 62
9. மதுரகவி ஆழ்வார் ........ 69
10. திருமழிசை ஆழ்வார் ........ 75
11. திருப்பாணாழ்வார் ........ 100
12. தொண்டரடிப்பொடி ஆழ்வார் ........ 104
13. குலசேகர ஆழ்வார் ........ 120
14. திருமங்கை (மன்னன்) ஆழ்வார் ........ 145
15. தனியன்கள் ........ 166
16. வேறுதனியன்கள் ........ 172
17. இராமானுஜர் நூற்றந்தாதி ........ 178

# அமிர்தகலசம்

## முகவுரை

நாலாயிர திவ்யப்பிரபந்தம் என்றால் தேவாமிர்தம் போன்ற மதுரமான சுவைமிக்க நான்கு ஆயிரம் பாடல்கள் என்று பொருள்.

நான்கு ஆயிரம் பாடல்களையும் சேர்த்து வைத்த ஒரு பெருநூல் என்கிற பொருளும் அதிலிருந்து தோன்றும்.

அவதார புருஷர்களாகிய ஆழ்வார்கள் பன்னிரண்டு பேர்கள் பாடியவை மேலே குறிப்பிட்ட பாடல்கள்.

பாடியவர்கள் மகான்கள், கருணையே வடிவானவர்கள். நாடும் மக்களும் ஆனந்தமாய் மகிழ்ந்து நல்வாழ்வு வாழ வேண்டும் என்கிற தீராத ஆவலுடையவர்கள்.

''அன்பு, பொறுமை, பணிவு, எளிமை, அடக்கம் முதலிய நற்பண்புகள் ஓங்க வேண்டும்.

இவற்றுக்கு ஆதாரமாக மக்களின் வாழ்க்கையில் பக்தி உணர்ச்சி பரிமளிக்க வேண்டும் என்கிற அருள் காரணமாகப் பாடிய பாடல்கள் இவை.

அதனால் ஆழ்வார்களின் பாடல்களுக்கு அருளிச்செயல் என்று பெயர். பாசுரம் என்றும் சொல்வதுண்டு.

ஆழ்வார்கள் பன்னிருவரும் தெய்வாம்சம் நிரம்பியவர்கள். அதனால் அவர்கள் சொல்கின்ற ஒவ்வொரு சொல்லும் மந்திர சக்தி நிறைந்தவை.

சாதாரண மக்கள் பேசும் பேச்சிலும் சரி, எழுதும் எழுத்திலும் சரி அங்கு வருகின்ற ஒவ்வொரு சொல்லுக்கும் ஒவ்வொரு பொருள் நிச்சயம் உண்டு.

நாற்காலி என்னும் சொல் நான்கு கால்களோடு கூடிய ஒரு ஆசனத்தைத் தனக்குள் பொதிந்து வைத்திருக்கும்.

பாற்கடல் என்னும் சொல்லோ தன்னுள் பால்மயான சமுத்திரத் தையே சேர்த்து வைத்திருக்கும்.

இப்படியாக ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு பொருளை, தன்னுள் வைத்துச் சுமந்துகொண்டே இருக்கும்.

சாதாரண மக்களின் சொற்களுக்குள்ள சக்தி அவ்வளவுதான்.

ஆனால் ஆழ்வார்கள் போன்ற அவதார புருஷர்களின் சொற்க ளில் மேலே குறிப்பிட்ட பொருள் நிறைந்திருப்பதுடன் எல்லையற்ற அருளும் நிறைந்திருக்கும்.

மக்களின் உள்ளங்களையும் உணர்ச்சிகளையும் தூய்மைப்படுத் தும் கருணை, நீதி, பக்தி ஆகிய பண்புகள் அந்தச் சொற்களில் தகதக என்று பிரகாசிக்கும்.

கோடி சூரியப்பிரகாசமாக சத்திய ஒளி ஒவ்வொரு சொல்லிலும் சுடர்விட்டு ஒளிரும். ஆழ்வார்களின் சொற்கள் ஒவ்வொன்றும் மனிதகுலத்தை மேம்படுத்தும் வளமான மந்திரங்கள்.

அவர்கள் அருளிச்செய்த பாசுரம் ஒவ்வொன்றும் தெய்வாம்சம் நிரம்பியவை.

ஸ்ரீமந்நாராயண மூர்த்தியே ஆழ்வார்களின் பாசுரங்களாகப் புதுப்புது அவதாரம் எடுத்து அருள் பாலிக்கிறார் என்றுதான் சொல்ல வேண்டும்.

புத்திசாலிகள் வார்த்தைகளைத்தேடி அலைவார்கள். ஆனால் வார்த்தைகளோ அறிஞர்களைத் தேடிவரும்.

அருளாளர்களும் அருட்கவிஞர்களும் ஒரு பார்வை பார்த்தால் போதும். அவர்கள் குறிப்பறிந்து அவர்களின் கட்டளைகளை உடனுக்குடன் நிறைவேற்றும் வார்த்தைகள்.

அகராதிகளுக்குள்ளும் நிகண்டுகளுக்குள்ளும் கிடக்கின்ற சொற் களுக்கு அர்த்தம் இருக்கலாம். ஆனால் அவற்றுக்கு அதிகாரம் கிடையாது. தோரணை கிடையாது.

அழுக்கைக் கழுவித்துடைத்தெறிந்து விட்டு உள்ளத்தை அழகு மயமாக ஜொலிக்க வைக்கும் உள்ளொளி கிடையவே கிடையாது.

ஞானிகளின் அருளால் - அவர்களுடைய ஆதரவால் சொற்க ளுக்கு வல்லமை கிடைக்கிறது. ஊக்கம்பிறக்கிறது அச்சொற்களில். முத்து, பவளம், நீலம், மரகதம், வைரம், வைடூர்யம் போல பச்சை, சிவப்பு, மஞ்சள் என்று நவநவமான ஒளிகளை உணர்ச்சிக ளில் பிரகாசிக்க வைக்கும் ஞானிகளின் அருள் பெற்ற சொற்கள்.

ஒரு உதாரணம்.

இடர் என்கிற சொல் நமக்கு தெரியும். துன்பம் என்பது அதன் பொருள் என்பதும் தெரியும்.

திருவேங்கடம், திருப்பாடகம், திருவெஃகா, திருக்கோவலூர் முதலிய திருப்பதிகளும் நமக்குத்தெரியும். அப்பதிகளை உணர்த்தும் திருவேங்கடம் முதலிய சொற்களும் நமக்குத்தெரியும்.

ஆனால் அச்சொற்களுக்குள் இருக்கும் அளவிடமுடியாத ஆற்றல் - அற்புத சக்தி நமக்குத் தெரியாது. பொய்கையாழ்வாரின் கை பட்டவுடன் அச்சொற்கள் தம்மிடமுள்ள சக்தியை எப்படி வெளிப்படுத்துகின்றன என்று பாருங்கள்.

வெண்பா

*வேங்கடமும் விண்ணகரும்,*
*வெஃகாவும், அஃகாத*
*பூங்கிடங்கின் நீள்கோயில்*
*பொன்னகரும்,— நான்கிடத்தும்*
*நின்றான் இருந்தான்*
*கிடந்தான் நடந்தானே*
*என்றால் கெடுமே*
*இடர்*

**(வேங்கடம் - திருவேங்கடம். திருப்பதி. இங்கே திருமாலின் நின்ற திருக்கோலம். விண்ணகர் - காஞ்சிபுரத்தை ஒட்டிய திருப்பாடகம் என்னும் பதி. இங்கே அமர்ந்த திருக்கோலம். திருவெஃகா - இதுவும் காஞ்சியை ஒட்டியபதி. இங்கே சயன திருக்கோலம். பூங்கிடங்கு - அகழி. நீள்கோயில் பொன் நகர் -திருக்கோவலூர் - இங்கே வேகமாக நடைபோடும் பாவனையில் மூர்த்தம்.)**

பாடலைப் பாடிக்கொண்டே இருக்கலாம். பாடப்பாட வாயில் தேனூறும். கேட்கக்கேட்க செவிக்கு இன்பம் பெருகும். மனசிலுள்ள அழுக்கை எல்லாம் கழுவிக்கொட்டிவிடும் பாடல்.

பிறகு மனசுக்குப் பாரம் ஏது, வேதனை ஏது, துன்பமோ, துயரமோ, தலைகாட்டுமா அங்கு.

இப்படி ஒரு பேரானந்தத்தைக் கொடுக்க வேண்டும் என்றால் சொற்களுக்கு தெய்வகடாட்சம் - மந்திரம் வேண்டும். இல்லை என்றால் முடியுமா?

ஆழ்வார்களின் கருணையும், தவவலிமையும் சொற்களுக்கு அந்த ஆற்றலை வழங்குகின்றன.

ஆழ்வார்களின் பாசுரங்கள் தமிழகம் முழவதும் பக்தி வெள்ளம் கரைபுரண்டோடச் செய்தன.

தெய்வ பக்தியோடு வாழ்க்கையிலேயே பக்தி சுரக்கும்படி செய்தன பாசுரங்கள்.

அடியார்களின் ஈடுபாடும், பரவசமும், எளிமையும், அடக்கமும், தியாகமும் மனித வாழக்கையை தெய்வ வாழ்க்கையாக உயர்த்தின.

மனிதர்கள் ஒருவர்மேல் ஒருவர் அன்பைப் பொழிவதற்கும், ஒருவருக்கொருவர் ஆதாரமாக இருந்து உதவுவதற்கும், மக்களின் உள்ளத்துக்கு வல்லமை கொடுத்தன ஆழ்வார்களின் பாசுரங்கள்.

திருமாலின் அடியார்கள் நாங்கள். எங்களுக்கு ஒரு குறையும் இல்லை என்கிற திருப்தியை - சர்வ மங்களம் என்னும் நிலையை மக்களின் உள்ளத்தில் நிலைநாட்டியது ஆழ்வார்களின் பாசுரங்கள்.

இதோ இன்னொரு பாடலைப்பாருங்கள்.

''என்னுடைய மனம், .உணர்வு, உள்ளுணர்வு எல்லாமே எம்பெருமானின் (திருமாலின்) திருவருளை நோக்கியே நிற்கின்றன'' என்பது கருத்து.

"ஆறுகள் கடலை நோக்கி ஓடுகின்றன. தாமரை மொட்டுகளோ எப்பொழுது தரிசனம் கொடுப்பான் சூரியதேவன் என்று ஒற்றைக்காலில் நீரில் நின்று தவம் பண்ணுகின்றன. உயிரோ கூண்டில் அடைபட்ட புலிபோல தவிக்கின்றது. காலதேவன் எப்பொழுது வருவான். நம் கையை அவன் எப்பொழுது பிடிப்பான். அப்படியே அவன் தோளில் கை போட்டபடி இந்தக்கட்டையை உதறி எறிந்து விட்டு ஓடலாம் என்று தவியாய்த் தவித்து நிற்கின்றது.

இவ்வளவையும் ஒதுக்கிவிட்டு உணர்வு-மெய்யுணர்வு பெருமானின் திருவருளை நோக்கியபடியே நிற்கின்றது.

இப்படிக் கருத்துக்கு விளக்கம் வருகிறது.

ஆனாலும் இந்தக்கருத்தையும் விளக்கத்தையும் எத்தனை முறைகளில் வசனத்தில் - நம்முடைய வெற்றுரையில் போட்டுப் பார்த்தாலும் சரி, அதில் ஏதோ அர்த்தம் இருக்குமே தவிர உயிரோ, துடிப்போ, ஒளியோ இருக்கவே இருக்காது.

அவை வேண்டும் என்றால் ஆழ்வார்களின் வாக்கிலிருந்து - அருள் வாக்கிலிருந்து வர வேண்டும் விஷயமும் சொல்லும்.

இதோ பாருங்கள் பாடலை:-

*"பெயரும் பெருங்கடலே*
*நோக்கும்யா(று), ஒண்பூ*
*உயரும் கதிரவனை*
*நோக்கும் - உயிரும்*
*தருமனையே நோக்கும், செந்-*
*தாமரையாள் கேள்வன்*
*ஒருவனையே நோக்கும்*
*உணர்வு."*

**(யாறு - ஆறு, நதி, கதிரவன் - சூரியன். தருமன் - எமதர்மன். செந்தாமரையாள் கேள்வரன் - லட்சுமிதரன், திருமால்).**

இந்தப்பாடலை ஒருதடவை சொல்லிப்பார்த்தால் போதும். பிறகு நாவை விட்டு இறங்காது பாடல். சொல்லு சொல்லு என்று திரும்பத் திரும்பப் பாடவைக்கும்.

அப்படி அற்புத சக்தி பாடலில் நிறைந்திருக்கிறது.

மேட்டர்லிங் என்னும் பெயரில் ஒரு சிறந்த நாடகாசிரியர் - கதாசிரியர் டென்மார்க் நாட்டில் இருந்தார்.

பத்தொன்பது இருபதாம் நூற்றாண்டில்தான்.

மரணத்தைப்பற்றிய பயத்தை மனித உள்ளத்திலிருந்து விரட்டியடித்து விட்டார் தம் கதைகளின் மூலம் மேட்டர் லிங்க் என்று மேலைநாட்டு நிபுணர்கள் புகழ்வார்கள்.

பிறப்பு மாதிரிதான் இறப்பும் என்று மேட்டர்லிங்க்தான் கதைகளின் மூலம் முதல்முதல் தெளிவுபடுத்தினார் என்றும் புகழாரம் சூட்டுவார்கள்.

அவர்கள் நம் ஆழ்வார்களின் பாடல்களைப் படித்ததில்லை. படித்திருந்தால் ''உயிரும் - தருமனையே நோக்கும்'' என்னும் வரியை வளைத்து வளைத்துப் படிப்பார்கள். படித்துப்படித்து அனுபவிப்பார்கள்.

அடடா, மனித உள்ளத்தை மரணத்தோடு மாப்பிள்ளையும் பெண்ணும் மாதிரி கட்டிப்புரண்டு உல்லாசமாக விளையாட வைத்து விடுகிறாரே ஆழ்வார் என்று துள்ளிக்குதித்தே விடுவார்கள்.

காதலனை எதிர்பார்த்து நிற்கும் காதலிபோலல்லவா காலத்தை எதிர்நோக்கி நிற்கிறது உயிர் (வாழ்வு) என்று புளகாங்கிதம் அடைவார்கள்.

மரணம் சர்வசாதாரணம் என்பதை அழுத்திக்காட்ட ஆறுகளும் மலர்களும் கலகலவென்று சிரித்து மகிழ்ந்து சாட்சியங்களாக வந்து நிற்கின்றன.

இப்படி எல்லாம் உண்மையைத் துலக்கத் துலக்கத்தான் உள்ளத்தில் பக்தி ஊறும். இத்தகைய பாசுரங்களைப் படிக்கப்படிக்க ஒரு உண்மை புலப்படும்.

பக்தி என்பது கல்யாணப்பெண் மாதிரி. கலை என்பது புதுமாப்பிள்ளை மாதிரி.

மாப்பிள்ளையும் பெண்ணும் சேர்ந்தால்தான் வாழ்க்கை.

பக்தியும், கலையும் கைகோர்த்து இணைய வேண்டும். அப்படியானால்தான் ஆனந்தம்.

விடுதலை என்பதும் மோட்சம் என்பதும் அதில்தான் இருக்கின் றது.

ஆழ்வார்களின் திருப்பாசுரங்கள் பக்தியும் கலையும் ஒன்று பட்டு எடுத்த புது அவதாரம்.

அதனால்தான் படிக்கப் படிக்கத் தேனாய்த்தித்திக்கின்றன ஆழ்வார்களின் பாடல்கள். பாடல்களில் உள்ள ஒவ்வொரு சொல் லுமே தேனில் ஊறப்போட்ட பலாச்சுளைகள்தாம்.

ஆழ்வார்களின் - குறிப்பாக நம்மாழ்வாரின் பாசுரங்களைப்பாடி அனுபவிக்காதவர்கள் எத்தனை தவம் பண்ணினாலும் - திருமா லுக்கு எத்தனை கும்பிடு போட்டாலும் விடுதலை பெறமுடியாது. அதாவது ஸ்ரீமன் நாராயணனனின் திருஅருள் பெற முடியாது என்கிறார் பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் என்னும் பரம பக்தர்.

அவர் சொல்வதைப்பாருங்கள்:

*சென்று புனல்மூழ்கி*
*செய்தவங்கள் செய்தாலும்*
*வென்று புலன் அடக்கி*
*விட்டாலும் - இன்தமிழால்*
*மாறன் உரைத்த*
*மறைஓதார்க்(கு) இல்லை திரு*
*ஆறன் விளை அமர்வான்*
*அன்பு.*

**(புனல் மூழ்கி - நீரில் மூழ்கி எழுந்து, புலன் - ஐம்புலச்சேட்டை களை மாறன - நம்மாழ்வார், மறை -பாடல்கள் திருஆறன்விளை அமர்வான் அன்பு - ஆறன்விளை என்னும் தலத்தில் எழுந்தருளிக் காட்சி கொடுக்கும் பெருமானின் திருஅருள் (பாசுரங்களைப்பாடி அனுபவிக்காதவர்களுக்கு) இல்லை - கிடைக் காது. கிடைக்கவே கிடைக்காது)**

*இதைவிட பாசுரங்களின் இயல்பை எப்படித் தெளிவுபடுத்திக் காட்டமுடியும்.*

*ஆழ்வார்களின் பாசுரங்களுக்கு - பொதுவாகக் கவிக்கலைக்கே ஒரு உண்மையான மதிப்புரை உண்டென்றால் அது மேலே குறிப்பிட்ட பாடல்தான்.*

*திருமாலே பாசுரங்களாக அவதாரம் எடுத்து வீற்றிருக்கிறார் என்பது வைணவ மரபு.*

*இசையானது பழுத்துத் தேன்சொட்டும் ஆழ்வார்களின் பாடல்க ளில் - நம்மாழ்வாரின் பாடல்களைக்கேட்டு திருமாலே பூரித்துப்போ னார். அவர் தோள்கள் விம்மிப்புடைத்து ஓங்கி உரம் பெற்று விட்டன என்று பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் திருவரங்கக்கலம்ப கத்தில் பாடி இருக்கிறார்.*

*இதோ அப்பாடலின் பகுதி:*

***அருமறை துணிந்த***
***பொருள்முடிவை இன்சொல்***
***அமுதொழுகு கின்ற***
***தமிழினின் விளம்பி***
***அருளிய சடகோபர்***
***சொற்பெற்(று) உயர்ந்தன;***

***அரவணை விரும்பி***
***அறிதுயில் அமர்ந்த***
***அணிதிரு அரங்கர்***
***மணிதிகழ் முகுந்தர்***

*அழகிய மணவாளர்*
*கொற்றப் புயங்களே!*

**(அருமறை துணிந்த பொருள்முடிவை - மெய்ஞ்ஞானத்தின் முடிந்தமுடிவாகிய உண்மையை, சடகோபன் -நம்மாழ்வார், சொல் பெற்று உயர்ந்தன - பாடல்களை கேட்டு அதனால் விம்மிப்புடைத் தன. எவை?**

**அரவணைவிரும்பி அறிதுயில் அமர்ந்த அரங்கர் - ஆதிசேஷ சயத்தை விரும்பி அதில் யோகநித்திரை புரியும், திருவரங் கப்பெருமானின், கொற்றப்புயங்கள் - வீரதீரத்தோள்கள்தாம் பாடல்க ளின் சுவையில் விம்மிதம் அடைகின்றன.)**

*வைணவ மக்களுக்கெல்லாம் ஞானக்களஞ்சியமாகவும் பக்திச் சுரங்கமாகவும் இறையருளாகவும் விளங்குகின்றன. நாலாயிர திவ்யப்பிரபந்தப்பாடல்கள்.*

*ஆழ்வார்களின் இந்த அருளிச் செயல்களைப் பாடுவதையே பெருமாளுக்குச் செய்யும் சேவையாக மதிக்கின்றனர் வைணவப் பெருமக்கள்.*

*பூர்வமான பண்ணோடும், அதனதன் திறத்தோடும் வைத்துப் பாடிப்பாடி அனுபவிப்பார்கள் ஆழ்வார்களின் பாசுரங்களை.*

*வைணவர்கள் பலர் ஒன்றுகூடி இசையோடு ஆழ்வார்களின் பாடல்களைப் பாடியே பரவசமடைவார்கள்.*

*அப்படிச்சேர்ந்து பாடுவதற்கு கோஷ்டிகானம் என்று பெயர்.*

*பிரபந்தப் பாடல்களில் உள்ள இசைவடிவங்களுக்கும், இசைக் கட்டளைகளுக்கும் தேவகானம் என்று பெயர்.*

*பாற்கடலைக்கடைந்து அதிலிருந்து எழுந்துவந்த அமிர்தத்தைத் தேவர்களுக்குப் பகிர்ந்தளித்தார் பெருமான்.*

***அந்த அமிர்தத்தில் ஒரு சிறு துண்டுகூட திருமால் உண்ண வில்லை.***

அமிர்தமே தேவையில்லை என்று பரமானந்த சொரூபமாக விளங்கும் திருமாலுக்கு உண்ணும் சோறும், பருகும் நீரும், தின்னும் வெற்றிலையும் எல்லாம் ஆழ்வார்களின் பாசுரங்கள்தாம்.

இந்தப் பாசுரங்களைக்கேட்டு அனுபவிக்கவில்லை என்றால் திணறிப்போவார் பெருமான்.

கையும் ஓடாது அவருக்குக் காலும் ஓடாது. அப்படியே பித்துப்பிடித்ததுபோல நின்று விடுவார்.

பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் மூவரும் தொண்டை மண்டலத்தைச் சேர்ந்தவர்கள்.

முறையே திருவல்லிக்கேணி, மாமல்லபுரம் (மகாபலிபுரம்) காஞ்சிபுரம் ஆகிய ஊர்களில் அவதரித்தவர்கள்.

மூவரில் ஒருவர் ஒரு வீட்டின் இடைகழியில் மழைக்கு ஒதுங்கினார். நீள அகலத்தில் சிறு இடந்தான் இடைகழி, மழை விடாமல் பெய்து கொண்டிருந்தது.

சிறிது நேரத்தில் இன்னொருவர் வந்தார். உள்ளே வரலாமா என்றார். ''தாராளமாக வரலாம். ஆனால் இடம் சிறிது ஒருவர் படுக்கலாம் இருவர் இருக்கலாம். அவ்வளவுதான் இடம்'' என்றார்.

அப்படியே இருவரும் உட்கார்ந்தார்கள்.

அந்த நேரம் பார்த்து மூன்றாமவரும் வந்து சேர்ந்தார். ''இடம் உளதோ'' என்றார். ஏன் இல்லை! ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம். மூவர் நிற்கலாம். தாராளமாக வரலாம் என்றனர் இருவரும்.

மூவரும் இடைகழியில் நின்றனர். மழையோ கொட்டோ கொட்டென்று கொட்டியது. வாடையும் குளிரும் மிரட்டின.

சும்மா நிற்பதற்குப்பதில் இறைவனைப்பற்றிய பாடல்களைப் பாடலாமே என்றார் ஒருவர். அப்படியே மூவரும் சேர்ந்து பாடினார்கள்.

என்ன அதிசயம்! பாடப்பாட வாடையும் குளிரும் ஓடிவிட்டன. ஆனால் புழுக்கமாக இருந்தது. மூச்சை முட்டுகிற அளவுக்கு இறுக்கமும் நெருக்கமும் ஏற்பட்டன.

மழை பெய்து கொண்டுதான் இருக்கிறது. ஆனாலும் புழுங்கு கிறது. இருட்டு வேறு. வெளிச்சமும் இல்லை.

நெருக்கடிக்கும் புழுக்கத்துக்கும் என்ன காரணம் என்று மூவரும் யோசித்தார்கள்.

பாட்டை நிறுத்திவிட்டு யோசித்தார்கள். அவ்வளவுதான். வாடையும் குளிரும் பழையபடி வந்து விட்டன. நெருக்கடி இல்லாமல் இடமும் தாராளமாக இருந்தது.

நாம் பாடும்போது பெருமாளே ஆவலோடு வந்து பாடல்க ளைக் கேட்கிறார். அதற்காக நம்முள் வந்து நுழைந்து கொள்கிறார். அதனால்தான் நெருக்கமும் புழுக்கமும் ஏற்பட்டன.

அப்படி மதிக்கிறார்! அப்படி மதிக்கிறார்! பாடல்களைப் பெருமாள்!!

பாடுவதை நிறுத்தினோம். பெருமாளும் நகர்ந்துவிட்டார்!

மின்வெட்டுப்போல உண்மை துலங்கிவிட்டது முதலாழ்வார் மூவர்களுக்கும்.

உண்மைதான் பக்தர்களுக்குப் பெருமாள் எப்படியோ, அப்படித் தான் ஆழ்வார்களின் பாசுரங்கள் பெருமானுக்கு.

உலகிலேயே இப்படியாகப் பாசுரங்களைக் கடவுளாகவே மதித்து ஒரு இனத்தார் போற்றுகிறார்கள் என்றால் அது வைணவர் கள்தாம்.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பாடிய பாசுரங்கள்தாம். ஆனாலும் இன்று நாம் பேசும் வார்த்தைகளிலேயே அமைந்துள்ளன பாசுரங்கள்.

பாடல்களில் உள்ள சந்தம், தாளம், பண், கட்டளை எல்லாமே நம்மோடு அன்றாடம் உறவாடுபவைதாம்.

பழமைக்குப் பழமையாகவும் புதுமைக்குப்புதுமையாகவும் உள்ளன பாசுரங்கள்.

அதனால் பொருள், உணர்ச்சி, பாவம் எல்லாமே நம் இதயத்தோடு ஒட்டியவையாய்ப்பாடல்களில் அமைந்துள்ளன.

*"கொண்டல் வண்ணனைக்,*
*கோவல னாய்வெண்ணெய்*
*உண்ட வாயனை,*
*உள்ளம்க வர்ந்தானை"*

இப்படிக்குதி போட்டுக்கொண்டு வருகின்றன ஒவ்வொரு பாசுரங்களும்.

தெய்வீகமான இத்தகைய பாசுரங்களுக்கு பதவுரையோ குறிப்பு ரையோ தேவையா? இல்லை, இலக்கணக்குறிப்போ, விரிவுரையோ அவசியமா? அப்படி ஒன்றுமே வேண்டியதில்லை.

ஒவ்வொரு பாடலும், ஒவ்வொரு வரியும், ஒவ்வொரு சீரும் தேனில் ஊறப்போட்டெடுத்த மல்கோவா மாம்பழத்துண்டுகளாக இருக்கின்றன. ஒவ்வொரு சொல்லுமே அல்வாத்துண்டுகள்தாம்.

இனி,

**பச்சைமால் மாலைபோல் மேனி,**
**பவளவாய், கமலச்செங் கண்**
**அச்சுதா! அமரர்ஏ றே!**
**ஆயர்தம் கொழுந்தே என்னும்**
**இச்சுவை தவிரயான் போய்**
**இந்திர உலகம்ஆ ளும்**
**அச்சுவை பெறினும் வேண்டேன்**
**அரங்கமா நகருளா னே!**

என்னும் பாசுரத்தைப் பாருங்கள்.

ஒவ்வொரு பாசுரமும் இப்படியாக யாதொரு தடையும் இல்லாமல் நம் உணர்ச்சியோடு உணர்ச்சியாய்க் கலந்து விடுகின்றன.

நம் உணர்ச்சியைக் குழைத்துப் பிசைந்து நம்மை வேறொரு வஸ்துவாகவே ஆக்கிவிடுகின்றன பாசுரங்கள். பன்னிரு ஆழ்வார்க ளில் பெரியாழ்வார், ஆண்டாள் இவர்கள் பாசுரங்களை இந்நூலில் சேர்க்கவில்லை.

ஏனைய ஆழ்வார்கள் பதின்மருடைய பாசுரங்களில் ஒருசில பாசுரங்களுக்குத்தான் விளக்கம் கொடுத்து அமிர்த கலசம் என்னும் பெயரில் வெளியிடுகிறோம்.

அடிக்கடி பாடி அனுபவித்த பாசுரங்களுக்கே இங்கே விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. பாடி அனுபவித்த பாசுரங்களை அன்பர்களி டம்அடிக்கடி சொல்லி ஆனந்தத்தில் திளைக்க நேர்ந்தது.

அந்த ஆனந்த பரவசத்தை ஒருவாறு காட்ட விளக்கத்தில் முயற்சி எடுக்கப்பட்டுள்ளது. அது எந்த அளவுக்கு உருவாகி வந்துள்ளது என்பதை நேயர்கள்தாம் தீர்மானிக்க வேண்டும்.

பத்து ஆழ்வார்கள் பாசுரங்கள் இந்நூல்ல் பிரதானமாக இருந்தாலும் அவைகளுடன் சேர்ந்து இராமானுஜர் நூற்றந்தாதியி லுள்ள சில பாசுரங்களும் விளக்கத்தோடு இணைக்கப்பட்டுள்ளன இந்நூலில்.

மேலும் திருமாலைப்பற்றிய ஒருசில பழந்தமிழ்ப் பாடல்களும் அவற்றுக்குரிய அனுபவங்களும் அமிர்தகலசம் என்னும் நூலில் இடம் பெற்றுள்ளன.

ஆச்சார்ய புருஷர்கள் பலர் ஆழ்வார்களின் பாசுரங்களுக்கு ஒப்பற்ற விளக்கங்கள் கொடுத்துள்ளார்கள்.

ஈடு என்னும் பெயர் பெற்ற அந்த அற்புத விளக்கங்கள் ஒவ்வொன்றும் தங்கச்சுரங்கங்கள், வயிரக்குவியல்கள்.

அவ்வளவு அற்புதமான விளக்கங்கள் இருக்க ஏன் இந்த விளக்கம் என்று கேட்கலாம்.

காலத்தின் விரைவான ஓட்டம் கருதி - அதன் வேகத்தை அனுசரித்து சுருக்கமான முறையில் விளக்கம் இருந்தால் ஆழ்வார்களின் பாடல்களைப்படிக்கவும் அனுபவிக்கவும் பலரைத் தூண்டுமே என்கிற ஆசை காரணமாக எழுந்ததுதான் அமிர்தகலசம் என்னும் நூல்.

அந்த அளவில் அமிர்தகலசம் என்னும் நூல் பயன்படும் என எண்ணுகிறோம்.

இப்படிக்கு
ல, சண்முகசுந்தரம்
*24.6.99*



# பொய்கை ஆழ்வார்

**க**டவுள் தத்துவம் ஒன்று. இறுதி இல்லாதபடி எங்குமாய் நிறைந்திருப்பது அது. உலகங்கள் எல்லாமே இறைவனுடைய திருஉளப்படியே தோன்றுகின்றன.

நிலைத்து நிற்பதுபோலத் தோன்றுவதும் சரி, மறைவதும் சரி சகலமும் திருஉளப்படியேதான்.

தோற்றம், நிலை, மறைப்பு எல்லாம் இறைவனுக்கு விளையாட்டு. இந்த விளையாட்டு காலத்தால் ஒரே தொடர்ச்சியாகவும், இடத்தால் எங்கும் வியாபித்ததாகவும் நடக்கிறது.

நம்முடைய காரியம் எல்லாம் அந்த விளையாட்டில் துளித்துளிப் பொட்டுகள்தாம். ஏன், நாமே அதனுள் அடங்கிய அடக்கந்தான்.

இந்த உண்மையானது ஞானிகளுக்கு விளங்கி விடுகிறது. இந்த உண்மையை விளங்கியவர்கள் ஞானிகள். விளங்காதவர்கள் நம்போலியர்.

திருவருள் மயம் என்பதைத் திருவிளையாடல் என்று சொல்வது ஒருமுறை. அதையே அறிதுயில், ஞானத்துயில், ஆனந்தக் கனவு, லீலாவிநோதம் என்றெல்லாம் சொல்வது அதற்குச் செய்யும் உபசாரம்.

ஸ்ரீமந்நாராயணன் திருப்பாற் கடலில் ஞானத் துயிலில் அமர்ந்திருக்கிறான் என்றும், அந்த அறிதுயிலில் விளையும் ஆனந்தக் கனவுகள்தாம் அண்ட பிண்ட சராசரங்களாய் வருகின்றன; பார்க்கின்றன; போய் விடுகின்றன என்றும், இது தடையின்றித் தொடர்ந்து நடைபெறுகின்றன என்றும் சொல்வதில் உபசாரம் இருக்கத்தானே செய்கிறது.

இனி, திருமாலின் நாபிக் கமலத்தில் உண்டானான் பிரமன் என்றும், அந்தப் பிரமனை வைத்தே உலகங்களைப் படைக்கிறான் திருமால் என்றும் சொல்லி இருக்கிறது.

இதற்கும் மேலே இன்னொன்று. அது நாடகம் போல உணர்ச்சிமயமாக இருக்கும்.

கோடி சூரியப் பிரகாசமான சக்கரம் ஒன்று. அது இருப்பது திருமாலின் கையில். அதை அவர் ஒரு சுழற்றுச் சுழற்றி எறிந்தார் என்றும், வேகமாக ஓடிய சக்கரத்தின் நிழல் வட்டங்களே காலம், இடம் என்றும் சொல்லி இருக்கிறது.

எல்லாம் இறைவன் மயம் என்கிற உண்மை ஒன்று. அதை விதவிதமாக அனுபவித்து விதவிதமாகச் சொல்லி இருக்கிறது.

இனி ஒரு புல்லைக் எடுத்துக் கொண்டாலே போதும். அதனுள் நடக்கிற காரியங்கள் பல. அதே போல ஒரு பசுவின் மடியை எடுத்துக்கொண்டால் அதனுள் நடக்கிற காரியங்களைச் சொல்லி முடியாது. ஏன் நம் உடம்புக்குள்ளும் உணர்ச்சிக்குள்ளும் கணத்துக்குக் கணம் நடக்கிற அற்புதங்கள் எத்தனை? அதிசயங் கள்தான் எத்தனை.

ஏதாவது ஒன்று கூட நம் கண்ணில் படுகிறதா? இல்லை புத்திக்குத்தான் எட்டுகிறதா?

இந்த லட்சணத்தில் அண்டத்தின் நிலை என்ன, அகண்டத்தில் நடப்பவை என்னென்ன? பூமியின் காரியம், சமுத்திரத்தின் செயல் திறன், சூரியனின் ஆளுமை ஆகியவை பற்றி எல்லாம் கண்டுணர முடியுமா?

ஆனாலும் இறைவனுடைய அருள் இருந்தால்போதும் அணுவுக்கு உள்ளே. நடக்கிற காரியமும் தெரியும். அண்ட பகிரண்டங்களில் நடக்கிற காரியமும் தெரியும். ஏன் அண்ட பகிரண்டங்களுக்கு அப்பால் நடக்கிற காரியங்களும் தெரியும்.

ஸ்ரீமந் நாராயண மூர்த்தியின் கையில் உள்ள சக்கரம் அம்சம் அம்சமாக ஒவ்வொன்றையும் நமக்குக் காட்டி விடும்.

கோடி சூரியப் பிரகாசமான அந்த அற்புதச் சக்கரம் சூரியன், பூமி, சமுத்திரம், புல் பூண்டு எல்லாவற்றையும் திருவிளக்குகளாக ஏற்றிப் பிரகாசிக்க வைத்துவிடும்.

நாம் வாழும் இந்த மாபெரும் உலகத்தையை ஒரு அகல் விளக்காக ஏற்றி ஒளிரவிடும். சமுத்திரமே அந்த அகல் விளக்குக்கு நெய்யாக உதவுவது தெரியும்.

சூரிய பகவானையே அந்த விளக்கின் சுடராக ஏற்றிவைத்து விடும் கருணைமயமான அந்தச் சக்கரம்.

சக்கரத்தைக் கையில் வைத்திருக்கும் திருமால்தான் சகல லோகங்களுக்கும் சக்கரவர்த்தி.

கருணைக் கடலாகிய அந்த ராஜாதி ராஜனுக்குப் பாசுரங்களால் ஆகிய மாலையைச் சூட்டுகிறேன் என்கிறார் ஆழ்வார்.

இனிப் பாடல் -

*"வையம் தகளியா*
*வார்கட லேநெய்யா*
*வெய்ய கதிரோன்*
*விளக்காகச் - செய்யும்*
*சுடராழி யானுக்கே*
*சூட்டினன்சொல் மாலை;*
*இடராழி நீங்கிடுமே"*
*என்று.*

(வையம் - உலகம், தகழி - அகல், கதிரோன் - சூரியன். விளக்காக - தீச்சுடராக. செய்யும் சுடர் ஆழியானுக்கு - இப்படி எல்லாவற்றையும் விளக்கிக் காட்டும் சக்கரத்தை உடைய பெருமானுக்கு. சொல்மாலை - பாசுரம், இடர் ஆழி - துன்பம். நீங்கிடும் என்று - இனித்தலை நீட்டாது, இது உறுதி.)

(**குறிப்பு :** நாம் மட்டுமல்ல நம்முடைய யோசனை புத்திகளில் எல்லாமே அவன் இருக்கின்றான்.)

(2)

எல்லாம் இறைவனுடைய காரியம் என்பதுதான் உண்மை. ஆனால் இந்த உண்மையை உணரவிடாதபடி ஆணவம் நம்மை அப்படியும் இப்படியும் இழுத்துக் கொண்டு போய்விடுகிறது.

உடம்போடு ஒட்டிப் பிறந்திருக்கிறோம் நாம். உடம்பு இல்லாமல் ஒன்றும் செய்ய முடியாது நம்மால்.

இந்த சூட்சமத்தை எப்படியோ தெரிந்து கொண்டுவிட்டது ஆணவம். அதனால் உடம்பை வெகு தந்திரமாகக் கைக்குள் போட்டு வைத்துக் கொண்டது ஆணவம்.

மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புலன்களுக்கும் லஞ்சம் கொடுப்பது போல அப்போதைக்கப்போது ருசியாக எதையோ போடுகிறது ஆணவம்.

அதனால் ஆணவத்தின் பின்னே சதா ஓடிக் கொண்டிருக் கின்றன புலன்கள்.

அப்பாவி உடம்பால் என்ன செய்ய முடியும்?

அதனால் ஞான விளக்கு எரிந்து கொண்டிருந்தாலும் குருடர்களாக இருக்கிறோம் நாம்.

ஒளி நம் மேல் விழவேண்டும். அப்படியானால் நம்முடைய பிறவர்த்தி ஒன்றும் இல்லை என்று விட்டுவிட வேண்டும்.

எல்லாம் இறைவனுடைய லீலா விநோதந்தான் என்று அதன் பக்கம் மனத்தைத் திருப்பி விடவேண்டும்.

ஒருமுனைப் பாட்டோடு உண்மையினிடத்து மனமானது காலூன்றி நிற்க நிற்க ஐம்புலன்களும் ஒழுங்குக்கு வந்துவிடும். பிறகு வாலாட்டாது.

பிறகு தகதக என்று பிரகாசிக்கும் உண்மை.

ஜனகாதி முனிவர்களுக்கு ஆலமர நிழலில் அமர்ந்து தத்துவ விளக்கம் கொடுத்தவர் சிவபெருமான். அவர்தான் ஆலகால விஷத்தை (ஆலம்) எடுத்து வாயில் போட்டார். அது வயிற்றுக்குள் இறங்கவில்லை. கழுத்தோடு (கண்டத்தோடுகண்டமாய்) தங்கி விட்டது. அதனால் அவன் ஆலம் அமர் கண்டனாகிவிட்டான்; நீலகண்டன் என்றே பெயர் வந்துவிட்டது.

அந்தச் சிவபெருமானே (ஐம்) பொறிகளாகிய கதவுகளைச் சார்த்தித் தாளிட்டு விட்டானாம். அப்படி ஒடுங்கி தியானித்ததில் நின்ற காரணமாகத்தான் கடவுள் தத்துவத்தை (திருமாலை) உணர முடிந்ததாம்.

சகல புவனங்களுக்கும் நெறிமுறைகளை வகுத்தளிக்கும் பெருமானுடைய திருவருளைச் சிவபெருமானே தவம் பண்ணித் தான் கண்டுணர முடிகிறது. அப்படியானால் நம்முடைய நிலையைப் பற்றி என்ன சொல்ல.

***''நெறிவாசல் தானேயாய்***
***நின்றானை; ஐந்து***
***பொறிவாசல் போர்க்கதவம்***
***சார்த்தி - அறிவானாம்!***
***ஆலமர நீழல்***
***அறம்நால்வர்க்கு அன்றுரைத்த***
***ஆலம் அமர் கண்டத்***
***தவன்''***

**(நெறிவாசல் தானேயாய் நின்றான் - மகாவிஷ்ணு. சகல தத்துவங்களுக்கும் நெறிமுறை அவன்தான். பொறிவாசல் போர்க்கதவம் - ஐம்புலன்களின் குறும்புக்கார வழிகளை, சார்த்தி - மூடி,**

ஆலம் அமர்கண்டத்தவன் அறிவான் ஆம் - நீலகண்ட மூர்த்தியே தெரிய முடிந்தது. எதை? எல்லாம் இறைவன் மயம் என்கிற உண்மையை).

(3)

இரும்புக்கு அடிப்படையாக இருக்கிற அணுதான் தங்கத்துக்கும் அடிப்படையாக இருக்கிறது. இன்னும் கொஞ்சம் உள்ளே இறங்கிப் பார்த்தால் அணுக்களும் சக்தி மயம். ஒரே சக்தி மயம்.

அதாவது கடவுள் தத்துவம் என்கிற ஒன்றுதான், அவன் ஒருவனே சர்வ வியாபகமாய் எழுந்தருளி நிற்பான். அந்தத் திவ்ய நெறியில் பேதங்கள் எல்லாம் கரைந்து விடும்.

பிறகு என்ன? அவனைத் தொட்டுத் தொட்டு வணங்க வேண்டியதுதான் பாடிப்பாடிப் பரவ வேண்டியதுதான்.

அவன் மட்டுமே இருக்கிறான் என்றால் நமக்கு வேறு எதன்மேல் நினைப்பு வரும்?

இனிப் பாடல் -

*"வாய்அவனை அல்லது*
*வாழ்த்தாது; கை உலகம்*
*தாயவனை அல்லது*
*தாம்தொழா; - பேய்முலைநஞ்சு*
*ஊணாக உண்டான்*
*உருவொடு பேர் அல்லால்*
*காணா கண், கேளா*
*செவி"*

(உலகம்தாயவன் - திருமால். வாமனாவதாரத்தில் மூவுலகங் களையும் தாவி அளந்தவன். தொழா - கூப்பி வணங்காது. பேய்முலைநஞ்சு ஊண் ஆக உண்டான் - கம்சனுடைய ஏவலால் நஞ்சுமயமான பாலூட்ட வந்தாள் பூதகி. ஆனால் கண்ணனை அந்த நஞ்சு ஒன்றும் செய்யவில்லை. அமிர்தத்தை ஒட்டி உறிஞ்சி எடுத்து விட்டான். அவள் கதிதான் அதோ கதி. ஊண் - உணவு. உருவு - தோற்றம். பேர் - புகழ்.)

(4)

புலன்களைக் கட்டுப்படுத்துவது என்பது, அதாவது நம்முடைய கட்டளைகளை ஏற்று அவற்றைச் செயல்பட வைப்பது என்பது எளிதான காரியம் இல்லை. கொஞ்சம் அதில் இறங்கிப்

பார்க்கிறவர்களுக்குத் தெரியும். கட்டுப்படுவதுபோல அவை நடிக்குமே தவிர கட்டுப்படுவது இல்லை' என்பது.

இனி இன்னொரு தொல்லை. படாத பாடுபட்டுச் சிலர் புலன்களை வசக்கிவிடுவார்கள். அடிபட்ட புலிபோல அவை பம்மும். ஆனால் நேரம் பார்த்து மிகக் கொடூரமாகப் பாய்ந்து குதறி விடும்.

மேலும் புலன்களை அடக்குவதன் மூலம் உடம்பை வில்லாக வளைக்கலாம். சுக்காக உலர்த்தலாம். வெண்ணிற முடியைக் கூட கருகருவென்று பளபளக்க வைத்து விடலாம். சொக்கத் தங்கமாக மேனி ஜொலிக்கும்.

அதனாலெல்லாம் ஞானம் வந்துவிடுமா என்ன. அதை மட்டும் வைத்து இறைவனுடைய சந்நிதானத்தை நெருங்க முடியுமா?

ஆணவம் கரைந்தால்தான் இறைவனுடைய சந்நிதானத்தில் ஒவ்வொரு படியாக ஏற முடியும்.

எத்தனை கோடி ஆண்டுகளாய் உரம் பெற்று உரம் பெற்று - தடித்துத் தடித்து வந்திருக்கிறது ஆணவம். வேப்பங்குழை வைத்து அடித்தெல்லாம் அதை விரட்டிவிட முடியாது.

பட்டம் பதவி சொத்துச் சுகத்தை விட்டெறிந்தவர்களைக் கூடக் காலைவாரி விட்டுவிடும் அந்த ஆணவம்.

நோய்வாய்ப்பட்டுத் துடிக்கும் தாய், தந்தையர்களைக் கொண்டு வந்து கண்முன் நிறுத்தும் அந்த ஆணவம், கண்ணீரும் கம்பலையுமாக மனைவி மக்களைக் கதற வைக்கும். கதறுகிற கோலத்தோடு கண் முன் வந்து நிற்பார்கள் அவர்கள். அப்படி மாயா ஜாலம் மகேந்திர ஜாலம் பண்ணிவிடும் ஆணவம்.

ஆணவத்தை அடக்கி அதன் மேலேயே குதிரை ஏறிவிட்டால் பிறகு சுகமாய் இருக்கும் சவாரி.

இறைவனை நினைத்த நேரம் பார்க்கலாம்.

ஆனால் ஒன்று! சோதனைகளை எல்லாம் தாண்டித் தெய்வ அருள் சித்தித்து விட்டால் போதும், அப்புறம் நம்மை விட்டுப் பெருமாள் அக்கம் பக்கம் நகர மாட்டார். நம் கூடவே இருப்பார். நம் நினைப்பில் அப்படிக் கரைந்து கலந்து விடுவார்.

கொஞ்சம் போய்விட்டு வாரும். எனக்கு வேறு வேலை இருக்கிறது என்றாலும் நகர மாட்டார்.

தாயின் மனசை விட்டுக் குழந்தை அகலுமா? சமையல்

பண்ணுகிற பொழுதும், கோவிலுக்குப் போகிற பொழுதும், தோழிமார்களுடன் பேசுகிற பொழுதும் குழந்தையானது தாயின் உணர்ச்சியோடு உணர்ச்சியாகச் சேர்ந்தே இருக்கும்.

இது தெரியாத பக்கத்து வீட்டுக்காரி, ''என்னடியம்மா இது! விழுந்து விழுந்து தோசைக்கு ஆட்டிக் கொண்டே இருக்கிறாயே? பிள்ளையை மறந்து விட்டாயா?'' என்றால் அவளுக்கு எப்படி இருக்கும். ''அட பைத்தியமே!'' என்று சிரிப்பாள்.

இனி பொய்கை ஆழ்வார் பரம பக்தர், பரம ஞானி. இறைவனோடு சதா ஒன்றி நிற்கும் யோகி. ஆனாலும் புஷ்பங் களைப் பறிப்பார். மாலையாகத் தொடுப்பார். பக்தர்களுடன் சேர்ந்து தத்துவ விசாரணை நடத்துவார். குளிப்பார்; சாப்பிடுவார்; தூங்குவார்; எழுதுவார்; கோவிலுக்குப் போவார்; நந்தவனத்தைக் கொத்திக் கொடுப்பார். ஆனாலும் இறைவன் அவரை விட்டு விலக மாட்டான்.

அப்படி இருக்க அவரிடமே என்ன இதெல்லாம்? பெரு மாளை மறந்து வீட்டீர்களே என்று கேட்கலாமா? ஆனாலும் சில அசடுகள் கேட்டுவிடும்.

அப்படிச் சில அசடுகள் கேட்பதாக ஆழ்வாருக்கு ஒரு பகற்கனவு. பக்தர்கள் உள்ளத்தில் பகற்கனவுகள் வந்து கொண்டே இருக்கும்.

இனி, கேள்வி கேட்டவர்களுக்கு எப்படிச் சொல்கிறார் பதில் என்று பார்ப்போம்.

*"என்றும் மறந்தறியேன்*
*ஏமநீர் வண்ணனையான்;*
*இன்று மறப்பேனோ*
*ஏழைகாள்! அன்று*
*கருவரங்கத்(து) உள்கிடந்து*
*கைதொழுதேன் கண்டீர்*
*திருவரங்கம் மேயான்*
*திசை"*

**(ஏமநீர் வண்ணன் - கடல்போன்ற நீலநிறம் உடையவன். ஏமம் - உலகைப் பாதுகாத்தல். கருஅரங்கம் - கருப்பை, திருவரங்கம் - ஸ்ரீரங்கம். திசை - அவன் எழுந்தருளிக் காட்சி கொடுத்த பாவனையை - அதாவது நிலையை.)**

வடிகட்டின முட்டாள்களே! (ஏழைகாள்) என்று ஹாஸ்ய முழக்கத்தோடு வருகிறது பதில்.

என் தாயின் கருவில் கிடந்து உருவாகிற காலத்திலேயே அவன் என்முன் வந்து நின்றான். அவனைப் பார்த்து உருகினேன். கரைந்தேன். ''எம் பெருமானே! பெருமானே!'' என்று பரவசப் பட்டேன். இரண்டு கைகளையும் தலைக்குமேல் தூக்கிப் பிடித்து மாறிமாறிக் கும்பிட்டேன்.

இதெல்லாம் உங்களுக்கு எப்படிப் புரியும்? (கண்டீர்) என்று கை கொட்டிச் சிரிக்கிறார் ஆழ்வார்.

(5)

எதையும் நாம் புத்தங்களை வைத்தே பார்க்கிறோம். புளிய மரத்தில் புளியம் பழம் காய்க்கும் என்பது நம்மோடு ஒட்டிய விஷயந்தான். ஆனாலும் அதையும் புத்தகங்களை வைத்துப் பாடமாக எடுத்துப் படித்துத் தீர்க்க வேண்டி இருக்கிறது.

புத்தகம், பாடம் என்று வந்துவிட்டால் வாத்தியார் வந்து விடுவார். பரீட்சை, மதிப்பெண், வெற்றி, தோல்வி எல்லாம் வந்துவிடும்.

பிறகு புளிய மரம், புளியம் பழம், புளிப்பு எல்லாம் மறைந்து விடும். உத்யோகம், சம்பளம் என்று ஓடும் வாழ்க்கை.

ஆனால் ஞானிகள் காரியம் வேறு. எதையும் அவர்கள் நேருக்கு நேராகப் பார்ப்பார்கள். பார்க்கப் பார்க்க ஒளி உண்டாகும். அந்த ஒளியில் வெளிப்புறக் காட்சிகள் மட்டுமா? உள்புற நிகழ்ச்சிகள் கூடத் தகதக என்று ஜொலிக்கும்.

அந்தக் காட்சியைப் பார்க்கப் பார்க்கப் பரவசம் அடை வார்கள். அப்படியே தியான நிலைக்கு ஆளாகிவிடுவார்கள்.

உண்மை என்னும் சந்நிதானத்தின் ஒவ்வொரு பகுதியும் அவர்கள் முன் சுடர்விட்டுப் பிரகாசிக்கும்.

ஞானிகளை வான்வர், வானோர் என்று சொல்வது மரபு.

இனி, உலகியலோடு ஒட்டிய காரியங்களில் சில சமயம் ஞானிகள் ஈடுபட நேரிடும் குளித்தல், வேட்டி துவைத்தல், உண்ணல், அன்பர்களை வரவேற்று உபசரித்தல், இப்படி எத்தனையோ உலகியல் காரியங்கள்.

ஈடுபடும்போது அவற்றில் மனம் ஒன்றியே ஈடுபடுவார்கள்.

அப்படி உலகியலோடு ஒன்றிச் செயல்படுகிற்பொழுது ஏற்கனவே கண்டு அனுபவித்த உண்மையானது பளிச்சென்று ஞாபகத்துக்கு வரும். மின்வெட்டுப் போல ஒளி வீசும். அவ்வளவு

தான். பிசைந்த சாதத்தை அப்படியே தட்டத்தில் போட்டுவிட்டுக் கண்களை மூடுவார்கள். காட்சிகள் ஒவ்வொன்றாக - அம்சம் அம்சமாக வந்து நிற்கும்.

அவற்றை அனுபவிக்க அனுபவிக்க எல்லாம் இறைவன் மயம் என்பது விளங்கும். பிறகு நான் ஏது? என் செயல் என்று ஏது? நல்வினை, தீவினை என்றெல்லாம் எப்படித் தலை காட்டும்.

வினைச் சுடரை - அதாவது ஆணவத் தீயையே சுட்டுப் பொசுக்கிவிடும் இந்த அருள் ஒளி.

ஆனால் வேறு காரியத்தில் ஈடுபட்டுத் திளைக்கிற இதயத்தின் பொறியை யார் தட்டி விடுவது.

இறைவன்தான் அதைச் செய்ய வேண்டும். இறைவன் எழுந்தருளி சேவை சாதிக்கின்ற திருவேங்கடமலைதான் அதைச் செய்ய வேண்டும்.

இனிப் பாடல் -

*"எழுவார் விடைகொள்வார்*
*ஈன்துழா யானை*
*வழுவா வகைநினைந்து*
*வைகல் - தொழுவார்*
*வினைச்சுடரை நந்துவிக்கும்*
*வேங்கடமே; வானோர்*
*மனச்சுடரைத் தூண்டும்*
*மலை"*

(எழுவார் - சட்டென்று எழுந்துவிடுவார்கள். விடை கொள்வார் - ஈடுபட்ட செயலுக்கு விடை கொடுத்து விடுவார்கள். ஈன்துழா யானை - துளப மாலை அணிந்த திருமாலை. வழுவாவகை நினைந்து - முறைப்படி. வைகல் - தினந்தோறும். தொழுவார் - கண்டு தொழுபவர்களின். வினைச்சுடரை நந்துவிக்கும் - ஆணவத்தைக் கரைத்துவிடும். எது? திருவேங்கடமலை. வானோர் - ஞானிகள்.)

(6)

ஒருவருடன் பழகுவதுவரைதான் கஷ்டம். நம்மில் கொஞ்சம் உயர்ந்தவருடன் பழக நேர்ந்தால் கஷ்டம் அதிகம். அவரைப் பார்த்தாலே ஒரு பயம் வரும். கூச்சம் வரும். அவரை ஒட்டி நிற்க தயக்கம் உண்டாகும். ஏதோ ஒன்றைப் பற்றி விசாரிக்கிறார். பதிலே நம் வாயிலிருந்து வராது. வந்தாலும் தடுமாறித் தடுமாறி வரும்.

அசட்டுத்தனமாக அவர் ஒன்றைச் சொல்கிறார் என்று வைத்துக் கொள்வோம். "நீங்கள் சொல்வது தவறு" என்று எடுத்துச் சொல்ல முடியுமா?

கோயில் மாடு கொம்பை ஆட்டுவது போல நாம் தலையை ஆட்டிவிட்டுப் போக வேண்டியதுதான்.

ஆனால் உறவு வளர வளரக் கூச்சம் முதலிய அம்சங்கள் ஓடிவிடும். அவருக்கும் நமக்கும் பேச்சு சரளமாக வரும்.

கேலி, கிண்டல், நையாண்டி கூட பேச்சில் ஊடாடும். அவருடைய வசப்பிசகான செயல்களை - பேச்சை அவரிடம் சொல்லிச் சொல்லி விளையாட முடியும்.

இன்றும் நாம் பார்க்கிற உலகியல்தான் இது. பொய்கை ஆழ்வாருக்கும் எம்பெருமானுக்கும் உறவில் நெருக்கம் உண்டாகி விட்டது. அதனால் ஆழ்வாரிடமிருந்து பேச்சும் தாராளமாக வருகிறது.

''உம்முடைய ஜம்பம் இனி என்னிடம் எடுபடாது. ஆயர்பாடியில் வெண்ணெய் திருடி உண்ட ஆசாமிதானே நீர்! அதற்காக தயிர் கடையும் தாம்பால் அவள் விளாச விளாச அடிபட்டவர்தானே நீர்!

அடிபட்ட தழும்பு அப்படியே கிடக்கத்தானே செய்கிறது. இது எனக்கு மட்டுமா தெரியும்? ஈரேழு பதினான்கு லோகத்தில் உள்ளவர்களுக்கும் உம்முடைய வண்டவாளம் தெரியும்! அதனால் கொஞ்சம் அடக்கியே வாசியும்'' என்கிறார் ஆழ்வார்.

''அறியும் உலகெல்லாம்
யானேயும் அல்லேன்
பொறிகொள் சிறைஉவணம்
ஊர்ந்தாய்! - வெறிகொள்
காம்பேய்மென் தோளி
கடைவெண்ணெய் உண்டாயை
தாம்புகொண்டு ஆர்த்த
தழும்பு''

(யானேயும் அல்லேன் - நான் மட்டும் இல்லை. உலகெல்லாம் அறியும் - உம்முடைய காரியம் எல்லோருக்கும் வெட்ட வெளிச்சம். பொறிகொள் சிறைஉவணம் ஊர்ந்தாய் - சிறகுகளில் புள்ளிகள் விழுந்திருக்கும் கருடன்மேல் ஏறி பவனி வரும் பெருமானே! உவணம் - கருடன். சிறை - இறகு.)

வெறிகொள் காம்பேய்மென் தோளி - மணங்கமழும் மூங்கில் போன்ற வழுவழுவென்ற தோளோடு கூடிய யசோதை. தாம்பு

கொண்டு ஆர்த்த தழும்பு - தாம்பைக் கையில் பிடித்துக் கொண்டு உன்னை விரட்டி விரட்ட அடித்தாள். அந்த அடிபட்ட தழும்பு.

அற்புதமான பாடல்.

(7)

கடவுளை எங்கோ தூரத்தில் உட்காரவைத்து விட்டு நாம் அது வேண்டும் இது வேண்டும் என்று மனுப்போடுவதில் பக்தி எப்படி வரும்?

ஆழ்வாரைப் போல இறைவனைக் கட்டிப் பிடித்து உருள வேண்டும். உறவு வளர வளரத்தான் பேதம் விலகும். ஆனந்தம் பொங்கிப் பொங்கி வழியும்.

உண்மையானது பார்ப்பதற்கு மொட்டையாகத் தெரியும். குருடன் யானையைத் தடவிப் பார்த்த கதையாய்ப் போய் விடும் உண்மை.

ஆனால் உறவு பெருகப் பெருக உண்மையானது இதழ் இதழாக விரியும். பல நாடிகள் அதில் பேசும். ஒவ்வொரு நாடியிலும் தொனி தனித்தனியாக நிற்கும். நரம்புகள் பல பல கிளைத்து ஓடுவது தெரியும். அவ்வளவிலும் ரத்த ஓட்டந்தான், உணர்ச்சிப் பிரவாகந்தான்.

இனி திருப்பதிக்குப் போகிறோம். பெருமாளைச் சேவிக்கிறோம். ''அடேயப்பா! நாமம் எவ்வளவு பெரிதாக இருக்கிறது பெருமானுக்கு!'' என்று சொல்லிவிட்டால் போதுமா?

அதில் என்ன உண்மை இருக்கிறது?

நகைகள், வைர நகைகள் ஒவ்வொன்றையும் பட்டியல் போட்டே காட்டிவிடுகிறார் ஒருவர்!

பெருமாளைக் கண்டுவிட்டார் அவர் என்று சொல்லிவிட முடியுமா?

நகைக்குப் பின்னால் - நாமத்துக்குப் பின்னால் - உயர்ந்து நிற்கும் மூர்த்தத்துக்குப் பின்னால் வேறு ஒன்று இருக்கிறது.

அதுதான் உண்மை. அதைப் பார்க்க வேண்டும். அந்த உண்மையைப் பார்ப்பதற்கு மூர்த்தி சாதனமாக இருக்கலாம்.

ஆனால் பார்வை அதில் விழவேண்டும்.

அவ்வளவுதான்! எல்லாம் அவனுடைய திருவிளையாடல் என்பது நேருக்கு நேராகத் தெரியும்.

தெரியத் தெரிய உறவு ஏற்படும். அந்த ஒளியில்தான் அவன் விளையாட்டில் உள்ள பாய்ச்சல், துள்ளல், ஆவேசம், குதிப்பு ஒவ்வொன்றாக விளங்கும்.

ஆழ்வார் அப்படி நெருங்கி உறவாடுகிறவர். அதனால் பெருமானுடைய காரியங்கள் ஒவ்வொன்றையும் பார்க்க முடிகிறது. எப்படி?

"மலையால் குடைகவித்து,
மாவாய் பிளந்து,
சிலையால் மராமரம்ஏழ்
செற்று - கொலையானை
போர்க்கோடு ஒசித்தனவும்
பூங்குருந்தம் சாயத்தனவும்
கார்க்கோடு பற்றியான் கை
கை"

(மலையால் குடைகவித்து - இந்திரன் ஏவிவிட்ட பிரளயகால மழையில் பசுக்களைக் காப்பாற்ற மலையையே குடையாகத் தூக்கிப் பிடித்தான் திருமால். சிலை - வில். போர்க்கோடு - வைரம் பாய்ந்த கூர்மையான யானைக் கொம்புகளை. ஒசித்தல் - ஒடித்து முறித்தல் குருந்தம் சாய்த்துதவும் - குருந்தமரத்தை ஒரே மிதியில் தலைகுப்புற விழவைத்தான். யார்?

கார்க்கோடு பற்றியான் - மழைக்காலத்து நீர்த்துளி போல அம்புகளைப் பொழியும் வில்லேந்திய பெருமான். கை - அவன் கை செய்த காரியங்களில் இவை சில.)

(8)

பெருமானின் கரங்களைப் பார்த்தாலே போதும். அந்தக் கரங்கள் செய்கிற அற்புதங்கள் அடுக்கடுக்காய் வருகின்றன. மலைமலையாய் வந்து நிற்கின்றன.

இவற்றைப் பார்த்தால் பிறகு கால் செய்கிற காரியம், கண் செய்கிற காரியம் ஒவ்வொன்றாய் வரும். உறவு பெருகும். பக்தி ஊறும்.

இதை விட்டுவிட்டு பட்டை நாமம் சுத்தத் தங்கமா? கலப்படமா? பதித்த வைரம் எப்படி என்று கணக்குப் போட்டால் பக்தி எப்படி வரும்? கிராதகப் புத்திதான் வரும்.

உண்மையின் மாற்று உறவில் ஏற ஏற விவரங்கள் ஒவ்வொன்

றாய்க் கண்முன் வந்து நிற்கும். பார்க்கப் பார்க்கக் கண்ணுக்குக் குளுமை. கருத்துக்கும் குளுமை. பிறகு சும்மா இருக்காது கை.

பெருமானின் தோள் மேலேயே போடத் தோன்றும் கையை. அப்படி ஒரு நெருக்கம் உண்டாகிவிடும்.

இனி திருப்பதியில் நின்ற கோலத்தில் ஆனந்த தரிசனம் கொடுக்கிறான் பெருமான். திருப்பாற்கடலிலோ ஆதிசேஷனை உதறி விரித்து அதில் படுத்து மிதக்கிறான்.

இப்படி அமைதியாகப் படுத்திருக்கிறவன். என்னென்ன செய்து விடுகிறான்?

ஓலைப் பாயைச் சுருட்டி மடக்கியதுபோல் பூமியையே சுருட்டி மடிக்கிறான் அரங்கன் ஒருவன்

அப்படியே பூமிப் பொட்டலத்தைத் தூக்கி கொண்டு கடலில் ஒளித்து வைத்து விட்டான் அரங்கன்.

விடுவாரா பெருமான்? சமுத்திரத்துள் பாய்ந்து பூமியைச் செந்தூக்காகத் தூக்கி வந்துவிட்டார். படுக்கையை உதறி விரிப்பது போல விரித்துவிட்டார் பூமியை.

ஏற்கனவே மலையை எடுத்துக் குடையாகப் பிடித்தார். கம்சனுடைய குடல் பதற அவன் வஞ்சனைகளைப் பொடிப் பொடியாக உதிர்த்துவிட்டார்.

திருப்பதி போனால் பெருமாளை சேவித்தால் இவ்வளவும் ஞாபகத்துக்கு வரவேண்டும்.

எப்படி வரவேண்டும்.

"இடந்தது பூமி,
எடுத்தது குன்றம்
கடந்தது கஞ்சனைமுன்
அஞ்ச - கிடந்ததுவும்
நீரோத மாகடலே;
நின்றதுவும் வேங்கடமே!
பேரோத வண்ணர்
பெரிது"

(இடந்தது - தோண்டி எடுத்தது. கிடந்தது - படுத்துக் கிடப்பதோ நீரோத மாகடலே - அலைகள் எவ்விக் குதிக்கும் திருப்பாற்கடல். பேர் ஓத வண்ணர் பெரிது - பெரிய சமுத்திரம் போன்ற நீலமேக சாமள வண்ணரின் காரியம் இப்படி!)

(9)

பூமிக்கும் சூரியனுக்கும் உள்ள தூரம் ஒன்பதே முக்கால் கோடி மைல். இவ்வளவு தூரத்தையும் எட்டேமுக்கால் நிமிடங்களில் ஒளியானது பாய்ந்து வந்து விடுகிறது.

அப்படியானால் வினாடிக்கு லட்சத்து எண்பத்து நான்காயிரம் மைல் வேகம். நிமிஷத்துக்கு ஒரு கோடியே பத்து லட்சம் மைல். ஒரு மணி நேரத்தில் ஒளியானது கடந்து செல்லும் தூரம் அறுபத்து ஆறுகோடி மைல். ஒருநாளில் கிட்டதட்ட ஆயிரத்து அறுநூறு கோடி மைல்.

இனி ஒரு வருடத்தில் ஒளி பாய்ந்து செல்லும் தூரம் ஐந்து லட்சம் கோடி மைலுக்கும் அதிகம்.

கணக்கு மண்டையைச் சுற்றுகிறது இல்லையா? விதரணை உள்ளவர்களைக் கணக்குக் குழப்பும். அது இல்லாதவர்களை இடித்து வைத்துப் புளியாக உட்கார வைத்துவிடும்.

இரவில் மேலே ஏறிட்டுப் பார்த்தால் கோடான கோடி நட்சத்திரங்கள் தெரிகின்றன. ஏதோ பக்கத்தில் நின்று கண் சிமிட்டுவது போலத் தோன்றலாம். ஒன்றுக்கு ஒன்று கைப் பிடி தூரம் போலவும் தெரியலாம்.

அது உண்மையில்லை. நட்சத்திரங்களுக்கும் நமக்கும் உள்ள தூரத்தை வெறும் கணித வாய்ப்பாட்டால் காட்ட முடியாது. பிறகு எப்படி காட்டுவது?

ஒரு வருடத்தில் ஐந்து லட்சம் கோடி மைல் ஒளியின் வேகம். ஐந்து லட்சம் கோடி மைல் தூரத்தை ஓர் ஒளி ஆண்டு என்று வைத்துக் கொள்ளவேண்டும்.

அப்படி வைத்துப் பார்க்கிறபொழுது

பூமிக்கு வெகு சமீபத்தில் உள்ள நட்சத்திரத்தின் தூரம் இரண்டாயிரம் ஒளி ஆண்டு. அடுத்த நட்சத்திரமோ இரண்டு லட்சம் ஒளி ஆண்டு தூரத்தில் இருக்கிறது.

பல நட்சத்திரங்களின் ஒளி இன்னமும் பூமிக்கு வந்து சேரவில்லை. அப்படி விரிந்து பரந்து சிதறிக் கிடக்கின்றன நட்சத்திரங்கள்.

இனி, சில சமயம் மேலே அண்ணாந்து பார்த்தால் ஒரு பெரிய நட்சத்திரக் கூட்டம் பூமியையே சுற்றி வளைத்துப் படுத்திருப்பது பாலத் தெரியும்.

இந்தக் கூட்டத்தில் உள்ள நட்சத்திரங்கள் பல பல கோடிகள். கோடான கோடி ஜாதி முத்துகளைக் குவித்து வைத்தால் எப்படி ஒளி வீசும்? அப்படி ஒளி வீசும் இந்த நட்சத்திர வட்டம்.

பாற்கடலே வானவெளியில் படுத்திருப்பது போலத் தெரியும். பார்ப்பவர்களைப் பரவசப்படுத்தும் இது, மனிதனின் மூளைக் கொதிப்பையே ஆற்றிவிடும் இந்த ஒளிவட்டம். அவ்வளவு தூய்மை, அவ்வளவு குளுமை.

அது காரணமாகவோ என்னவோ இந்த நட்சத்திர வட்டத்தை ஆகாய கங்கை என்றனர். கோடி சூரியப் பிரகாசமான ஆதிசேஷன் (பாம்பு) என்றும், பாலாறு என்றும் குறிப்பிட்டனர். மேலை நாட்டாரும் பாலாறு என்னும் பொருளில் மில்க்கிவே என்று சொல்கின்றனர்.

நட்சத்திரங்களையே அளந்து காட்ட முடியவில்லை என்றால் சர்வ வியாபாகமான கடவுள் தத்துவத்தை எப்படிக் காட்டுவது? அளந்து காட்ட முடியுமா அதை?

அதனால் ஆகாய கங்கை என்னும் இந் நட்சத்திர வட்டத் தையே சிவபெருமான் காதில் தொங்கும் குண்டலந்தான் என்றும் பார்வதிக்குக் கையில் போடும் காப்பு என்றும் திருமால் பிடிக்கிற கைக்குடை என்றும் சொல்லிக் காட்டுவார்கள்.

ஆகாய கங்கை என்றாலும், ஆதிசேஷன் என்றாலும் ஒன்றுதான். இதைப் பாம்பாட்டிச் சித்தர் எப்படி உல்லாச விளையாட்டில் வைத்துச் சொல்கிறார் என்று பாருங்கள்.

"குற்றம் அற்ற சிவனுக்குக்
குண்டலம் ஆனாய்,
கூறுதிரு மாலுக்குக்
குடையும் ஆனாய்;
கற்றைக் குழல் பார்வதிக்குக்
கங்கணம் ஆனாய்
கரவாது நின்று சுழன்று
ஆடுபாம் பே"

இனி, இது பற்றி பொய்கை ஆழ்வார் அனுபவத்தை பார்ப்போம்.

பாற்கடலில் ஆதிசேஷ சயனத்தில் (நட்சத்திர வட்டப் படுத்திருக்கிறார்.

அப்பொழுது இந்த நட்சத்திர வட்டம் பூம்படுக்கை (மெத்தை). நடக்கும் போதோ இது குடை.

இனி, அவர் படுக்கையை விட்டு எழுந்து உட்கார நினைத்தால் இது சிம்மாசனமாக மாறிவிடும். கொஞ்ச தூரம் நடந்து வரலாமே என்று அவர் கிளம்பினால் பாதரட்சை ஆகிவிடும்.

(ஆதிசேஷ) மெத்தையில் படுத்து எம்பெருமான் யோக நித்திரை பண்ணுகிறபொழுது அவருக்கு வெளிச்சம் கொடுக்க விடி விளக்காக மாறுகிறது இந்த நட்சத்திர வட்டம்.

தம் அரையில் அவர் கட்டுகிற பீதாம்பரமும் இந்த ஆதிசேஷ வட்டந்தான். பாற்கடலில் அவர் பவனி வரவிரும்பினாலோ இது தெப்பமாக (போட் ஆக) மாறிவிடும்!

என்ன அதிசயம் இது என்று வியக்கிறார் ஆழ்வார்.

"சென்றால் குடையாம்,
இருந்தால்சிங் காசனமாம்,
நின்றால் மரவடியாம்,
நீள்கடலுள் - என்றும்
புணையாம், மணிவிளக்காம்,
பூம்பட்டாம், துஞ்சும்
அணையாம் திருமாற்(கு)
அரவு"

(சென்றால் - நடந்து சென்றால். சிங்காசனம் - சிம்மாசனம். மரவடி - பாதரட்சை. புணை - தெப்பம் (படகு). மணிவிளக்கு - வாடா விளக்கு. பூம்பட்டு - பீதாம்பரம். துஞ்சும் அணை - தூங்கும்போது மெத்தை. அரவு - ஆதிசேஷ வட்டம்.)

குறிப்பு : அற்புதமான பாட்டு. பாடிக் கொண்டே இருக்க வேண்டும். பாடப்பாட நாவில் தேனூறும். நம்மண்டைக்குள் கிடக்கிற குப்பை, கூளம், மட்டி, மடி எல்லாவற்றையும் கரைத்துவிடும். அந்த ஆனந்தத் தேன்.

நாம் மனுசர் ஆகிவிடுவோம். வேறு என்ன வேண்டும் நமக்கு?

எல்லையற்ற வியாபகத்தை இப்படித் தந்திரமாக எடுத்துக் காட்டினால்தான் பேரண்டமே கடவுளுக்குள் அடக்கம் என்பது விளங்கும்.

பேரண்டத்தின் ஒமூலையைக் கூட நம்மால் பார்க்க முடியாது.

கடுகளவே உள்ள அந்த மூலையில் கூட கோடான கோடி அண்டங்கள் தோன்றிக் கொண்டே இருக்கும். பிறகு சிறிது நிற்கும். பிறகு மாயமாய் மறையும்.

இதைப் பார்ப்பதற்கே எவ்வளவோ பண்பு வேண்டும்; ஒளி வேண்டும்.

மற்றவர்கள் எல்லாம் கூட்டல், வகுத்தல், கழித்தல், பெருக்கல் என்று கணக்குப் போடுவதோடு சரி.

*"பல்லா யிரம்கோடி அண்டம் பனிக்கடலுள்*
*நில்லாத மொக்குள்என நின்னுழையே தோன்றுமால்"*

என்று கம்பர் சொல்கிறார் என்றால், கணக்குப் போட்டா சொல்கிறார்.

சகல தடைகளையும் ஊடுருவிப் பாயும் ஞான விளக்கொளியில் அல்லவா பார்த்துச் சொல்கிறார்.

அதுவும் ஒரு சிறு மூலையைத்தான்.

(10)

பிரம்ம தேவன் மகாவிஷ்ணுவின் உந்திக் கமலத்தில்தான் பிறந்தான். அங்குதான் ஜாகை. ஆனாலும் திருமாலின் கோலம் முழுவதையும் பிரம்மனால் கூடப் பார்க்க முடியவில்லை. இந்த லட்சணத்தில் கணக்கைக் குறுக்கும் நெடுக்கும் போட்டு, "இதோ பார்! பேரண்ட நிலையை" என்று புலம்புவது கிறுக்குத்தனம்.

வார்த்தைகளை வைத்துச் சிலம்பாடுகிற கோமாளித்தனந் தான் அது.

இனிப் பாடல் -

*"பேரே வரப்பிதற்றல் அல்லால்என் பெம்மானை*
*ஆரே அறிவார்? அதுநிற்க! - நேரே*
*கடிக்கமலத்(து) உள்ளிருந்தும் காண்கிலான்! கண்ணன்*
*அடிக்கமலம் தன்னைஅயன்"*

(11)

ஒரு பெண் திருமணம் ஆவதற்குமுன் செல்வச் செருக்கில் தடபுடல் பண்ணலாம். அதட்டலாம். மிரட்டலாம். ஒரு வேலையும் செய்யாமல் சண்டித்தனம் பண்ணலாம்.

ஆனால் திருமணமாகிக் கணவனோடு குடித்தனம் நடத்த ஆரம்பித்துவிட்டால், மேலே குறிப்பிட்ட விஷயம் ஒவ்வொன்றும் முறிந்துவிடும்.

அடக்கம், மரியாதை, இன்சொல், பணிவு எல்லாம் வந்தவிடும்.

ஆனால் கணவன் பண்பாளனாக இருக்க வேண்டும். பண்பும் பெருந்தன்மையும் உடைய நாயகன், மனையாளை மதிக்க மதிக்க, பரிவுகாட்டப் பரிவுகாட்ட ஆலகால விஷம்கூட அமிர்தமாக மாறிவிடும்.

இனி, நாயகன் போக்கிரியாய் வாய்த்துவிட்டாலோ இவள் ஆட்டம் பேயாட்டந்தான். திமிரும் கொழுப்பும் ஒன்றுக்குப் பத்தாய், பத்துக்கு நூறாய்ப் பெருகிவிடும்.

பொய்கை ஆழ்வாருக்கு கிடைத்த நாயகனோ உத்தம நாயகன். கருணைக் கடல். அவருடைய அருளில் ஆழ்வார் கரைய வேண்டியதுதான். அதைவிட்டு விட்டு அங்கே இங்கே என்று மனம் ஓடுவதற்கு வாய்ப்பில்லை.

இதை ஆழ்வாரின் வாக்குமூலத்தை வைத்தே பார்ப்போம்.

**"நயவேன் பிறபொருளை நள்ளேன்கீ ழாரோடு;**
**உயவேன் உயர்ந்தவரோடு அல்லால்; - புயம்சால்**
**திருமாலை அல்லது தெய்வம்என்(று) ஏத்தேன்;**
**வரும் ஆறென் நம்மேல் வினை?"**

(பிறபொருளை - பட்டம், பதவி, பாராட்டு, வாழ்த்து முதலிய வற்றை. நயவேன் - விரும்பமாட்டேன். மட்டமான காரியம் அது. கீழாரோடு நள்ளேன் - யாராக இருந்தாலும் சரி, அற்பர்கள் என்றால் அவர்கள் நிற்கும் இடம் போகமாட்டேன். நள்ளேள் - நெருங்க மாட்டேன். உயர்ந்தவரோடு அல்லால் உயவேன் - பழக்கம் சான்றோர்களுடன்தான். மற்றவர்களை அணுகமாட்டேன். உயவேன் - அணு கேன். புயம்சால் திருமால் - தோளுக்கேற்ற கம்பீரமான திருமால்.)

வரும் ஆறுஎன் நம்மேல் வினை - பழக்க வழக்கத்தை இப்படி ஒழுங்கு பண்ணி வைத்த பிறகு துன்பம் ஏது? துயரம் ஏது? வரும் ஆறு ஏன்? அவை எப்படி நம்மைத் தேடி வரும்?

(12)

ஞானம் என்றால் அது ஒன்றுதான். அப்படி இப்படி என்று வேற்றுமைகள் அதில் இல்லை.

அரசியல், பொருளாதாரம், தொழில், ஆடம்பரம் என்று சமுதாயத்தில் சூடு பிடிக்கிற பொழுது ஞானம் விஞ்ஞானமாக மாறும்.

பண்பாடு, சீலம், சான்றாண்மை இவற்றையே குறியாக வைத்து நடக்கிறபொழுது ஞானம் மெய்ஞ்ஞானமாகப் பொலியும்.

விஞ்ஞானம் அறிவு ஒன்றையே நம்பும், மெய்ஞ்ஞானத்துக்கு உணர்ச்சிதான் ஒளி ஊற்று.

இனி, ஆதியில் எல்லாம் ஒரே ஜடதத்துவமாக இருந்தது. பிறகுதான் மெல்ல மெல்ல உயிர்த்தத்துவும் உண்டானது. அப்புறந்தான் உணர்ச்சிகள் நவநவமாகப் பூத்தன என்பது விஞ்ஞானம்.

மெய்ஞ்ஞானத்தின் பார்வை. ஆதியில் பேரண்டம் முழுவதும் ஒரே உணர்வு மயமாக இருந்தது. உணர்ச்சிமயமாக இல்லை. உணர்வு மயமாகவே இருந்தது.

காலம் கரையக் கரைய அது உயிர்த்தத்துவமாக விளைந்தது. உயிர் என்றால் உணச்சிமயந்தான்.

அப்புறந்தான் உயிரற்ற ஜடங்கள் தோன்றின. இப்படிப் பார்க்கிறது மெய்ஞ்ஞானம்.

இனி, உடம்பாகிய மாயைச் சிறையை விட்டுச் சுதந்திரமாக உலாவ உயிர் துடிக்கிறது. உணர்ச்சி மயமாகவே துடிக்கிறது.

''எப்பொழுது வருவான் எமதர்மன்? அவன் கையைப் பிடித்து ஓடிவிட!'' என்று தவிக்கிறது உயிர்.

ஆனால் மெய்யுணர்வோ உயிரை அமர்த்தி உட்காரவைத்து விடுகிறது. நிறுத்திவிட்டு சர்வமங்கள நித்திய கல்யாணனான விராட் புருஷன் எப்பொழுது வருவான்? அவனைப் பருகிப் பருகி அனுபவிக்க வேண்டுமே என்று தவிக்கிறது.

இந்த உண்மையை விளக்கக் கடலை நோக்கும் நதிகயையும், சூரிய பகவானின் அரவணைப்பை நோக்கும் தாமரை மலரையும் காட்டி ஒரு முனைப்படுத்துகிறார் பொய்கை ஆழ்வார்.

எப்படி

*பெயரும் கருங்கடலே நோக்கும்யாறு, ஒண்பூ*
*உயரும் கதிரவனை, நோக்கும் - உயிரும்*
*தருமனையே நோக்கும்செந் தாமரையாள் கேள்வான்*
*ஒருவனையே நோக்கும் உணர்வு*

அற்புதமான பாடல்

இனி, உண்மை ஒளிபெற்றவர்களுக்குத்தான் தெய்வ தரிசனம். மற்றவர்கள் தலை கீழாகத் தொங்கினாலும் பிரயோசனம் இல்லை.

(13)

''நீரில் நடப்பேன், நெருப்பில் குதிப்பேன், கையைப் பிசைந்தால் பவுனாகச் சொரிய வைப்பேன்'' இப்படி எல்லாம் அகட விகட சாமர்த்தியம் பண்ணுவது செப்படிவித்தை, மோசடி.

கடவுளுக்கும் இவர்களுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை.

அருள் பெற்ற ஞானிகள் கூட உணர்வு மயமாகத்தான் பார்க்க முடியும். முக்கண்ணால் பார்க்க முடியாது.

கண்ணெதிரே பேரண்டம் முழுவதும் காட்சிப் பொருளாக வந்து நிற்காது.

உணர்வில் உருகி உருகி மெய்யடியார்கள் கொட்டுகிற ஆனந்தக் கண்ணீர் இருக்கிறதே அதன் வழியாக சர்வலோக நாயகனான சங்கு சக்கரதாரியைப் பார்க்கலாம். அப்பொழுது நம்முடைய உள்ளமும் கண்ணீராய்க் கரைந்து பரவசத்தைக் கொட்டும்.

மற்றவர்களுக்கு என்ன தெரியும்?

**''உணர்வார்ஆர் உன்பெருமை ஊழிதோ(று) ஊழி,**

**உணர்வார்ஆர் உன்உருவம் தன்னை! - உணர்வார்ஆர்?**

**விண்ணகத்தாய்! மண்ணகத்தாய்! வேங்கடத்தாய்! நால்வேதப்**

**பண்ணகத்தாய்! நீகிடந்த பால்''.**

(ஊழிதோறும்) ஊழி உன் பெருமை உணர்வார் ஆர் - கோடான கோடி யுகங்கள் - யுகயுகாந்திரங்கள் உன்னிடம் தோன்றிக் கரைந்து விட்டன. அண்ட பிண்ட சராசரங்களாய் விளைந்துவிட்டாய் நீ. ஆனாலும் உன்னுடைய நிலை அப்படியே இருக்கிறது! அணுவளவு மாற்றமும் இல்லை. அன்டங்கள் தோன்றி மறைந்த காலத்தின் பெருமையை யாரால் கண்டு தெளிய முடியும்?

உன் உருவம் தன்னை உணர்வார் ஆர் - நவநவமான கோலங்களில் விளைந்த வண்ணம் இருக்கிறாய் நீ. அதனால் இடம் என்கிற தத்துவம் விரிந்து கொண்டே போகிறது. இதை யாரால் கண்டு களிக்க முடியும்.

விண்ணகத்தாய்... நீ கிடந்தபால் உணர்வார் ஆர் - சர்வ வியாபகமாய் நிறைந்திருக்கிறாய் நீ! ஆனந்தமயமாய்ப் பூத்துக்குலுங்கு கிறாய்! திருவிளையாடல் நடத்தி நீ அடையும் ஆனந்தம் யாருக்கு விளங்கும்?)

உன் அருள் இருந்தால் விளங்கும்.

(14)

இடை இடையே ஞானிகளுக்கு உத்சாகம் உண்டாகிவிடும். உத்சாகத்தில் நையாண்டி, குத்தல், பக்கவெட்டு எல்லாம் வந்து விழும். பளிச் பளிச்சென்று வந்துவிடும்.

இறைவனையே வம்புக்கு இழுப்பார்கள் மெய்யடியார்கள்.

அப்படி ஒரு குத்து - இறைவனுடைய விலாவிலேயே குத்து விடுகிற உல்லாச விளையாட்டு, பொய்கை ஆழ்வார் மூலம் வெளிப்படுகிற தோரணையைப் பாருங்கள்.

பெருமானே! பிரளய காலத்தில் எல்லாம் கரைந்துவிட்டன. அவ்வளவையும் அள்ளி அள்ளி வாயில் போட்டுவிட்டாய் நீ. மிச்சம் சமுத்திரம் ஒன்றுதான். ஒரே வெள்ளக்காடு.

அந்த வெள்ளத்தில் ஒரு சிறிய ஆல இலையில் படுத்து ஆனந்த நித்திரை புரிந்தாய் என்கிறார்கள். உண்மை என்று வைத்துக் கொள்வோம்! ஆனால் ஒரு சந்தேகம்! அந்த ஆல இலை மட்டும் எங்கே இருந்தது? அதற்கு மட்டும் ஒரு பகுதி நிலம் கரையாமல் இருந்ததா? இல்லை அந்த ஆலமரமும் இலையும் ஆகாயத்தில் தொங்கியதா? விபரமாகச் சொல்ல வேண்டும் நீ!

இப்படி ஒரு போடு போடுகிறார் ஆழ்வார்.

*"பாலன் தனதுருவாய் ஏழ்உலகுண்டு ஆழ்இலையின்*
*மேலன்று நீதுயின்றாய் மெய்யென்பர்! - ஆலதுதான்*
*வேலைசூழ் மண்ணதோ? விண்ணதோ? வேறதோ?*
*சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்"*

**(பாலன் தனது உருவாய் ஏழ் உலகு உண்டு ஆல் இலையின் நீ துயின்றாய் என்பர் - பால்குடி மாறாத பாலகனாக இருந்து கொண்டு எப்படி அண்ட பிண்ட சராசரங்களை எல்லாம் வயிற்றுக்குள் போட்டாய்! போட்டுவிட்டு ஒரு சிறிய ஆலஇலையில் படுத்து வெள்ளத்தில் மிதந்தாய் என்கிறார்களே? மெய் என்பர் - இது உண்மைதான் என்கிறார்கள். அப்படியானால், ஆலது - நீ படுத்துக் கிடந்த ஆல இலை. வேலைசூழ் மண்ணதோ - கடல் அழித்த நிலத்தில் எங்கு தப்பியது. விண்ணதோ - இல்லை ஆகாயத்தில் தொங்கியதா? இல்லை! வேறதோ - அதை நீ ஒளி வைத்திருந்தாயோ? குன்று எடுத்தாய் சொல் - மலையையே செந்தூக்காகத் தூக்கி கரகம் ஆடிய பெருமானே! விபரமாகச் சொல்லும், சொல்லுமையா சொல்லும்!)**

(15)

பக்தர்கள் மேல் இறைவனுக்கு அடங்காத ஆசை. அவர்கள் கண்டுகளிக்க வேண்டும் என்கிற கருணை காரணமாகவே அங்காங்கே கோவில் கொண்டு எழுந்தருளி அருள் பாலிக்கிறான்.

எல்லாக் கோவில்களிலும் ஒரே மாதிரி காட்சி கொடுக்க மாட்டான் பெருமான்!

திருப்பதியில் நின்றதிருக்கோலம். காஞ்சிபுரத்தை ஒட்டியுள்ள பாடகத் (விண்ணகரத்)தில் அமர்ந்தருளும் திருக்கோலம். இனி காஞ்சியை அடுத்த திருவெஃகாவில் சயனகோலம். திருக்கோவிலூரிலோ வேகமாக நடக்கும் பாவனையில் மூர்த்தம்.

பக்தர்கள் அப்படி இப்படி என்று அலட்டிக் கொள்ள வேண்டியதில்லை. மேலே குறிப்பிட்ட நான்கு இடங்களையும் நினைத்தாலே போதும். பிறகு நான்கு திருப்பதிகளுக்கும் மாறி மாறிச் சென்றால் போதும். ஆனந்தக் கண்ணீர் தாரை தாரையாகச் சொரியும்.

ஆனந்த வெள்ளத்தில் வேதனை, மயக்கம், தளர்ச்சி எல்லாம் கரைந்துவிடும். பிறகு தொல்லைக்கு ஏது இடம்?

**"வெங்கடமும், விண்ணகரும். வெஃகாவும், அஃகாத**
**பூங்கிடங்கின் நீள்கோவில் பொன்னகரும் - நான்கிடத்தும்**
**நின்றான், இருந்தான், கிடந்தான், நடந்தானே**
**என்றால் கெடுமே இடர்"**

**(வேங்கடம் - திருப்பதி. விண்ணகர் - பாடகம். அஃகாத - புகழ் குன்றாத. பூங்கிடங்கின் - மலர்பூத்த அகழி சூழ்ந்த. நீள்கோவில் பொன்நகர் - திருக்கோவிலூர். இடர் - துன்பம்.)**

(16)

பொய்கை ஆழ்வார் பரம பக்தர். ஞானக் கொழுந்து அவர். பெருமாளிடம் அவருக்குக் கொஞ்சம் நெருக்கம் அதிகம். தாராளமாகப் பேசுவார், வாதிடுவார்.

இப்பொழுது பெருமாளின் வல்லவேட்டையே (மேல் துண்டையே) பிடித்து இழுக்கிறார். இழுத்துக் கொண்டே பெருமானின் செவியோடு செவி வைத்து ரகஸ்யம் பேசுகிறார்.

''எம்பெருமானே! உன்னைவிட்டால் எனக்கு வேறு ஒன்றும் இல்லை. இலாபமோ நஷ்டமோ எனக்கு நீர்தான் கதி'' என்று தீர்மானமாகச் சொல்லி விடுகிறார்.

பொன்மயமான சக்கரப் படையை ஏந்திய பேராளா (பொன் ஆழி ஏந்தீ) என்று அருமை பாராட்டி ஆரம்பிக்கிறார் பேச்சை.

*"நாடினும் நின் அடியே நாடுவன்; நாள்தோறும்*
*பாடினும் நின்னடியே பாடுவன்; - சூடினும்*
*பொன்ஆழி ஏந்தீ!நின் பொன்னடியே சூடுவன்*
*என்னாகில் என்னே எனக்கு?"*

வருவது வரட்டும் என்கிறார் ஆழ்வார்.

**(நாடினும் - தேடுவதெல்லாம் நின்அடியே. நாடுவன் - உனது அருள் ஒன்றையே தேடுவன். பாடினும் - பாடினாலும்; ஆழி - சக்கரம். என் ஆகில் என்னே எனக்கு - இதான் என் முடிவு. வாழ்ந்தாலும் சரி, வீழ்ந்தாலும் சரி முடிவை மாற்ற முடியாது என்று பெருமாளின் கையில் அடித்துச் சொல்கிறார் ஆழ்வார்.)**

(17)

பொய்கை ஆழ்வாருக்கு ஒரே வியப்பு! "ஆனந்தமாய் வாழ வழி இருக்கிறபொழுது துக்கத்தில் கிடந்து உழல்கிறார்களே மக்கள்! என்ன கொடுமை இது" என்று ஆச்சர்யப்படுகிறார்.

வாயில் நா(க்கு) இருக்கிறது. நமோ நாராயணா என்னும் மந்திரமும் இருக்கிறது. இதை உச்சரித்தால் போதுமே? பயம் ஓடிவிடும். தளர்ச்சி பறந்து விடும். நோய் நொடி இல்லாமல் நிம்மதியாக வாழலாம்.

மரணத்தைப் பற்றியும் பயப்பட வேண்டாம். (மாக்கதிக்கண்டு செல்லும் வகை உண்டு)

இவ்வளவும் கையில் இருக்கிறபொழுது இந்தப் புத்திகெட்ட ஜன்மங்கள் அவஸ்தைப் படுகின்றனவே!

வாயைத் திறந்து மந்திரத்தை உச்சரிக்கப் புத்தி இல்லையே!

வாழ்க்கையே நரகமாகப் போய்விட்டது இவர்களுக்கு. பிறகு சொர்க்கமா கிடைக்கும் இவர்களுக்கு! கொடிய நரகந்தான் (தீக்கதி) என்று பரிவு காட்டுகிறார் ஆழ்வார்.

*"நாவாயில் உண்டே? நமோநா ரணா என்(று)*
*ஓவாது உரைக்க உரைஉண்டே? மூவாத*
*மாக்கதிக்கண் செல்லும் வகைஉண்டே; என்வர்*
*தீக்கதிக்கண் செல்லும் திறம்?"*

**(ஓவாது உரைக்க உரை உண்டே - விடாமல் சொல்லிக் கொண்டிருக்க அவனுக்குத் திவ்ய நாமங்கள் பல. மூவாத மாக்கதி - மோட்சம்.**

தீக்கதி - நரகம். உண்மையினிடத்து பக்தி ஏற்பட வேண்டும். பக்தி உண்டாக உண்டாக நம்பிக்கை ஏற்படம். நமக்குத் துணை இதுதான். இது ஒன்றுதான் என்னும் நம்பிக்கையே ஏற்பட்டுவிடும்.)

(18)

*அப்படி ஒரு நம்பிக்கை ஏற்பட்டபின் அதைப் புகழ்வதிலும், மதிப்பதிலுமே இன்பம் சுரக்கும். அது மட்டுமல்ல, மற்றொன்றை மற்றொருவர் புகழ்ந்து பாராட்டுகிறதைத் தாங்க முடியாது. அப்படிப் பாராட்டுகிற பாராட்டைத் தட்டி நொறுக்கிவிட்டு தனக்கு உகந்த வஸ்துவையே அது மேலே மேலே உயர்த்திக் காட்டும்.*

*பொய்கை ஆழ்வாருக்குத் திருமால்தான் துணை. அவரை மனமுருகிப் பாராட்டுவதுதான் அவருக்குப் பேச்சு.*

*பாராட்டு எப்படி வருகிறதென்று பாருங்கள். சிவபெருமான் தலையில் கங்கையை வைத்திருக்கிறார். அந்தக் கங்கையை திருமாலின் திருவடிகளில் விட்டுப் பாதங்களைக் கழுவியதாக ஒரு கதை.*

*திருமாலின் பாதகமலங்களைத் கழுவியதால் சிவபெருமான் தலையில் இருக்கும் கங்கை புனிதம் அடைந்தது என்கிறார் ஆழ்வார்.*

*பிடிசேர் களிறளித்த பேறாளா என்று அருமை பாராட்டி திருமாலைக் கூப்பிட்டே சொல்கிறார் ஆழ்வார்.*

*"பிடிசேர் களிறளித்த பேராளா! உன்தன்*
*அடிசேர்ந்து அருள்பெற்றாள் அன்றே? - பொடிசேர்*
*அனற்கங்கை ஏற்றான் அவிர்சடைமேல் பாய்ந்த*
*புனற்கங்கை என்னும்அப் பொன்"*

(பிடிசேர் களிறளித்த பேராளா - மனைவி மக்களோடு குடும்பம் நடத்துகிற யானையைக் காப்பாற்றிய கருணைக் கடலே - திருமாலே! பிடி-பெண்யானை-களிறு-ஆண்யானை. முதலை வாயிலிருந்து யானையைக் காப்பாற்றிய கருணை. பொடிசேர் அனற்குக் அங்கை ஏற்றான் - சுட்டுப் பொசுக்கும் அக்கினியை அழகிய கையில் ஏந்திய சிவபெருமான். அவிர்சடை - விரிந்து பரந்த சடை. புனல் கங்கை என்னும் அப்பொன் - கங்காதேவி. உன்அடி சேர்ந்து அருள் பெற்றாள் அன்றோ - உன் திருவடி மகிமையால்தானே புனிதம் அடைந்தாள்.)

(19)

*எப்பொழுதும் தெய்வ சிந்தனை ஒன்றில்தான் தோய்ந்திருப் பார்கள் ஞானிகள்.*

தெய்வ கைங்கர்யங்களில் சில சமயம் ஈடுபட நேரிடலாம். அப்பொழுது அந்தக் காரியத்தில் சில சமயம் ஒரே வேகம் உண்டாகும். அந்த வேகத்தில் காரியத்தோடு காரியமாக மனம் ஒரு முனைப்பட்டுச் செயலாற்றும்.

காரியம் முடிந்த பொழுதோ, முடியும் தறுவாயிலோ ஒரு தயக்கம் உண்டாகும். பெருமானை விட்டுவிட்டோமே? அவனைக் காணவில்லையே! கோவில், குளம் என்று சில பணியில் இறங்கி அவனை நழுவ விட்டோமே! என்று ஒரு பரபரப்புக்கு ஆளாகும் மனம்.

பொய்கை ஆழ்வாரும் அப்படிப் பரபரப்புக்கு ஆளா னவர்தான்.

பரபரப்பில் தவிக்கும் மனத்தை எப்படிச் சமாதானப்படுத்து கிறார் ஆழ்வார் என்று பாருங்கள்.

மனமே பயப்படாதே. நம்முடன்தான் இருக்கிறான் பெருமாள்.

> *"உளன்கண்டாய் நல்நஞ்சே! உத்தமன்; என்றும்*
> *உளன்கண்டாய் உள்ளுவார் உள்ளத்து - உளன்கண்டாய்*
> *வெள்ளத்தின் உள்ளானும் வேங்கடத்தின் மேயானும்*
> *உள்ளத்தின் உள்ளான்என்று ஓர்"*

(நல்நெஞ்சே உத்தமன் உளன்கண்டாய்! - மனமே உன்னுடன் தானே பெருமான் இருக்கிறான்! இது உனக்குத் தெரிய வில்லையா? உள்ளுவார் உள்ளத்து என்றும் உளன் - பக்தியோடு தியானிக்கிறவர் மனசை விட்டு அவன் என்றும் நகர மாட்டான். இது ஏன் உனக்கு விளங்கவில்லை?

வெள்ளத்தின் உள்ளான் - பிரளயக்கால வெள்ளத்தில் மிதந்தவன் திருமால். வேங்கடத்தில் மேயான் - திருப்பதியில் குடி ஏறியவன் திருமால். உள்ளத்தின் உள்ளான் என்று ஓர் - என்னதான் ஆனாலும் அவன் நம் உணர்ச்சியை விட்டு அகலமாட்டான். இதை நீ நம்பு! பயப்படாதே மனமே பயப்படாதே!)





# பூதத்தாழ்வார்

(1)

**பூ**தத்தாழ்வார் பரமபக்தர். தன்னையே திருமானுக்கு அர்ப்பணித்தயோகி அவர். அவர் பாடிய இரண்டாம் திருவந்தாதியிலிருந்து ஒரு பாடல்.

எம்பெருமானை அம்சம் அம்சமாகக் கண்டு களிப்பதற்கு வெளிச்சம் வேண்டும். வெளிச்சம் கொடுக்க விளக்கு வேண்டும்.

அப்படி ஒரு விளக்கை - ஞான விளக்கை இதோ நான் ஏற்றி வைத்திருக்கிறேன்!

வாருங்கள் எல்லோரும்! விளக்கு வெளிச்சத்தில் அவனைக் கண்குளிரக் காண்போம் என்கிறார் பூதத்தாழ்வார்.

இனிப் பாடல் -

*''அன்பே தகளியா, ஆர்வமே நெய்யாக,*
*என்புருகு சிந்தை இடுதிரியா - நன்புருகி*
*ஞானச் சுடர்விளக்கு ஏற்றினேன் நாரணற்கு*
*ஞானத் தமிழ்புரிந்த நான்''*

ஆழ்வார் ஏற்றிவைத்த விளக்கு ஓர் அதிசய விளக்குத்தான். அன்புதான் அகல் (தகழி). ஆர்வந்தான் நெய், எலும்பை (என்பு) உருக்கும் உணர்ச்சிதான் விளக்குத் திரி. ஞானம் உருக உருக ஒரு ஒளி பிறக்குமே அந்த ஒளிதான் சுடர். இப்படி ஏற்றி இருக்கிறேன் விளக்கை என்கிறார் ஆழ்வார்.

ஞானத்தமிழ் புரிந்தநான் - பக்தியை விளக்குவது ஒன்றுக் காகவே பாடல் (தமிழ்) பாடுகிறவன் நான் என்று தன்னை இனம் காட்டுகிறார் ஆழ்வார்.





# பேயாழ்வார்

(1)

இனி, பேயாழ்வார் பாசுரங்களில் சிலவற்றைப் பார்க்கலாம்.

தாமரைப் புஷ்பத்தைப் பார்க்கிறோம். புஷ்பத்தின் தோற்றம், பொலிவு, மணம், இதழ்களை அடுக்கி வைத்திருக்கும் பொருத்தம், நிறம் இப்படி ஒவ்வொன்றையும் அங்கம் அங்கமாக அனுபவிக்கிறோம். காரணம் என்ன?

தாமரை மலரோடு சேர்ந்து கிடக்கிற சௌந்தர்யம் - பூரண சௌந்தர்யந்தான் காரணம்.

பொருளோடு பொருளாய் ஒட்டிக் கிடக்கிற பூரண சௌந்தர்யத்தை எவ்வளவுக்கு எவ்வளவு அனுபவிக்க முடிகிறதோ அவ்வளவுக்கவ்வளவு அது தனித்தனி அம்சங்களில் தோன்றும் மனசுக்கு.

இதுதான் உள இயலின் அடிப்படை உண்மை.

இனி, பேயாழ்வார் திருமாலின் பூரண சௌந்தர்யத்தில் திளைக்கிறவர். அதனால் திருமாலை அணு அணுவாக அனுபவிக்கிறார்.

அனுபவம் பாடலாய் உருவெடுக்கிறது.

*"திருக்கண்டேன், பொன்மேனி கண்டேன், திகழும்*
*அருக்கன் அணிநிறமும் கண்டேன், - திருக்கிளரும்*
*பொன்ஆழி கண்டேன், புரிசங்கம் கைக்கண்டேன்*
*என்ஆழி வண்ணன்பால் இன்று"*

(திரு - திருமால். பொன்மேனி - அழகிய திருமேனி. அருக்கன் அணிநிறம் - விடியல் நேரத்தில் தோன்றும் இளஞ்சூரியன் போன்ற குளுமையான பொன்னொளி, திருக்கிளரும் பொன்ஆழி - அழகிய சக்கரம், ஆழி - சக்கரம்.

(2)

அழகுத்தத்துவம் என்று ஒன்று. அதைப் பார்க்க முடியும். ஆனால் அது இவ்வளவுதான் என்று கணக்குப் போட்டுக் காட்ட முடியாது.

கடவுள் தத்துவம் என்றால் அது எல்லையற்ற அழகுதான். அதாவது உண்மைதான். பேருண்மையேதான்.

அப்படியானால் கடவுள் தத்துவத்தை அளந்து கணக்குப் போட்டுக் காட்ட முடியுமா? முடியாது. அதனால் ''எழில் அளந்தாங்கு எண்ணற்கு அரியான்'' என்கிறார் ஆழ்வார்.

கடவுள் இல்லாத இடம் இல்லை. நம்மோடும் இருக்கிறார் அவர். நாமாகவே இருக்கிறார் அவர். அது காரணமாகவே நம்மால் அவரைத் தெரிய முடிகிறதில்லை.

எல்லாப் பொருள்களையும் கடந்தவன் இறைவன்:

'எப்பொருட்கும் சேயான்'

அப்படியானால் அவனை நெருங்க முடியுமா நம்மால்?

'நண்ணற்கு அரியான்'

ஆனாலும் இறைவன் மேல் அன்பு உண்டாகி விட்டது. பக்தியாகவே சுரந்துவிட்டது அன்பு. காதலாகக் கனிந்து ஜொலிக்கிறது அது.

பிறகு சும்மா இருக்க முடியுமா? மயங்கிச் சுருண்டு படுத்துக் கிடக்கும் மனதைத் தட்டி எழுப்புகிறார் ஆழ்வார். ''எழுந்திரு, வா, பெருமானைச் சேவிக்கலாம்'' என்று.

''கழல்தொழுதும் வாநெஞ்சே! கார்கடல்சூழ் வேலி
பொழில்அளந்த புள்ளூர்தி யானை - எழில்அளந்தாங்கு
எண்ணற்கு அரியானை, எப்பொருட்கும் சேயானை,
நண்ணற்கு அரியானை நாம்''

(கழல்தொழுதும்வா - திருவடிகளை வணங்குவோம் நாம். கார்கடல் சூழ்வேலி பொழில் அளந்த புள்ளூர்தியான் - கடலால் சூழ்ந்த நில உலகை அடியால் அளந்து கருட வாகனத்தில் ஏறிவரும் திருமால்).

(3)

'எல்லாம் கடவுள் செயல்தான்' என்பதைப் புத்தகத்தின் மூலம் படித்துவிட்டால் போதுமா? விளங்க வேண்டாமா அது? விளங்கினால் மட்டும் போதாது. நம்முடைய காரியம் ஒவ்வொன்றிலும் அந்த விளக்கம் பரிமளிக்கவேண்டும்.

அப்படியானால் என்ன செய்ய வேண்டும் நாம்?

அடிக்கடி கோவிலுக்குப் போக வேண்டும். மூர்த்தியை வழிபட வேண்டும். அபிஷேகம், அலங்காரம், ஆராதனை ஒவ்வொன்றையும் பார்த்துப் பார்த்துப் பரவசப்பட வேண்டும்.

அப்படியானால்தான் மூர்த்திக்குப் பின்னால் இருக்கிற கடவுள் தத்துவம் நம் மண்டைக்குள் இறங்கும்.

அப்படியெல்லாம் சென்று சென்று வழிபட்டவர் ஆழ்வார். அதனால் திருமாலின் திருநாமங்களை எப்பொழுதும் உச்சரித்துக் கொண்டே இருக்கும் அவர் நா.

ஆனாலும் ஆழ்வாருக்கு ஒரு வருத்தம்! இளமை முறுக்கில் பல வருஷங்களை வீணாக்கி விட்டோமே! நாம சங்கீர்த்தனை பண்ணாமல் வெறுமனே இருந்து விட்டோமே என்று.

சரி, போனது போகட்டும் என்று திருப்திப்படுகிறார். தொடர்ந்து உச்சரிக்க இப்பொழுதாவது புத்தி வந்ததே என்னும் எக்களிப்புத் தான் திருப்திக்கு காரணம்!

*''சென்றநாள் செல்லாக; செங்கண்மால் எங்கள்மால்*
*என்றநாள் எந்நாளும் நன்னாளாம்; - என்றும்*
*அறவாழி அண்ணல் அருளடிக்கே ஆளாய்*
*மறவாது வாழ்த்துகஎன் வாய்''*

(சென்றநாள் செல்லாக - பெருமானின் திவ்ய நாமங்களைத் தியானிக்காத நாள் அவ்வளவும் போய்த் தொலையட்டும். செல்லரித்து ஒழியட்டும். செல்லாக் காசாகவே போகட்டும். நல்நாளாம் - அவனை நினைந்து தியானிக்கிற நாள்தான் வாழும் நாள். அறவாழி அண்ணல் - கிருபா சமுத்திரமாகிய பெருமான்.)

(4)

கொள்ளவந்த நாகத்தைச் சின்னாபின்னம் ஆக்கிவிட்டார் திருமால். கண்ணனாக அவதரித்து அவர் நடத்திய லீலா விநோதங் களில் இது ஒன்று.

இப்படி எத்தனையோ லீலைகள். அவ்வளவு லீலைகளையும் நடத்திய திருமாலின் வடிவை - பூரண சௌந்தர்யத்தை நவநவ மான ரஸபாவங்களை எப்படி எடுத்துச் சொல்ல முடியும்?

அவரவர்க்கு எவ்வளவு முடியுமோ அவ்வளவு சொல்லி விட்டுப் போகவேண்டியதுதான்.

அவ்வளவையும் சொல்லி விட்டதாக ஒவ்வொருவரும் நினைத்துக் கொள்வார்கள்! ஆனால் யாரும் பூரணமாகச் சொன்ன தில்லை.

*''பேசுவார் எவ்வளவு பேசுவர் அவ்வளவே!*
*வாச மலர்த்துழாய் மாலையான் - தேசுடைய*
*சக்கரத்தான், சங்கினான் சார்ங்கத்தான், பொங்கரவ*
*வக்கரனைக் கொன்ற வடிவு''*

(தேசு -ஒளி, சார்ங்கம் - வில். பொங்கு அரவுவக்கரனை - சீறிச் சீறிப் பாய்ந்து கொத்தும் பாம்பாகிய வம்பன். வடிவு - திருக்கோலம்.)

(5)

பக்தி என்றால் பண்பாடென்றால் அடிக்கடி சோதனைக்கு உள்ளாகவேண்டும். அப்பொழுதுதான் உண்மை ஜொலிக்கும். பூர்ணத்வம் பெறுவதும் அதன் மூலந்தான்.

பேயாழ்வாருக்கும் சோதனைகள் அடிக்கடி வந்தன. அவ்வளவையும் ஏற்று, அனுபவித்து, வென்று வெளியே வந்தவர் ஆழ்வார்.

அந்த எக்களிப்பில் ஆழ்வார் சொல்கிறார், தஞ்சம் என்று இறைவனை நம்பி நிற்பவர்களை எந்தச் சோதனையாலும் துன்புறுத்த முடியாது. ஒன்றுக்கும் அசையமாட்டார்கள் பரம பக்தர்கள்.

லாபமும் அவன், நஷ்டமும் அவன் என்று உறுதியானபின் மயக்கம் எப்படி வரும் என்கிறார் ஆழ்வார்.

"ஆரே துயிர்உழந்தார்? துன்புற்றார் ஆண்டையார்?
காரே மலிந்த கருங்கடலை - நீரைக்
கடந்தானை காரணனை நீரணைமேல் பள்ளி
அடைந்தானை நாளும் அடைந்து"

(ஆரே துயர்உழந்தார் - துன்பப்பட்டவர் யார்? காரேமலிந்த கருங்கடலை - கடல் போன்ற நீல மேகசாமள வண்ணனை. நீரைக்கடைந்தான் - பாற்கலைக் கடைந்தவனை. நீர் அணைமேல் பள்ளி அடைந்தானை - பிரளய வெள்ளத்தில் (ஆலிலையை) படுக்கை போட்டுப் படுத்துக்கிடந்தவனை. நாளும் அடைந்து துன்புற்றார் ஆண்டையார் - தஞ்சமென நம்பி வழிபட்டவர்களில் யார் கஷ்டப்பட்டார்கள்?)

(6)

கடவுள்தான் உயிர். புல்லிலிருந்து யானைரை சகல கோடி ஜீவ ராசிகளும் கடவுள் மயம்.

பூமி, ஆகாயம், திசைகள் எல்லாம் கடவுள் மயம். வேதங்களும் அவர்தான்.

வேதங்கள் சுட்டிக் காட்டுகின்ற மெய்ப்பொருளும் அவர்தான்.

அவர்தான் திருவேங்கட மலைமேல் எழுந்தருளிக் காட்சி தருகிறார்.

திருவேங்கட மலையை ஒரு சாயலில் பார்த்தால் சிவ பெருமானாகத் தெரிகிறது.

சிகரத்தை ஒட்டி மூன்றாம் பிறைச் சந்திரன். ஆங்காங்கே குதித்தோடி வருகிற அருவிகள் இவை எல்லாம் எதைச் சுட்டுகின்றன.

தலையில் கங்கையை வைத்துச் சடையில் பிறமைதி சூடிய சிவப்பரம்பொருளையல்லவா சுட்டுகின்றன.

அண்ட பிண்ட சராசரங்களாய் விளைந்து, சிவபெருமானுக்கே மேலே அமர்ந்து தரிசனம் கொடுக்கிற பெருமான் எப்பொழுதும், என் உள்ளத்தோடு உள்ளமாய் ஒன்றி நிற்கிறான் என்று பெருமிதப் படுகிறார் ஆழ்வார்.

**"இறையாய், நிலனாகி, எண்திசையும் தானாய்,**
**மறையா, மறைப்பொருளாய், வானாய், - பிறைவாய்ந்த**
**வெள்ளத்(து) அருவி விளங்கொலிநீர் வேங்கடத்தான்**
**உள்ளத்தின் உள்ளே உளன்"**

(இறை - உயிர். மறை - வேதம். வான் - ஆகாயம்.)

(7)

பக்தியானது பழுத்துப் பழுத்துக் காதலாய் தேன் சொட்டும். அப்பொழுது இறைவன்தான் நாயகன். பக்தர்கள் நாயகிமார்கள்.

பேயாழ்வாரும் அப்படி ஒரு காதல் வெறிக்கு ஆளாகிவிடுவார். நாயகனாகிய பெருமானை நினைந்து நினைந்து உருகுவார்.

அந்த அனுபவத்தை ஒரு துறையில் வைத்துச் சொல்கிறார். காதல் வெறிக்கு ஆளான ஒரு பெண் மேல் வைத்துச் சொல்கிறார் ஆழ்வார்.

காதல் மயக்கத்தில் உணவு செல்லவில்லை. உறக்கம் வரவில்லை. பித்துப் பிடித்தது போலவே இருக்கிறது அவள் நிலை.

யாராவது ஒருவர் ஏதாவது ஒரு பொருள்பற்றிப் பேசுகிய பொழுது 'மலை' என்று சொன்னாலே போதும். மயக்கம் கலையும். ஒரு ஆவேசமே வந்துவிடும். ஆவேசத்தில் திருவேங்கட மலை பற்றி யார் யார் பாடி இருக்கிறார்களோ அவற்றை எல்லாம் பாட வைக்கிறது பெண்ணை.

இனி, இன்று வெள்ளிக் கிழமை ஆயிற்றே! நல்ல நாளும் பொழுதுமா இப்படியா இருப்பது? முகத்தைக் கழுவி, பொட்டு வைத்து, தலையில் பூவை வை என்று தோழியர் சொல்கிறார்கள்.

பெண்கள் வழக்கமாக வைக்கும் மல்லிகைக்குப் பதில் துளசி இலைகளை எடுத்துக் கூந்தலில் சொருகிக் கொள்கிறாள்.

*மயக்கம் தெளியமாட்டேன் என்கிறது.*

*இனி, காதல் வெறி உச்சிக்கு ஏறஏற ஆறோ, குளமோ, கிணறோ எதுவானாலும் இறங்கி விடுகிறாள். முங்கி முங்கிக் குளிக்கிறாள். காரணம் என்ன?*

*திருமால் படுத்திருக்கிற நீரல்லவா இது என்கிற நினைப்புத்தான்.*

*தண்ணீரில் தோய்ந்து தோய்ந்து குளிப்பது அவரைத் தழுவித் தழுவி இன்புறுவதாய் இருக்கிறது பெண்ணுக்கு.*

*இனிப் பாடல் -*

> *"வெற்பென்று வேங்கடம் பாடும், வியன்துழாய்*
> *கற்பென்று சூடும் கருங்குழல்மேல், - மற்பொன்ற*
> *நீண்டதோள் மால்கிடந்த நீராடு வான்காதல்*
> *பூண்டநாள் எல்லாம் புகும்"*

(வெற்பு - மலை. கற்பு - மல்லிகை. மல்பொன்ற - எதிரிகளின் வலிமை அழிய. மால் - திருமால். நீராடுவான் - நீராட. புகும் - பாய்வாள்.)





# நம்மாழ்வார்

(1)

கருவிலே திருவருள் பெற்று உருவானர் நம்மாழ்வார். நம்மாழ்வாரின் சொந்தப் பெயர் மாறன்.

அவருடைய வாழ்க்கையைப் பார்த்த வர்களுக்கு அவர் மேல் ஒரு நம்பிக்கையை உண்டு பண்ணி விட்டது. அதுமட்டுமல்ல தங்கள் தங்கள்மேலும் நம்பிக்கையை உண்டாக்கிவிட்டது.

அவருடைய பாசுரங்களோ பொய்மை விரட்டிவிட்டது. ஒவ்வொருவர் உள்ளத்திலும் உண்மையை ஒளிவீசும் திருவிளக்காக ஏற்றி வைத்துவிட்டது.

இவரே நம்மை உய்விக்க வந்த ஆழ்வார் என்னும் ஒருமித்த கருத்து வந்துவிட்டது மக்களுக்கு. அவ்வளவுதான் மாறன் என்னும் பெயருக்குப் பதில் நம்மாழ்வார் என்னும் பெயரே நிலைத்துவிட்டது.

நம்மாழ்வார் பாசுரங்கள் ஆயிரம். ஒவ்வொன்றும் தத்துவக் களஞ்சியம். பக்திப் பொக்கிஷம். அவற்றிலிருந்து ஒரு சில பாசுரங்கள்.

எல்லாம் இறைவன் மயம் என்று ஆனபிறகு நல்லதும் அவன்தான். கெட்டதும் அவன்தான். அதவாது தீமையைப் போலச் சுட்டெரிக்கும் நஞ்சும் அவன்தான். நன்மையை விளைவிக்கும் அமிர்தமும் அவன்தான்.

பூமியையும் அளந்தான். பசுவையும் மேய்த்தான். இதுமேல், இது கீழ் என்னும் வேறுபாடு அவனுக்கு ஏது.

இனிப் பாடல் - கட்டளைக் கலித்துறை

*"தீவினை தீய்க்கும்நஞ்-*
*சை,நல் வினைக்கான*
*தெள்ளமு தை,*
*பூவினை மேவிய*
*தேவிம ணாளனை,*
*புன்மைஎள் காது*
*ஆவினை மேய்க்கும்வல்*
*ஆயனை, அன்றுலகு*
*ஈரடி யால்*

*தாவினை ஏற்றைஎம்*
*மானைஎஞ் ஞான்று*
*தலைப்பெய்வ னே''*

(பூவினை மேவியதேவி - செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள். புன்மைஎள் காது - கேவலம் என்று எண்ணாமல். ஆ - பசு. ஆயன் - மேய்ப்பவன். தாவினை ஏற்றை - தாவி அளந்த வீரனை. எஞ்ஞான்று தலைப்பெய்வனோ? - கண் குளிரக் கண்டுகளிப்பது என்றோ?)

(2)

*காதல் இல்லை என்றால் மனந்திறந்து பேசமுடியாது பக்தியால். காதல் இல்லாத பக்தியின் பேச்சு கூட்டல் கழித் தலுக்குரிய குறியீடுகளைக் காட்டும் வெறும் கணக்குத்தான். தத்துவம் தத்துவம் என்று சொல்லலாமே தவிர யாருக்குப் பிரயோசனப்படாது அந்தத் தத்துவம்.*

*நம்மாழ்வாரின் பக்தியானது காதலில் கரையும், பிறகு கல்க்கண்டாய் உருவெடுக்கும். அப்பொழுது ஒரு பரபரப்பு உண் டாகத்தானே செய்யும். பரபரப்பில் அங்கே இங்கே என்று பாய்ந்து ஓடும் உள்ளம்.*

*அப்படி ஓடுகிற மனசைப் பார்த்துச் சிரிப்பு வந்துவிட்டது நம்மாழ்வாருக்கு. சிரிப்போடு சிரிப்பாய் வருகிறது ஆழ்வாரின் நிச்சயம்.*

*'இருந்த இடத்திலேயே இருந்து தியானம் செய். தியானமே செய். மறந்துவிடாதே மனமே' என்று அதன் முதுகைத் தட்டிக் கொடுக்கிறார் நம்மாழ்வார்.*

*''நீயன்றே ஆழ்துயரில் வீழ்விப்பான் நின்றுழன்றாய்,*
*போய்ஒன்று சொல்லிஎன் போநெஞ்சே! - நீ என்றும்*
*காழ்த்துஉபதே சம்தரினும் கைகொள்ளாய்; கண்ணன்தாள்*
*வாழ்த்துவதே கண்டாய் வழக்கு''*

(நெஞ்சே, நீ அன்றே ஆழ்துயரில் வீழ்விப்பான் நின்று உழன்றாய் - மனமே, என்னைத் துன்பத் படுத்தவேண்டும் என்பதற்காகவே சஞ்சலப்படுகிறாய். காழ்த்து - வலுவாக, வயிரக் கட்டியாய். உபதேசம் தரினும் - உண்மையைக் கையில் எடுத்துக் கொடுத்தாலும். தாள் - திருவடியை அதாவது நியதித் தத்துவத்தை. வாழ்த்துவதே வழக்கு - பரவசத்தோடு அனுபவிப்பதுதான் முறை.)

(3)

*உண்மையைப் பார்க்கப் பார்க்க அதிசயந்தான். ஆனந்தந்தான்.*

*தங்கத்தைப் பார்த்தால் எவ்வளவு மகிழ்ச்சி, இனி அத் தங்கத்திலிருந்து விதம்விதமான நகைகள் விளைகிற பொழுது அதைவிட மகிழ்ச்சி.*

*இரும்பைப் பார்த்தால் - பார்க்கிற முறையில் பார்த்தால் அதுவும் அப்படியே.*

*குண்டூசி எங்கே? ரயில் இஞ்சின் எங்கே? துண்டு துண்டான இரும்பிலிருந்துதான் இத்தனையும் வந்துள்ளன என்பது விளங்க விளங்க மகிழ்ச்சிக்கு வரம்பு கட்டமுடியாது.*

*இனி, தங்கம் எங்கே, இரும்பு எங்கே? இரண்டுக்கும் எவ்வளவு வேற்றுமை? ஆனாலும் ஒரே வகையான அணுவிலிருந்து தான் தங்கமும் வந்தது, இரும்பும் வந்தது என்பது விளங்கி விட்டால் அதுதான் விடுதலை. அதுதான் மோட்சம்.*

*நியதித் தத்துவம் எப்படி இருக்கும்? எப்படிச் செயல்படும் என்பதை அறிய பக்தர்களுக்கு ஆவல் உண்டாகும். தீராத ஆவல் அது.*

*ஆழ்வாரும் அப்படி ஆசைக்கு ஆளானவர்தான்.*

**"தாம்பால்ஆப்பு உண்டாலும், அத்தாம்பு தான்இளக**
**பாம்பால்ஆப் புண்டுபாடு உற்றாலும், - சோம்பாதிப்**
**பல்உருவை எல்லாம் படர்வித்த வித்தாஉன்**
**தொல்லுருவை யாரவார் சொல்"**

**(தாம்பால் ஆப்பு உண்டாலும் - தயிர் கடையும் கயிற்றால் கட்டுண்டாலும். தாம்பு - கயிறு. ஆப்பு - கட்டு. பாம்பால் ஆப்பு உண்டாலும் - கொல்ல வந்தபாம்பு சுற்றி வளைத்து உன்னைக் கட்டி னாலும். சோம்பாது - தளராது. படர்வித்த வித்தா - உண்டாக்கின வித்தகனே! தொல் உருவை - உன் சுயமான நிலையை - தோற்றத் தைக் காட்டு).**

(4)

*நீல நிறத்தில் எத்தனையோ பொருள்கள் இருக்கின்றன. மேகம், மலை, கடல், காயாம்பூ இப்படி எத்தனையோ இருக்கின்றன.*

*இருந்தால் என்ன? அவற்றின் பின் ஓட வேண்டுமா?*

*பார்க்கலாம், பரவசப்படலாம் குற்றம் இல்லை. ஆனால் அவற்றின்பின் ஓடுவதென்பது சரியில்லை.*

நம்மாழ்வார் மனம் அப்படி இல்லை. நீல நிறத்தோடு கூடிய ஒன்றைப் பார்த்துவிட்டால் போதும். அடடா! எம்பெருமானின் வண்ணமல்லவா இது என்று பின்னாலேயே ஓடிவிடுகிறது அவர் மனம்.

என்ன செய்வார் பாவம் ஆழ்வார்.

*"கொண்டல்தான் மால்வரைதான் மாகடல்தான் கூர்இருள்தான்*
*வண்டறாப் பூவைதான் மற்றுத்தான் - மண்டுசெறி*
*கார்உருவம் காண்தோறும் நெஞ்சோடும்; கண்ணனார்*
*பேர்உருஎன்று எம்மைப் பிரிந்து"*

(கொண்டல் - மேகம். மால்வரை - பிரமாண்டமான மலை. கூர்இருள் - கறுத்த இருள். வண்டு அறாப்பூவை - வண்டு மொய்க்கும் காயாம்பூ. மண்டு செறிகார் உருவம் காண்தொறும் - நீல நீறம் பொங்கி வழியும் எதைப் பார்த்தாலும். பேர்உரு என்று - அது கண்ணன் வடிவம் என நினைத்து. நெஞ்சு - எம்மைப் பிரிந்து ஓடும் - என் மனம் என்னை விட்டு விட்டு அதன் பின்னால் ஓடிவிடுகிறது! என்ன அதிசயம் இது!)

(5)

நம்மையே நம்பிக் கொண்டிருக்கிறார்கள் பக்தர்கள். அவர்களுக்காகவே வைகுண்ட பகுதியை விரிவுப்படுத்தி இருக்கிறது என்று நினைக்கிறார் பெருமான்.

ஆனாலும் பெருமானுக்குப் பூரண திருப்தி இல்லை. வேறு ஏதாவது செய்ய வேண்டுமே அடியவர்களுக்கென்று தவிக்கிறார்.

திருமால் தவிக்கிற தவிப்பு ஆழ்வாருக்குத் தெரிந்துவிட்டது.

என்ன இது வேடிக்கை என்று சிரித்து விடுகிறார் ஆழ்வார்.

சிரிப்பே பாட்டாய் எழுந்து வருகிறது.

*"ஒன்றுண்டு செங்கண்மால்! யானுரைப்பது; உன்னடியார்க்கு*
*என்செய்வன் என்றே இருத்திநீ - நின்அருளின்*
*வைகின்ற சிந்தையினும் மற்றினிதோ நீஅவர்க்கு*
*வைகுந்தம் என்றருளும் வான்"*

(ஒன்றுஉண்டு செங்கண்மால் யான் உரைப்பது - திருமாலே! உம்மிடம் நான் சொல்ல வேண்டியது ஒன்றிருக்கிறது. சொல்கிறேன் கேளும்.

அடியார்க்கு என்செய்வேன் என்று இருந்திநீ - நம் பக்தர்களுக்கு ஏதாவது உதவ வேண்டுமே என்று கவலைப்படுகிறீர் நீர். நீர் அவர்க்கு வைகுந்தம் என்றருளும் வான் - அடியார்களுக்கு நீர் வழங்கும் வைகுந்தம் என்னும் பரமபதமானது. நின் அருளின் வைகின்ற

சிந்தையினும் இனிதோ - உம்மையே நினைந்து தியானிக்கிற மன அமைதியைவிட மேலாகுமா அந்த வைகுந்தம்? பிறகு ஏன் உமக்கு இந்தக் கவலை?)

(6)

''திருமால்தான் எனக்கு அவ்வளவும். வேறு எது பற்றியும் எனக்குக் கவலை இல்லை.'' என்று அடித்துச் சொல்கிறார் நம்மாழ்வார்.

*"அடர்பொன் முடியானை ஆயிரம்பே ரானை,*
*சுடர்கொள் சுடராழி யானை, - இடர்கடியும்*
*மாதா பிதாவாக வைத்தேன் எனதுள்ளே;*
*யாதாகில் யாதென் இனி?''*

(அடர்பொன் முடியானை - ஒளி நிறைந்து ஜொலிக்கும் பொன் முடியான். ஆழி - சக்கரம். இடர் கடியும் - தொல்லை ஏற்படா வண்ணம் பாதுகாக்கும். மாதா பிதாவாக வைத்தேன் - தாயும் அவன்தான், தந்தையும் அவன்தான் என்று முடிவு கட்டி விட்டேன். எனது உள்ளே(வைத்தேன்) - இந்த முடிவு நானே செய்தேன். எனக்குள்ளேயே வைத்துக் கொண்டேன்.)

யாது ஆகின்யாது என் - எது எப்படிப் போனால் எனக் கென்ன?

யார் மதிக்கிறார், யார் சிரிக்கிறார் என்றெல்லாம் கவலைப்பட வேண்டிய அவசியம் இனி எனக்கு இல்லை.

(7)

திருமாலைப் பார்த்தால் பக்தர்களின் உள்ளம் உருகும் என்று சொல்வது சாதாரணம்.

'திருமாலை மட்டுமல்ல, திருமாலைப் போன்ற பொருள் எதைப் பார்த்தாலும் என் உள்ளம் உருகுகிறது' என்று சொல்கிறார் ஆழ்வார். அதுமட்டுமா?

என் உயிரும் உடம்பும் அந்த ஆனந்தத்தில் விம்மிப் பூரிக்கின்றன! இதற்கு நான் என்ன செய்ய முடியும் என்கிறார் நம்மாழ்வார்.

*''பூவையும், காயாவும், நீலமும், பூக்கின்ற*
*காவி மலர்தானும் காண்தொறும் - பாவியேன்*
*மெல்லாவி மெய்யோடு பூரிக்கும் அவ்வவை*
*எல்லாம் பிரான்உருவே என்று''*

(காயா - காயம்பூ. காவிமலர் - நீலோற்பல மலர். மெல்லாவி மெய்யோடு பூரிக்கும் - உயிரும் உடம்பும் உருகி உருகி விம்மும்.)

(8)

காதல் வெறி ஏற ஏறப் பேச்சுக் குறையும். ஒன்றிரண்டு சொல் வந்தாலும் அதில் பொறி பறக்கும். சுடர்ப் பொறியாய் ஜொலிக்கும் சொற்கள்.

மேலே வான வெளியில் ஊர்ந்து செல்லும் மேகங்கள் என் கண்ணன் நிறம் பெற்றுத் திகழ்கின்றன. இப்படி ஓர் அழகிய வண்ணம் பெற என்ன தவம் செய்தன அந்த மேகங்கள்?

இப்படி வரும் சொல்.

*''தங்கா முயற்றியவாய்த் தாழ்விசும்பின் மீதுபாய்ந்து*
*எங்கேபுக்கு எத்தவம்செய்து இட்டனகொல்! - பொங்கோதத்*
*தண்ணம்பால் வேலைவாய்க் கண்வளரும் என்னுடைய*
*கண்ணன்பால் நீல்நிறம்கொள் கார்?''*

(தங்கா முயற்றியவாய் - ஓர் இடத்தில் நிற்காமல் ஓய்வு ஒழிவில்லாமல். புக்கு - புகுந்து. விசும்பு - ஆகாயம். பொங்கு ஓதம் - தாவிக் குதிக்கும் அலை. தண்அம்பால் வேலை - குளிர்ந்த அழகிய பாற்கடல். கார் - மேகம். கண்வளர்தல் - உறங்கல்.)

(9)

ஆனந்தமாக வாழ வழி இருக்கவே செய்கிறது. அது என்ன வழி இனிய வழிதான் அந்தவழி.

திருமாலின் திவ்ய நாமங்களை நினைத்தாலே போதும். தொல்லையில்லை, துயரம் இல்லை. எல்லையில்லாத இன்பந்தான்.

திவ்ய நாமங்களுக்குப் பஞ்சமா என்ன? ஆயிரம் ஆயிரமாக இருக்கின்றன அவனுக்குப் பெயர்கள்.

கண்ணன், சக்கரபாணி, பிரளயமூர்த்தி, அனந்தசயனன் இப்படி எல்லாம் இருக்கத்தானே செய்கின்றன?

இதுகூடச் செய்ய முடியாதவர்கள் அவஷ்தைப்பட வேண்டியதுதான். அதற்கு நாம் என்ன செய்யமுடியும் என்கிறார் ஆழ்வார்.

*''கார்கலந்த மேனியான் கைகலந்த ஆழியான்,*
*பார்கலந்த வல்வயிற்றான், பாம்பணையான் - சீர்கலந்த*
*சொல்நினைந்து போக்காரேல் சூழ்வினையின் ஆழ்துயரை*
*என்நினைந்து போக்குவர்இப் போது''*

(கார் - மேகம். ஆழி - சக்கரம். பார்கலந்த வல்வயிற்றான் - ஏரேழ் பதினான்கு உலகங்களையும் உள்ளடக்கிய பெரிய வயிறு. சீர் கலந்த

சொல் நினைந்து போக்காரேல் - சொல்லச் சொல்லச் சிறப்பளிக்கும் இந்த நாமங்களை உச்சரிக்காதவர்கள். என் நினைந்து போக்குவர் இப்போது - இனி யாரை நம்பி வாழ்நாளைக் கழிப்பார்கள்?)





# மதுரகவி ஆழ்வார்

## கண்ணிநுண் சிறுத்தாம்பு

தமிழ்நாட்டின் தென்கோடியில் உள்ளது திருநெல்வேலி மாவட்டம். அம் மாவட்டத்தின் தென் கிழக்கே உள்ளது திருக் கோளூர். ஒதுக்குப்புறத்தில் உள்ள சிறிய ஊர்தான் திருக்கோளூர்.

நம்மாழ்வார் அவதரித்தது திருக்குருகூர் (ஆழ்வார் திருநகர்). அது பெரிய ஊர், அதன் பக்கம் இருக்கிறது திருக்கோளூர்.

மதுரகவி ஆழ்வாரைப் பெற்றெடுத்த பெருமை வாய்ந்த ஊர் திருக்கோளூர்.

மதுரகவி ஆழ்வாருக்கு நம்மாழ்வாரைவிட வயது அதிகம். வேதம், வேதாந்தம், வியாகரணம் எல்லாம் மதுரகவிக்கு அத்துபடி.

பெரிய பெரிய ஜாம்பவான்களாய் இருந்த பண்டிதர்கள், பாகவதர்கள் எல்லாம் மதுரகவி என்றால் வாயைப் பொத்திக் கொள்வார்கள்.

அவ்வளவு விற்ப்ன்னராகத் - தத்துவப் புலியாக விளங்கினார் மதுரகவி.

நம்மாழ்வார் சைவ வேளாளர் குலத்தில் அவதரித்தார். மதுரகவி ஆழ்வாரோ அந்தணர் குலத்தில் அவதரித்தவர்.

இனி, ஆயிரம் வருடங்களுக்கு முன் தத்துவ விசாரணைகளும் அது சம்பந்தமான தர்க்க விவாதங்களும் நம் நாட்டில் மண்டிப் பெருகின.

அதுவும் இன்றைய உத்தரப் பிரதேசத்தில் கூட்டம் கூட்டமாய் இருந்தார்கள் வியாக்யானகர்த்தர்கள்.

தத்துவ விசாரணையில் ஈடுபட மதுரகவிக்கு ஆசை வந்து விட்டது. வியாக்யானப் புலவர்களுடன் கலந்து உறவாட வடதேசம் புறப்பட்டுவிட்டார் மதுரகவி.

அந்தக் காலத்தில் நடந்துதான் போகவேண்டும். மதுரகவி ஆழ்வாரும் அப்படியே நடந்து போனார். அதனால் பல பிரதேசங் களைக் கண்டு களித்தார்.

பல இடங்களிலும் வாழ்ந்த பல திறப்பட்ட மக்கள், அவர்களுடைய பழக்க வழக்கங்கள், வாழ்க்கை, அதனுள் ஊடுருவிக் கிடக்கும் பக்தி எல்லாவற்றையும் நேராகப் பார்க்க முடிந்தது மதுரகவியால்.

உண்மையைப் பார்க்கப் பார்க்க உணர்வுக்குத் தெம்பு உண்டாகியது. அதனால் வெறும் ஏட்டுப் படிப்பு, ஆராய்ச்சி இவற்றால் உண்டான பாண்டித்யம் எல்லாமே இளக ஆரம்பித்தன. கொஞ்சம் கொஞ்சமாக இளக ஆரம்பித்தன.

ஒவ்வொரு சம்பவங்களையும் ஒவ்வொரு நிகழ்ச்சிகளையும் உணர்வோடு பார்க்க வசதி ஏற்பட்டது ஆழ்வாருக்கு. அதனால் எல்லாம் கடவுள் மயம் என்னும் உண்மை தெளிவுபட்டது.

இந்த உண்மையை எளிமையாகவும் இனிமையாகவும் எடுத்து விளக்குகின்ற பாசுரங்கள் ஞாபகத்துக்கு வந்தன. அடடா, பக்கத்து ஊரில் இருக்கிற நம்மாழ்வார் பாடிய பாசுரங்கள் எவ்வளவு உன்னதமானவை, அவற்றை மதிக்காமல் இவ்வளவு தூரம் வந்து விட்டோமே என்று மறுகினார்.

அதனால் மேலும் மேலும் மெய்யுணர்வு சுடர்விட்டுப் பிரகாசித்தது.

தர்க்கம், ஆராய்ச்சி, சாஸ்திரம், வியாகரணம் எல்லாம் கரைந்து விட்டன. நம்மாழ்வாரின் பாடல்கள் ஒவ்வொன்றும் தெய்வ அவதாரமாயக் கண்முன் வந்து நின்றன. வானத்துக்கும், பூமிக்குமாக ஒரு ஜோதி நிற்பது போல இருந்தது மதுரகவி ஆழ்வாருக்கு.

மதுரகவி ஆழ்வார் அயோத்தி வந்து சேர்ந்தார். ராமச்சந்திரமூர்த்தியை வணங்கி வழிபட்டார். பண்டிதர்கள் பலர் அங்கங்கே உபதேசம் பண்ணுகிறதையும் பார்த்தார். பண்டிதர்களின் பிரசங்கத்தால் அலுத்துப் போனார் ஆழ்வார்!

சுற்றி வளைத்து எதை எதையோ அளந்து கொட்டுகிறார்களே இவர்கள். விஷயத்துக்குள் வந்து நிற்க முடியவில்லையே இவர்களால். ஆனால் நம்மாழ்வாரோ இரண்டே வரிகளில் அநாயசமாக எவ்வளவு பெரிய உண்மையையும் படிய வைத்துவிடுகிறாரே! அடடா, அந்தப் பாடல்களில்தான் எத்தனை சொகுசு, எத்தனை நளினம், எளிமைதான் எப்படி, இனிமைதான் எப்படி?

பாட்டென்றால் நம்மாழ்வார் பாட்டுத்தான் பாட்டு.

ஞானி என்றால் அவர் ஒருவர்தான், இப்படி ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டார் மதுரகவி.

அயோத்தியில் இருப்புக் கொள்ளவில்லை மதுரகவிக்கு. மளமளவென்று திருக்கோளூருக்கே வந்துவிட்டார்.

நம்மாழ்வாரையே மனசில் நிறுத்தித் தியானித்து வந்ததால், இதயம் முழுவதும் வெளிச்சம் நிறைந்திருந்தது. அந்த வெளிச்சம் நடந்து வந்த பாதை முழுவதும் படர்ந்து வழி காட்டியது.

அப்படியே திருக்குருகூர் (ஆழ்வார் திருநகர்) வந்தார். நம்மாழ் வாரைத் தரிசித்தார். ஆனந்தக் கண்ணீர் விட்டார். பரம சிஷ்யனாகி விட்டார் நம்மாழ்வாருக்கு.

நம்மாழ்வார்தான் மதுரகவிக்குக் கண்கண்ட தெய்வம். போகிற இடங்களில் எல்லாம் நம்மாழ்வார் பாடல்களையே பாடிப்பாடி விளக்கினார்.

நம்மாழ்வார் பரமபதம் சென்றபின் அவருக்குக் கோவில் கட்டினார். நித்திய வழிபாடுகள் நடத்தினார். தேர், திருவிழாவுக் கெல்லாம் ஏற்பாடு செய்துவிட்டார்.

அது மட்டுமா?

நம்மாழ்வாரையே தெய்வமாக வழிபட்டார். நம்வாழ்வார் மேலேயே பாசுரங்கள் பாடினார். இது ஓர் அதிசயம். இன்னொரு அதிசயம் இவர் பாடிய பாடல்கள் பதினொன்றுதான்.

பதினோரு பாசுரங்கள். அதுவும் பகவான் மேல் இல்லை. ஆழ்வார் மேல் பாடியதுதான். ஆனாலும் ஏனைய ஆழ்வார்கள் போலவே இவரும் ஆழ்வராகிவிட்டார். பன்னிரண்டு ஆழ்வார்களில் இவரும் ஒருவராகிவிட்டார்.

உடல், பொருள், ஆவி எல்லாவற்றையும் நம்மாழ்வாருக் காகவே அர்ப்பணம் செய்த பரம பக்தர் மதுரகவி. இனி அவர் பாடிய பாசுரங்களில் சிலவற்றைப் பார்க்கலாம்,

(1)

ஆயர்பாடியில் வெண்ணெய் திருடி உண்டவன் கண்ணன். அதனால் தயிர் கடையும் மத்தால் அடிபட்டான். தாம்புக் கயிற்றால் கட்டப்பட்டான். உரலோடு உரலாகக் கட்டி வைக்கப் பட்டான் கண்ணன்.

இறைவனே இப்படி ஒரு நிலைக்கு ஆளானால் அதைத் திருவிளையாடல் என்றுதானே சொல்ல வேண்டும். இப்படி எல்லாம் மாய விளையாட்டு விளையாடுவதனால்தான் அவனுக்கு மாயன் என்று பெயர்.

கண்ணனாக அவதாரம் எடுத்ததும் திருவிளையாடல்தான். நம்மாழ்வாராக அவதரித்ததும் திருவிளையாடல்தான் பிறகு.

இந்த உண்மையை நான் கண்டு கொண்டேன் என்கிறார் மதுரகவி. கண்டு கொண்டதால் என் நெஞ்சம் முழுவதும் இனிக்கின்றது என்கிறார்.

இந்த அனுபவத்தைச் சொல்லச் சொல்ல என் நாவில் தித்திப்பு ஏறுகிறது. அமுதமாக ஊறுகிறது என்கிறார்.

இப்படிச் சொல்லி ஆடிப்பாடுகிறார் மதுரகவி.

இனிப் பாடல் -

*"தான தன்னன*
*தானன தானன.*
***கண்ணி நுண்சிறுத் தாம்பினால் கட்டுண்ணப்***
***பண்ணி யபெரு மாயனே! பாரினில்***
***நண்ணி யகுரு கூர்நம்பி என்றக்கால்***
***அண்ணிக் கும்அமுது ஊறும்என் நாவுக்கே"***

(கண்ணி நுண் சிறுதாம்பு - கண்ணி கண்ணியாகப் பின்னப் பட்ட கயிறு. கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன் - உரலோடு சேர்ந்து கட்டுப்பட கிருஷ்ணாவதாரம் எடுத்த திருமால்தான். பாரினில் நண்ணிய திருக்குருகூர் - உலகில் உள்ள ஊர்களில் எல்லாம் இனிய ஊராக விளங்கும் குருகூர். நம்பி என்றக்கால் - அந்தக் குருகூரில் அவதரித்த நம்மாழ்வாரும் திருமாலின் திருவிளையாடல் தான் என்பது விளங்கிவிட்டால், விளங்கியதைச் சொல்ல ஆரம் பித்தால். அண்ணிக்கும் - தித்திக்கும், நாவில் அமிர்தம் ஊறும்.)

**குறிப்பு :** *பக்திரசம் பாடலில் சொட்டுச் சொட்டென்று சொட்டு கிறது. தேனாய்ச் சொட்டுகிறது.*

(2)

மேலும் சொல்கிறார் மதுரகவி:

*"என் கண்கண்ட தெய்வம் நம்மாழ்வார்தான். இது சத்தியம். இந்த உண்மையைச் சொல்லச் சொல்ல எனக்குப் புளகாங்கிதம் உண்டாகிறது. நம்மாழ்வாரின் பாடல்களைத் தெருத் தெருவாக நான் பாடவேண்டும். அதற்கு ஏற்றபடி ஆடவேண்டும். அதுதான் எனக்கு ஆனந்தம். அப்படித்தான் நான் செய்து வருகிறேன்."*

***"நாவி னால்நவிற்று இன்பம்அது எய்தினேன்;***
***மேவி னேன்அவன் பொன்னடி மெய்ம்மையே;***
***தேவு மற்றறி யேன்குரு கூர்நம்பி***
***பாவின் இன்னிசை பாடித் திரிவனே"***

(நவிற்று இன்பம் - சொல்லச் சொல்ல உண்டாகும் சுகம். மெய்ம்மையே - இது சத்தியம். தேவு - தெய்வம். பாவின் - பாடல்களின். எய்தினேன் - பெற்றேன். மேவினேன் - சரணம் என அடைந்தேன்.)

**குறிப்பு :** மேடை ஏறிக் கூடி இருக்கும் மக்களுக்குச் சொல்வது போல இருக்கிறது பாட்டு.

(3)

பக்தியைப் பற்றி வைதீகத்துக்கு என்ன தெரியும்? அந்தணர் குலத்தைச் சேர்ந்த ஒருவர், வேளாளர் குலத்தைச் சேர்ந்த ஒருவரை, ''நீரே தெய்வம்'' எனச் சரணாகதி அடைந்தால் அதைத் தாங்க முடியுமா வைதீகர்களால்.

ஆத்திரப்பட்டார்கள். புத்திமதி சொன்னார்கள். அரட்டிப் பார்த்தார்கள். மிரட்டியும் பார்த்தார்கள்.

ஒன்றுக்கும் மசியவில்லை மதுரகவி.

'நீ பிராமணனே இல்லை' என்று மதுரகவியை ஒதுக்கி வைத்தார்கள். நீ மிலேச்சன், புலையன், ராட்சசன் என்றெல்லாம் வாய்க்கு வந்தபடி மதுரகவியைத் திட்டினார்கள். பிறகு ஜாதியை விட்டே தள்ளி வைத்துவிட்டார்கள் மதுரகவியை.

ஒன்றும் விளங்கமாட்டேன் என்கிறதே பண்டிதர்களுக்கு. அதுதான் பாண்டித்யமோ என்று அனுதாபப்பட்டார் ஆழ்வார்.

இறைவன் நம்மைச் சோதிக்கிறான் என்று நினைத்தார். இறைவனுக்கு உகந்த சோதனைப் பொருளாக அல்லவா நாம் இருக்கிறோம் என்று மகிழ்ந்தார்.

தங்கத்தைத்தானே புடம்போட்டு எடுப்பார்கள். பித்தளையை யாராவது செய்வார்களா என்று பெருமிதம் அடைந்தார். அதனால் தீவிரம் அடைந்தது பக்தி.

அது எப்படி வாய் திறந்து பேசுகிறது என்று பாருங்கள்.

*''நன்மை யால்மிக்க நான்மறை யாளர்கள்*
*புன்மை யாகக் கருதுவர் ஆதலின்;-*
*அன்னை யாய்அத்த னாய்என்னை ஆண்டிடும்*
*நன்மை யான்சட கோபன்என் நம்பியே!''*

(நன்மையால் மிக்க நான்மறையாளர்கள் - சகல சௌகர்யங் களும் நிரம்பப் பெற்ற (வேதப்) பிராமணர்கள். புன்மையாகக் கருதுவர் - அற்பனிலும் அற்பன் என்றுதான் என்னைப் பற்றி முடிவு கட்டி இருக்கிறார்கள். அன்னை - தாய், அத்தன் - தந்தை, தாயும் தந்தையுமாய் நின்று நம்மாழ்வார் என்னை ஆதரிக்கிறார். நான் ஏன் கவலைப்படவேண்டும்?)

(4)

உண்மையைச் சொல்லிவிட வேண்டும் என்றும் ஆத்திரத்தில் கூட்டம் கூட்டி மேடைபோட்டுப் பேசுவதைப் போல் மதுரகவி சொன்னார். கடைசியாக மேடையை விட்டு இறங்குவதற்கு முன் உள்ளம் உருகி, உயிர் உருகி, கண்ணீர் மல்க ஒன்று சொல்கிறார்.

''பெரியோர்களே! குருகூர் நம்பி (நம்மாழ்வார்) எனக்கு மட்டுமல்ல, உங்கள் ஒவ்வொருவருக்கும், உலக மக்கள் எல்லோருக்குமே உள்ள உடன் பிறப்பாவார் (அன்பன்).

தன்னைத் தஞ்சம் என்று அடைந்தவர்களுக்கோ குருகூர்ப் பிரான் தன்னையே கொடுத்து விடுகிறார்.

அந்த மாபெரும் புருஷனின் அடைக்கலப் பொருளாகும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. அதனால் நான் சொல்வதை நம்புங்கள். மோசம் போக மாட்டீர்கள், நன்மையே விளையும்.''

இனிப் பாடல் -

*"அன்பன், தன்னை அடைந்தவர் கட்கெல்லாம்*
*அன்பன், தென்குரு கூர்நகர் நம்பிதன்*
*அன்ப னாய்மது- ரகவி சொன்னசொல்*
*நம்பு வார்பதி வைகுந்தம் காண்மினே!"*

''என் சொல்லை நம்புகிறவர்கள் வைகுந்த பதவி (பேரானந்த நிலை) பெறுவார்கள். அதை நீங்களே உங்கள் அனுபவத்தில் பார்க்கத்தான் போகிறீர்கள்.''

இப்படிச் சொல்லிவிட்டு மேடையை விட்டு இறங்குகிறார் மதுரகவி ஆழ்வார்.

நம்மாழ்வார் வாழ்க, மதுரகவி வாழ்க என்று ஆர்ப்பரிக்கிறது கூட்டம்.

**குறிப்பு** : தமிழும் பக்தியும் மாப்பிள்ளையும் பெண்ணும் போல. பார்ப்பதற்கு இரண்டு பேராகத் தெரிந்தாலும் உண்மையில் ஒருவர்தான்.

மதுரகவி ஆழ்வாரின் பாசுரங்கள் இதைத் தெளிவுப் படுத்துகின்றன.





# திருமழிசை ஆழ்வார்

**செ**ன்னைக்கு மேற்கே பத்துமைல் தொலைவில் உள்ளது திருமழிசை என்னும் ஊர். திருமழிசையில் பிறந்ததால் **திருமழிசை ஆழ்வார்** என்னும் பெயரே நிலைத்து விட்டது ஒரு மகானுக்கு.

திருமழிசை ஆழ்வார் முதலில் சைவ மதத்தில்தான் இருந்தார். ஆனாலும் சும்மா இருக்கவில்லை. ஒவ்வொரு மதமும் என்ன சொல்கின்றன என்று தெரியத் துடித்தார். சகல மத சாஸ்திரங் களையும் ஆவேசம் கொண்டு படித்தார் அமைதி பெற.

வைணவம் சம்பந்தமான பக்தி இலக்கியங்களில் ஈடுபாடு ஏற்பட்டது. முதலாழ்வார் மூவரில் ஒருவராகிய பேயாழ்வார் மூலம் வைணவ சமயத்தின் தீவிர பக்தரானார்.

இவருடைய சிஷ்யர் கணிகண்ணர்.

தம்மை எதிர்த்து வாதிட்ட சித்தர்கள் பலரை அடக்கினார் திருமழிசை ஆழ்வார். சிவபெருமானையே நேருக்கு நேர் நின்று வாதிட்டார் திருமழிசை ஆழ்வார்.

வேதப் பிராமணர்களின் செருக்கை அடக்கினார். ஆனாலும் கணிகண்ணன் என்னும் சிஷ்யனுக்காகக் காஞ்சிபுரத்தைவிட்டு வேறிடம் போய்த் தங்கினார்.

சிலநாள் சென்றன. கணிகண்ணன் காஞ்சிபுரம் போகலாம் என வேண்டினான். அவன் வேண்டுகோளை ஏற்று மறுபடியும் காஞ்சி நகர் வந்து சேர்ந்தார்.

திருமழிசை ஆழ்வார் பாடல்களில் வேகம் அதிகம். தெளிவும் அதிகம்தான். இவர் கையாளும் துள்ளலும் துடுக்கும் மிக்க உல்லாசச் சந்தங்கள் சொற்களின் குடுமியைப்பிடித்து ஆட்டும்.

மின் வெட்டுப்போல பளிச் பளிச் என்று துள்ளிவிழும் அனுபவமும் உணர்ச்சியும். தேய்த்துத் தேய்த்து மெருகூட்டும் சத்தம் அழுத்தி அழுத்தி உணர்ச்சிக்கு மெருகூட்டும் இவர் கையாளும் நடைகள்.

பேரம் பண்ணுவதோ, தாட்சண்யம் காட்டுவதோ இவருக்கு பிடிக்காது. சொன்னால் சொன்னதுதான். பின்வாங்க மாட்டார்.

விஷயமும் சொல்லும் அப்படி வெட்டொன்று துண்டு இரண்டு என்று வந்து விழும்.

இனி ஆழ்வாரின் பாடல்.

(1)

வானம், காற்று, தீ, நீர், மண் என்னும் இந்த ஐந்து தத்துவங்கள்தாம் அடிப்படை. இவற்றின் சேர்க்கைதான் சகலமும்.

ஆகாயம் என்பது சக்தி மயம். அதுவே காற்றாக மாறியது. காற்றிலிருந்து தீ, அதிலிருந்து நீர், நீரிலிருந்து மண் இப்படி முறைப்படி வந்தன. அதனால் குணங்களும் கூடிக்கொண்டே வந்தன.

உதாரணமாக காற்றிடம் இரண்டு குணங்கள். ஒன்று ஆகாய குணம். மற்றொன்று காற்றின் குணம். அப்படியே நெருப்பில் மூன்று குணம். நீரில் நான்கு, நிலம் என்னும் பூமியில் ஐந்து குணம்.

இவ்வளவுக்கும் ஆதாரம் ஒன்று வேண்டுமே. அந்த மூல ஆதாரந்தான் இறைவன், மகாவிஷ்ணு.

*"தான தான*
*தன்ன தன்*
*தன்ன தான*
*தான தன்*
*பூநி லாய*
*ஐந்து மாய்ப்*
*புனல்க்கண் நின்ற*
*நான்கு மாய்,*
*தீநி லாய*
*மூன்று மாய்,*
*சிறந்த கால்*
*இரண்டு மாய்*
*மீநி லாயது*
*ஒன்றும் ஆகி*
*வேறு வேறு*
*தன்மை யாய்*
*நீநி லாய*
*வண்ணம் நின்னை*
*யார்நி னைக்க*
*வல்ல ரே!"*

(பூ - பூமி. புனல் - நீர். கால் - காற்று. மீ - ஆகாயம். நீ நிலாய வண்ணம் - இறைவனே நீ தரிக்கும் புதுப்புதுக் கோலங்களை. யார் நினைக்க வல்லர் -ஒருவராலும் கண்டு கொள்ள முடியாது. அப்படிச் சர்வ வியாபகமாய் நிறைந்துள்ளது உன்னுடைய லீலை.)

(2)

சமுத்திரத்தில் அலைகல் மலைமலையாய் உதிக்கின்றன. பிறகு நீரோடு நீராய் அதே சமுத்திரத்தில் கரைந்து விடுகின்றன அலைகள்.

அண்ட பகிரண்டங்களின் நிலையும் அப்படியே! கடவுள் தத்துவத்திலிருந்து நிமிர்கின்றன. பழையபடி அங்கேயே ஒடுங்கி விடுகின்றன.

அலை, சூழல், ஓட்டம், ஒடுக்கம் எல்லாம் சமுத்திரந்தான். அண்ட பிண்ட சராசரங்கள் அவ்வளவும் இறைவன்தான்.

இதோ பாடல் -

"தன்னு ளேதி
ரைத்தெ ழும்த
ரங்க வெண்தி
ரைக்க டல்,

தன்னு ளேதி
ரைத்தெ ழுந்து
அடங்கு கின்ற
தன்மை போல்,
நின்னு ளேபி
றந்து வந்து
நிற்ப வும்தி
ரிப வும்
நின்னு ளேஅ
டங்கு கின்ற
நீர்மை நின்கண்
நின்ற தே"

(தன்உள்ளே - தனக்குள்தானே. திரைத்து எழும்தரங்கம் - திமிறி எழுகிற அலைகள். வெண்திரைக் கடல் - வெள்ளை வெளே ரென்று பாய்ந்து வரும் அலைகளோடு கூடிய சமுத்திரம். தன்னுளே திரைத்து எழுந்து அடங்குகின்ற தன்மைபோல் - சமுத்திரமே அலைகளாக எழுந்து சமுத்திரமாகவே ஒடுங்குகிறது என்று தான் சொல்ல வேண்டும். நின்உள்ளே பிறந்த வந்து நிற்பவும் திரிபவும்

**- அதுபோல் இறைவனே! உன்னிடம் உண்டாகி நின்றும் நடமாடியும் தோன்றும் சகலமும். நின்உளே அடங்குகின்ற நீர்மை - பிறகு உன்னுள்ளேயே ஒடுங்கி விடுகின்றன. இந்த உண்மை, அடிப்ப டையான உண்மை. நின்கண் நின்றது - உன்னிடம் நிறைந்துள்ளது. உன்னைப் பார்க்கிறவர்களுக்கு அது புரியும்.)**

(3)

*திருமாலின் கையில் சக்கரம் இருக்கிறது. சக்கரம் இருக்கும் அந்தக் கைதான் விளங்கனியைக் குலைகுலையாய் உதிர்த்தது. முதலையின் வாயைப் பிளந்தது.*

*கையின் கதை அப்படி இருக்கட்டும். இனி அவன் வயிற்றைப் பார்த்தால் - வயிற்றினுள் பார்த்தால் யசோதை கொடுத்த பாலும் இருக்கிறது. பூதகி என்னும் பேய்ச்சியின் பாலும் இருக்கிறது. அது மட்டுமா, திருடி உண்ட வெண்ணையும் இருக்கிறது. ஈரேழு புவனங்களாய் மண்ணும் இருக்கிறது.*

*மென்று விழுங்கிய மண்ணையே (பூமியையே) வராக அவதாரம் எடுத்துக் காப்பாற்றினான் திருமால்.*

*அவன் காரியம் ஒவ்வொன்றும் அதிசயந்தான். இதை அவனிடமே சொல்லி மகிழ்கிறார் ஆழ்வார்.*

***"காய்த்த நல்வி<br>ளங்க னிஉ<br>திர்த்து,எ திர்ந்த<br>பூங்கு ருந்து<br>சாய்த்து, மாபி<br>ளந்த கைத்த -<br>லத்த கண்ணன்<br>என்ப ரால்;-<br>ஆய்ச்சி பாலை<br>உண்டு, மண்ணை<br>உண்டு, வெண்ணெய்<br>உண்டு, பின்<br>பேய்ச்சி பாலை<br>உண்டு பண்டோர்<br>ஏனம் ஆய<br>வாம னா!"***

(விளங்களி உதிர்த்து எதிர்ந்த குருந்து சாய்த்து - கனியை உதிர்த்தும் குருந்தைச் சாய்ந்தும். மாபிளந்த கை (தலத்த) கண்ணன் - முதலையின் வாயைப் பிளந்த சக்கரம் தரித்த கையை உடைய கிருஷ்ணனே (வாமனன்) என்கிறார்கள். இது உண்மைதானா என்று கேட்கிறார் ஆழ்வார். பேயச்சி - பூதகி. ஏனம் - வராகம்.)

(4)

இனி, மலை என்கிற ஒன்றை வைத்துக் கொண்டே திரு மாலுடன் செண்டாட்டம் ஆடுகிறார் திருமழிசையார்.

எப்படி?

பெருமானே! மலையை எடுத்துப் போட்டுக் கடலைக் கலக்கினாய். ஏன்? அமிர்தம் எடுக்க!

பிறகு மலைகளை (பாறை) எடுத்துப் போட்டு சமுத்திரத்தில் அணை கட்டினாய். ஏன்? கடல் சூழ்ந்து மலையரணால் பாதுகாக்கப்படுகிற இலங்கையை அழிக்க!

இவ்வளவுதானா? மலையையே குடையாகத் தூக்கிப் பிடித்து அடை மழையிலிருந்து பசுமந்தையைக் காப்பாற்றினாய்.

மழை போன்ற நீலநிற வண்ணனாகிய நீ மழைக்கே எதிர் வேலை செய்தாய். எல்லாம் வேடிக்கைதான்!

"வெற்பெ டுத்து
வேலை நீர்க
லக்கி னாய்,அ
தன்றி யும்
வெற்பெ டுத்து
வேலை நீர்வ
ரம்பு கட்டி
வேலை சூழ்
வெற்பெ டுத்த
இஞ்சி சூழ்இ
லங்கை கட்ட
ழித்த நீ
வெற்பெ டுத்து
மாரி காத்த
மேக வண்ணன்
அல்லை யோ!"

(வெற்பு - மலை. வேலை - கடல். வரம்புகட்டி - கரைபோட்டு. இஞ்சி - கோட்டை. கட்டழித்த - நிர்மூலமாக்கிய. மாரி - மழை.)

**குறிப்பு :** அடடா, நீதானே மழை. அதை எதிர்ப்பதும் நீதானா? என்னும் நையாண்டி பாடலில் கிடக்கிறது.

(5)

அக்கினி மயமான ராமபாணம் ஒன்று. சமுத்திரத்தையே தரதரவென்று கொதிக்க வைத்துவிட்டது.

வெந்து ஆவியாய்ப் போய்விடுமோ சமுத்திரம் என்று தேவர்களே பயந்து விட்டார்கள்.

அப்படி ஓர் அம்பு, அதைத் தாங்கிய வில்லொன்று. அந்த வில்லை ஏந்திய வள்ளல் ராமச்சந்திரமூர்த்தி.

அவன் எழுந்தருளி இருக்கும் இடம் திருவரங்கம்.

வளமான ஊர் திருவரங்கம். முனிவர்களும், தேவர்களும் தரிசனத்துக்காகக் காத்துக்கிடக்கும் ஊர் திருவரங்கம்.

*"வெண்தி ரைக்க*
*ரும்க டல்சி*
*வந்து வேவ,*
*முன்னொர் நாள்*
*திண்தி றல்சி*
*லைக்கை வாளி*
*விட்ட வீரர்*
*சேரும் ஊர்!*
*எண்தி சைக்க*
*ணங்க ளும்இ*
*றைஞ்சி ஆடு*
*தீர்த்த நீர்*
*வண்டி ரைத்த*
*சோலை வேலி*
*மன்னு சீர்அ*
*ரங்க மே"*

(வெண்திரைக் கருங்கடல் - கடல் கருப்பு (நீல நிறம்) தான். ஆனாலும் வெள்ளை வெளேரென்று அலைகளின் மயமாக இருக்கும். சிவந்து வேவ - அது அனலாய்க் கொதித்துச் சிவக்கும்படி. திண்திறல் சிலை - வலிய கோதண்டம். வாளி - அம்பு. கணங்கள் - முனிவர் கூட்டம். இறைஞ்சி - வழிபட்டு. தீர்த்த நீர் ஆடு - தீர்த்தமாடும் இடம். வண்டு இரைத்த சோலை வேலி மன்னு சீர் அரங்கமே - ரீங்காரமிட்டு வண்டு மொய்க்கும் பூந்தோட்டங் களால் சூழப்பட்ட திருவரங்கம்.)

**குறிப்பு :** கருமை, வெண்மை, செம்மை இப்படி ஒரு வண்ணக் கலவை. பிறகு - கோபத்தில் கொதித்த இராமனுக்குக் குளிர் தரு நிழல். (திருவரங்கம்)

(6)

*உலகங்கள் அவ்வளவையும் உண்டாக்கின (சிருஷ்டி) பிரம்மாவே திருவரங்கத்தைத் தேடி வருவார். வந்து பெருமாளைச் சேவித்தபின்தான் அடுத்த வேலையைத் தொடங்குவார்.*

*காவிரி ஆறோ திருவரங்கத்தைச் சுற்றிச் சுற்றி வருகிறது.*

*ராவண சம்காரம் முடித்து அலுப்புத் தீர பெருமாள் அமர்ந்த இடமல்லவா திருவரங்கம்.*

*"சரங்க ளைத்து*
*றந்து வில்வ*
*ளைத்து,இ லங்கை*
*மன்ன வன்*
*சிரங்கள் பத்த*
*றுத்துஉ திர்த்த*
*செல்வர் மன்னு*
*பொன்ந கர்-;*
*பரந்து பொன்றி*
*ரந்து நுந்தி*
*வந்த லைக்கும்*
*பாய்பு னல்*
*அரங்கம் என்னும்*
*நான்மு கத்த -*
*யன்ப ணிந்த*
*கோயி லே!"*

(சரங்களை துறந்து - அம்புகளை ஏவி. சிரங்கள் பத்து அறுத்து உதிர்த்த செல்வர் - ராவணனுடைய தலைகள் பத்தையும் வெட்டி, உருட்டிய ராமச்சந்திரமூர்த்தி. பொன்நிரந்து - தங்கத்தை வாரிக் கொண்டுவந்து. நுந்தி - கரையில் தள்ளி. நான்முகத்த அயன் பணிந்த கோயில் - பிரம்மா வந்து வழிபட்ட கோயில், அரங்கம் அதுதான். ராமன் வந்து இளைப்பாறிய தலம்.

(7)

*திருவரங்கம் என்றால் அங்கு பக்தர் கூட்டந்தான். பக்தர் என்றால் அரசனிலிருந்து ஆண்டிகள் வரை எல்லோருந்தான்.*

முனிவர்கள், ஞானிகள், யோகிகள் இவர்கள் கூட்டமும் அதனுள் அடங்கும்.

திரிதண்டம் ஏந்திய கையினராய் திருவரங்கத்தைச் சுற்றிச் சுற்றி வருவார்கள் முனிவர்கள்.

காரணம் என்ன?

ஸ்ரீமந் நாராயணனே எழுந்து வந்து அருள் பாலிக்கிறான் திருவரங்கத்தில்.

மூர்க்கத் துணிச்சலோடு தாக்க வந்த மதயானையின் கொம்பை ஒடித்து புழுதியோடு புழுதியாய் அதைப் பிரட்டி உருட்டியவன் பெருமான்.

சயனகோலத்தில் அவன் அருள் பாலிக்கும் இடம் திரு வரங்கம்.

"பொற்றை உற்ற
முற்றல் யானை
போர்எ திர்ந்து
வந்த தை
பற்றி உற்று
மற்ற தன்ம -
ருப்பொ சித்த
பாகன் ஊர்-;

முற்றல் மூங்கில்
மூன்று சேர்ந்த
தண்டி னர்
அற்ற பற்றர்
சுற்றி வாழும்
அம்தண் நீர்அ
ரங்க மே!"

(பொற்றை உற்ற முற்றல் யானை - மலைபோல் பருத்த யானை. மருப்பு ஒசித்த - தந்தங்களை ஒடித்த. சி(ற்)று எயிற்று - சின்னஞ்சிறு முளைகளோடு கூடிய. முற்றல் மூங்கில் மூன்று சேர்ந்த தண்டினர் - முற்றிய மூங்கிலில் செய்த திரிதண்டம் ஏந்திய முனிவரா்.

(8)

"கும்பகோணத்தில் கோயில் கொண்டு எழுந்தருளி இருக்கும் ஆரா அமுதன் பொல்லாத ஆசாமிதான்"

இப்படிச் சொல்வது நாமல்ல. பரமபக்தரான திருமழிசை ஆழ்வாரின் வாக்குமூலந்தான் இது.

*அதை எப்படி விளக்குகிறார்?*

மாதக் கணக்கில் கும்பகோணத்தில் நான் தங்கினேன். தினந்தோறும் பெருமானைத் தரிசித்தேன். புன்முறுவல் பூத்தவனாய் என்னிடம் அவன் சொன்னது, ''உனக்காக நான் இங்கேயே இருக்கிறேன், பயப்படாதே'' என்று.

*சரி என்று நானும் ஒப்புக் கொண்டேன்.*

திருவேங்கடமுடையான் நினைப்பு ஒருநாள் வந்தது, சேவித்துவிட்டு வரலாமே என்று கிளம்பினேன். திருமலையில் போய்ப் பார்த்தால் அதே ஆரா அமுதன், அதே கும்பகோணத்து ஆசாமி. எனக்கு முன்பே கோவிலில் வந்து எழுந்தருளி இருக்கிறான்.

*என்ன அதிசயம் இது!*

*செழும்கொ ழும்பெ*
*ரும்ப னிபொ*
*ழிந்தி டஉ*
*யர்ந்த வேய்*
*விழுந்தெ ழுந்து*
*வந்து விண்பு*
*டைக்கும் வேங்க*
*டத்து ளே*
*எழுந்து வந்து*
*நின்ற தேவன்*
*பூம்பொ ழில்த*
*ழைக்கொ ளும்*
*செழும்த டம்கு -*
*டந்தை யுள்கி*
*டந்த மாலும்*
*அல்லை யோ!*

(வேய் - மூங்கில். 'செழும் கொழும் பெரும்பனி பொழிந்திட உயர்ந்த வேய்' என்பதுதான் சந்தத்தில் அப்படி அப்படித் துண்டுபடுகிறது. கல்மழை போல் பெருமழை (பனி) கொட்ட செழித்துக் கொழுத்த மூங்கில் என்பது பொருள். விண் - ஆகாயம். பூம்பொழில் தழை கொள்ளும் குடந்தை - சோலைகளையே ஆடையாகக் கொண்ட கும்பகோணம்.)

(9)

*''நீர்தானே எனக்கு முன்னே அங்கே வந்து நின்றீர்'' என்று* பெருமானிடமே கேட்ட திருமழிசை ஆழ்வார், வியப்புத் தாங்க

முடியாமல் திணறுகிறார். விஷயம் விளங்கிவிட்டது என்று துள்ளுகிறார்

எப்படி?

எங்கும் நிறைந்தவர் பெருமான். எப்பொழுதும் உள்ளவர் பெருமான். காலமும், இடமும் அவருள்தான் இயங்குகின்றன. காலம் ஓட ஓட பெருமானுக்கு ஒரு மாதிரியாக இருந்தது. அதனால் திரு ஊரகத்தில் வந்து நின்றார். திருப்பாடகம் என்னும் தலத்தில் வந்து உட்கார்ந்திருந்தார். திருவெஃகா வந்து சயன கோலத்திலேயே காட்சி தந்தார்.

அப்பொழுதெல்லாம் நான் பிறக்கவில்லை. பிறந்தேனோ இல்லையோ நான். எல்லா இடங்களிலிருந்தும் மூட்டை கட்டிக் கொண்டு என் நெஞ்சத்தையே தஞ்சமாக வைத்து அமர்ந்து விட்டார்.

நிற்பது, இருப்பது, படுத்திருப்பது எல்லாமே என்னுள்தான். இப்படி வருகிறது பாட்டு.

"நின்ற(து) எந்தை
ஊர கத்து,
இருந்தது எந்தை
பாட கத்து
அன்றி வெஃக
ணைக்கி டந்தது
யான்இ லாத
முன்எ லாம்;
அன்று நான்பி
றக்க இல்லேன்
இன்று நான்பி
றந்த பின்
நின்ற தும்இ
ருந்த தும்கி
டந்த தும்என்
நெஞ்சு ளே"

(பிறக்ககில்லேன் - பிறக்கவில்லை. ஏன் அங்கே இங்கே என்று பெருமாள் போனார் என்றால் அப்பொழுதெல்லாம் நான் பிறக்கவில்லை. பிறந்திருந்தால் போயிருக்க மாட்டார்.)

**குறிப்பு :** அற்புதமான பாடல். அரிய உணர்ச்சி நிலையை - மன இயலை அப்படியே கையில் எடுத்துக் காட்டுகிறது பாசுரம்.

முந்தின பாசுரத்திலேயே இந்த மனோ தத்துவ மாளிகைக்கு அடிக்கல் நாட்டியாகி விட்டது.

(10)

எவ்வளவு லகுவாய் ஏமாந்து விடுகிறோம் பல காரியங்களில்?

இரண்டு ரூபாய் கூடப் பெறாது மாம்பழம். அது அழுகி வீணாகுகிறதே என்று வயிறு எரிகிறது. விலைக்கு வாங்க ஆளில்லையே என்று எரிச்சல் வருகிறது. கடைசியில் சாப்பிட்டே தொலைக்கிறோம்.

வேண்டாத வேளையில் - வயிறு மந்தமாக இருக்கிற பொழுதே சாப்பிட்டுத் தொலைக்கிறோம். அழுகிக் குளு குளுத்த மாம்பழத்தைக் கூடத் தூர எறிய மனம் இல்லை.

பிறகு என்ன நடந்தது?

ரூபாய் இருபத்தைந்தோ, முப்பதோ வைத்தியருக்கு அழுது தொலைத்தோம். அது மட்டுமா? இரண்டு மூன்று நாள்களாக நாய் படாதபாடு.

மனிதனுக்கு இது தேவைதானா?

சரி, செய்தது இப்படி, இனி செய்யாது விடுகிற காரியங் களிலும் பல பல ஏமாந்த கதைதான்.

ஐந்து தலை முறைக்குப் போதும் ஒருவனுக்கு சொத்து. அவனுக்கு ஒரே மகன். பையன் நன்றாகப் படித்தான். படித்த வகுப்பில் எல்லாம் தேறிவிட்டான். உத்யோகமும் கிடைத்தது. படிப்படியாக உத்யோகம் ஏறிக் கொண்டது. பெரிய பதவியில் அமர தில்லிக்கே போய்விட்டான்.

கைநிறையச் சம்பளம். கண்ணுக்குக் குளுமையான மனைவி, படுசுட்டியான இரண்டு பிள்ளைகள். நண்பர் கூட்டம். பணியாளர் பட்டாளம். ஜாம் ஜாம் என்று ஓடுகிறது பையன் வாழ்க்கை.

ஆண்டுதோறும் மூன்று தடவை நான்கு தடவை என்று சென்னைக்கு வரத்தான் செய்கிறான். மாமியார் வீடு, மைத்துனர் வீடு என்று எங்கெங்கோ ஓடுகிறான்.

தன்னொத்த அதிகாரிகள் வீட்டில் விருந்து(கள்) வேற. ஒரே கும்மாளிதான்.

நண்பர்கள் வீடு என்றால் பாக்கி வைக்கமாட்டான். வரும் பொழுதே யார் யார் வீட்டில் எத்தனை எத்தனை மணி நேரம் என்று அட்டவணை போட்டே வருவான்.

ஆனால் பெற்ற தாயும், தகப்பனும் இருக்கத்தானே செய்கிறார்கள். வயதாகிவிட்டபடியால் துணை இன்றி அநாதைகள் போலக் கிடக்கத்தானே செய்கிறார்கள். அவர்களுடன் ஒரு நாளோ இரண்டு நாளோ தங்கி அவர்களுக்கு ஆறுதல் கொடுக்க முடிகிறதா இவனால்.

இருபது நிமிடம் அல்லது இருபத்தைந்து நிமிடம் என்று கணக்குப் போட்டுத்தான் இவர்களைப் பார்க்க வருகிறான். ஆர்வம் பொங்கும் தாய், தந்தையர் முகத்தைக் கூடப் பார்க்க மாட்டேன் என்கிறான். கடிகாரத்தையும் அதன் சின்ன முள்ளையும், பெரிய முள்ளையுமே பார்க்கிறான். அவ்வளவுதான் சிட்டாய்ப் பறந்து விடுகிறான்.

உருப்படுவானா இவன்?

'முட்டாளுக்கு முட்டாள் தெண்டனிட்டேன்' என்கிற கணக்கில் இவனுக்குப் பிறக்கிற பிள்ளைகளும் இவனை இந்த லட்சணத்தில்தான் நடத்துகின்றன.

ஒரு பருவம் வந்ததும், உத்யோகம் இவனைக் கழற்றி விடுகிறது. வயது ஏறுகிறது. பொழுது போகமாட்டேன் என்கிறது. ஆடிக்கு ஒரு முறை அமாவாசைக்கு ஒருமுறை என்று பழைய சேக்காளிகளில் ஒன்றிரண்டு பேர் பார்க்க வருகிறார்கள்.

அவர்களுக்குக் காபி - வெறும் காபி என்று கேட்டாலே போதும். நண்பர்கள் வாசல்படி கடப்பதற்குள், ''நீர் பிழைத்த பிழைப்புக்கு தினந்தோறும் விருந்தினர் வேறு கேடா? உமக்குப் போடுகிற தெண்டம் போதாதென்று கண்ட கண்ட சனியன்களுக்கும் கொட்டி அழ இது என்ன சத்திரமா?''

பெற்றெடுத்த புத்திர பாக்கியமே மேலே கண்டபடி சீறுகிறான். ''எல்லாமே நீங்கள் கொடுக்கிற இளக்காரம்'' என்று மருமகள் உறுமுவாள். தர்மபத்தினியோ, ''அதுகள் சொல்கிறதில் என்ன தப்பு இருக்கிறது? வயதான காலத்தில் சிவசிவா என்று கிடக்க வேண்டியதுதானே'' என்று தலையை ஆட்டுவாள்.

இது தேவைதானா மனிதனுக்கு.

மகனும் மருமகளும் கண்டுகளிக்க இவன் தன் பெற்றோர்களை மதித்திருக்க வேண்டும். அப்படிச் செய்தானா? இல்லையே. அப்படிச் செய்திருந்தால் இந்தக் கதி இவனுக்கு வருமா?

எளிய செயல்தான். ஆனால் செய்யமாட்டேன் என்கிறானே மனிதன்.

தெய்வத்தை மதிப்பதும் வழிபடுவதும் எவ்வளவு எளிமையான காரியங்கள். எவ்வளவு சுகமான காரியங்கள். ஆனாலும் முடியவில்லையே பலருக்கு.

வாமனாவதாரம் எடுத்து ஈரடியால் மூவுலகமும் அளந்தான் பெருமான். அவனை நினைத்தாலே போதும், பயம் ஓடிவிடும். தைர்யம் வந்துவிடும்.

ஆனால் நினைக்கிறானா மனிதன்; ஏன் நினைக்கவில்லை?

ஆடாமல் அசையாமல் என்றென்றும் இருப்போம். நமக்கு அழிவே இல்லை என்னும் பேதைமை ஒவ்வொரு மனிதனையும் கட்டிப்போட்டு வைத்திருக்கிறது.

நமக்கும் தளர்ச்சி உண்டு. மரணமும் உண்டு. விலாசம் தெரியாமலே போய் விடுவோம் என்னும் புத்தி வந்தால் அல்லவா மனிதன் செய்ய வேண்டியதைச் செய்வான். செய்ய வேண்டாததைச் செய்யாமலிருப்பான்?

இனிப் பாடல் -

*"இன்று சாதல்*
*நின்று சாதல்*
*அன்றி யாரும்*
*வைய கத்து*
*ஒன்றி நின்று*
*வாழ்தல் இன்மை*
*கண்டும் நீசர்*
*என்கொ லோ*
*அன்று பார்அ -*
*ளந்த பாத*
*போதை ஒன்றி*
*வானின் மேல்*
*சென்று சென்று*
*தேவ ராய்இ-*
*ருக்கி லாத*
*வண்ண மே"*

**(நின்று சாதல் - இழுபறி தலைச்சுமை என்கிற கணக்கில் நாள் கழித்து இறப்போர் பலர். ஒன்றி நின்று வாழ்தல் இன்மை கண்டும் - நிலை பெற்று ஒருவரும் வாழ்ந்ததில்லை என்பதைக் கண்ணாரக் கண்ட பின்பும். என் கொலோ - இது என்ன மடமை! பார்**

அளந்த பாத போதை - வாமனாவதாரம் எடுத்து உலகை அளந்த திருவடித் தாமரை மலர்களை. போது - புஷ்பம். தேவராய் - ஆனந்த சொரூபிகளாய். வாழவழி இருந்தும் வாழத் தெரியாவர்கள் மனிதர்கள்.

(11)

உடல், பொருள், ஆவி எல்லாமே ஸ்ரீமந் நாராயண மூர்த்திதான். உலகைக் காப்பதற்காகவே பத்துவித அவதாரங்களை எடுத்தவர் பெருமான்.

ஸ்ரீமந் நாராயணமூர்த்தி மேல் பக்தி கொள்வது இயல்பு. அந்த இயல்புக்கு மாறாக நடப்பவர்களுக்கு நரகந்தான் கதி.

அணுவுள் அணுவாய் அண்ட பேரண்டமாய் விளங்குகிறான் பெருமான். அதனால் அவனை முப்பத்தாறு தத்துவங்களுக்கு நாயகன் என்பது மரபு.

*"பத்தி னோடு*
*பத்து மாய்ஓர்*
*ஏழி னோடொர்*
*ஒன்ப தாய்*
*பத்தின் நீள்தி*
*சைக்கண் நின்ற*
*நாடு பெற்ற*
*நன்மை யாய்!*
*பத்தி னாய*
*தோற்ற மோடொர்*
*ஆற்றல் மிக்க*
*ஆதி பால்*
*பத்த ராம்அ*
*வர்க்க லாது*
*முத்தி முற்றல்*
*ஆகு மோ?"*

(பத்து பத்து ஏழுஒன்பது - முப்பத்தாறு தத்துவங்கள். பத்தின் நீள் திசை - திசை எட்டுடன் மேல். கீழ் சேர்க்க அவை பத்து. பத்தினாய தோற்றம் - நரசிம்மம், வாமனன், கிருஷ்ண, ராம என எடுத்த பத்து அவதாரங்கள். அவர்க்கு அலாது - பக்தர்களுக்குந்தான் முத்தி. மற்றவர்களுக்கு, முற்றல் ஆகுமோ - கிடைக்குமா மோட்சம்? கிடைக்கவே கிடைக்காது.

(12)

"பெருமானே! எனக்கு அருள் பாலிப்பாயாக! உன் காலடியில் கிடந்து கதறுகிறேன். கண் திறந்து பார்" என்று முறையிடுகிறார் ஆழ்வார்.)

*"சுரும்ப ரங்கு*
*தண்து ழாய்து*
*தைந்த லர்ந்த*
*பாத மே!*
*விரும்பி நின்றி*
*றைஞ்சு வேற்கு*
*இரங்க ரங்க*
*வாண னே!*
*கரும்பி ருந்த*
*கட்டி யே,க*
*டல்கி டந்த*
*கண்ண னே!*
*இரும்ப ரங்க*
*வெஞ்ச ரம்து*
*ரந்த வில்லி*
*ராம னே!"*

(சுரும்பு அரங்கு தண்துழாய் துதைந்து அலர்ந்த பாதமே! வண்டு மொய்க்கும் குளிர்ந்த துழவத்தால் அர்ச்சிக்கப்படுகின்ற உன் திருவடிகளையே - அன்றலர்ந்த செந்தாமரை மலர் போன்ற திருவடிகளையே. விரும்பி நின்று இறைஞ்சு வேற்கு - பக்தியோடு பரவும் எனக்கு. இரங்கு அரங்க வாணனே - கிருபை செய்ய வேண்டுகிறேன் ரங்கநாத சுவாமியே! இரும்பு அரங்க வெஞ்சரம் துரந்த வில் இராமனே - இரும்பைக் காய்ச்சி வடித்தெடுத்த அம்பு களை மழை போல ஏவும் ராமச்சந்திர மூர்த்தியே! என்னை ஆதரிக்க வேண்டுகிறேன்.)

(13)

*பெருமானே! சகலமும் நீர்தான் என்று சுருக்கமாகச் சொல்லிவிடலாம். ஒருவரிக் கேள்வி ஒருவரிப் பதில் போல முடிந்துவிடும். ஆனால் அதில் உயிர் இருக்குமா? வானமும் நீர்தான், மண்ணும் நீர்தான், ஊனும் நீர்தான், உயிரும் நீர்தான் என்று விபரமாகச் சொல்லி சகலமும் உமது அருள் என்று அல்லவா முடித்தால் அதில் உயிர் இருக்கும்.*

திருமழிசை ஆழ்வார் எப்படி முடிக்கிறார் என்று பாருங்கள்.

**"ஊனில் மேய**
**ஆவி நீஉ**
**றக்க மோடு**
**உணர்ச்சி நீ**
**ஆனில் மேய**
**ஐந்தும் நீஅ**
**வற்றுள் நின்ற**
**தூய்மை நீ**
**வானி னோடு**
**மண்ணும் நீவ**
**ளம்க டல்ப**
**யனும் நீ**
**யானும் நீஅ**
**தன்றி எம்பி**
**ரானும் நீஇ**
**ராம் னே!"**

உறக்கமும் அவன்தான்; விழிப்பும் அவன்தான். ஆனில் மேய ஐந்தும் நீ - பசுவுள் விளையும் பால், தயிர், நெய், சாணம், கோமயம் எல்லாம் நீதான். அவற்றில் நின்ற தூய்மை நீ - பால் போல கோமயமும் புனிதம். அப்படியே நல்வினையும் நீதான்; தீவினையும் நீதான். வளம் தரும் கடலும் நீதான். அதில் விளையும் பொருள்களும் நீதான். நானும் நீயும் நீயேதான் என்று துள்ளி விளையாடுகிறார் ஆழ்வார்.

(14)

பெருமானே! ஒன்றையும் நம்ப முடியவில்லையே? கண்கட்டி வித்தை போலல்லவா இருக்கின்றன உம்முடைய காரியங்கள்!

இப்படிக் கேட்கிறார் ஆழ்வார்.

பூமியை அள்ளி முதலில் வாயில் போட்டீர், பிறகு அதையே வெளியே உமிழ்ந்தீர். அதுமட்டுமா? அதே பூமியை மாவலியிடம் கேட்டு அளந்து முடிக்கவும் செய்தீர்.

என்ன மாயம் இது? எல்லாம் உம் லீலா விநோதங்கள்தாம்!!

**"மண்ணை உண்டு**
**உமிழ்ந்து பின்இ**
**ரந்து கொண்ட**
**ளந்து மண்**

கண்ணுள் உள்ளது
அல்ல என்று
நின்ற கோலம்
ஆயி னாய்!
பண்ணை வென்ற
இன்சொல் மங்கை
கொங்கை தங்கு
பங்க யக்
கண்ண! நின்ன
வண்ணம் அல்லது
இல்லை; என்னும்
வண்ண மே''

(இரந்கொண்டு அளந்து - யாசித்து வாங்கியதை அளந்து எடுத்தான், பண்ணைவென்ற இன்சொல் மங்கை - லட்சுமிதேவி, திருமகளின் சொல்லைக் கேட்டால் இசை தோற்று ஓடிவிடும். பண் - இசை, பங்கயக் கண்ண - செந்தாமரை மலர் போன்ற கண்களை உடைய பெருமானே!)

(15)

*பெருமானே! சகலமும் நீர்தான் என்று நான் சும்மா சொல்லவில்லை. சகல தர்மங்களையும் கண்டுணர்ந்து சகலவற்றையும் உலகுக்காக அர்ப்பணித்த மாமுனிவர்களே சொல்கிறார்கள், அவர்கள் சொல்கிறபடிதான் நானும் சொல்கிறேன்.*

*அணுவுள் அணுவாய் சுருங்குகிறீர், அண்டம் அகண்டம் எல்லாம் உம்முள் இயங்கவிரிகின்றீர், என்ன மாயம் எது?*

''சுருக்கு வாரை
இன்றி யேசு
ருங்கி னாய்சு
ருங்கி யும்
பெருக்கு வாரை
இன்றி யேபெ
ருக்கம் எய்து
பெற்றி யோய்!
செருக்கு வார்கள்
தீக்கு ணங்கள்
தீர்த்த தேவ
தேவன் என்று

இருக்கு வாய்மு
னிக்க ணங்கள்
ஏத்த யானும்
ஏத்தி னேன்''

(சுருக்குவார் பெருக்குவார் இன்றி - உன்னை சுருங்கவைப்பவர் களும் இல்லை. விரிய வைப்பவர்களும் இல்லை. நீயே சுருங்குவாய். நீயே விரிவாய். செருக்குவார்கள் - ஆணவ வெறி பிடித்தவர்களை. இருக்குவாய். முனிக்கணங்கள் - எப்பொழுதும் மூல மந்திரங்களையே உச்சரிக்கும் நாவினை உடைய ஞானிகள். இருக்கு - மந்திரம், ரிக்வேதம்.)

(16)

ஆனால் ஒரு வேடிக்கை என்கிறார் திருமழிசை ஆழ்வார்.

ஞானிகளும், யோகிகளும், சான்றோர்களும் எல்லாம் இறைவன் மயம் என்கிறார்கள். நானும் கிளிப்பிள்ளைபோல எல்லாம் இறைவன் மயம் என்கிறேன்.

என்ன அநியாயம் இது?

அவர்கள் தர்ம சீலர்கள். எல்லாவற்றையும் அர்ப்பணித்த வர்கள். நீதி வழுவா நெறியாளர்கள்.

நான் யார்? அவர்கள் சொல்கிறார்களே என்று நானும் சொல்ல முடியுமா?

எல்லாவற்றையும் பொறுத்தாள்பவன் அல்லவா நீ! பக்தர்கள் யாரானாலும் அவர்கள் உணர்ச்சியை உதறி விரித்து அதில் வீற்றிருக்கும் பேராளன் அல்லவா நீ! என்கிறார் ஆழ்வார்.

''தூய நேமம்
அன்றி யேசு
ரும்பு லாவு
தண்து ழாய்
மாய! நின்னை
நாயி னேன்வ
ணங்கி வாழ்த்தும்
ஈதெ லாம்
நீயும் நின்கு
றிப்பி - னில்பொ
றுத்து நல்காய்;
வேலை நீர்

பாய லோடு
பத்தர் சித்தம்
மேய வேலை
வண்ண னே!"

(சுரும்பு உலாவு தண்துழாய் மாய - வண்டு மொய்க்கும் துளப மாலை அணிந்த மாயனே! வணங்கி வாழ்த்தும் ஈது எலாம் - உன்னை நான் போற்றிப் பரவும் நிலைமை முழுவதையும். நின் குறிப்பினால் பொறுத்து நல்காய் - உன் பேரருளால் மன்னித்து ஆதரவு தரவேண்டு கிறேன். வேலை நீர் பாயலோடு - பாற்கடலாகிய படுக்கை மட்டுமல்ல பக்தர்கள் உள்ளமும் படுக்கைதான் திருமாலுக்கு.)

(17)

வினை மயக்கத்திலிருந்து விடுபட வேண்டும் என்றால் அதற்கு வழி ஒன்றுதான். திருமாலின் திருவடி மலர்களை மனம் மறக்கவே கூடாது. பகல், இரவு என்று பாராமல் எப்பொழுதும் அவள் பாதமலர்களையே நோக்க வேண்டும்.

நோக்க நோக்க மனம் விடுதலை பெறும். ஆசாபாசங்களை உதறி எறிந்துவிட்டுச் சுதந்திரமாக எழுந்து நிற்கும் மனம். இல்லை என்றால் இல்லைதான். பாச பந்தப் படுகுழி விடவே விடாது நம்மை.

இனிப் பாடல்

"சொல்லி னும்தொ
ழிற்க ணும்தொ
டக்க றாத
அன்பி னும்
அல்லும் நண்ப
கலி னோடு
ஆன மாலை
காலை யும்
வல்லி நாண்ம
லர்க்கி ழத்தி
நாத பாத
போதி னை
புல்லி உள்ளம்
விள்வி லாது
பூண்டு மீண்டது
இல்லை யே!"

(தொடக்கு அறாத அன்பு - தளரா அன்பு. மேலும் மேலும் வேகமாய்ப் பொங்கிவரும் அன்பு. அல் - இரவு. நண்பகல் - உச்சிவேளை. வல்லிநாண் மலர்க் கிழத்தி - செந்தாமரைப் பூவில் வீற்றிருக்கும் வல்லிக் கொடி போன்ற திருமகள். பாதபோது - திருவடிமலர். உள்ளம் விள்விலாது - மனம் ஒன்றி. மறக்காமல். புல்லி - பூண்டு - நெருங்கி உறவாட உறவாட ஆரம்பித்து விட்டால். மீண்டது இல்லை - பிறகு அந்தப் பேரானந்தத்தை விட்டு விலகவே விலகாது.)



(1)

யோகியர், ஞானியர், தத்துவ விற்பன்னர் இவர்களை ஒருவகையில் விஞ்ஞானிகள் என்றே சொல்லலாம்.

ஆவலோடும் அர்ப்பணிப்பு உணர்ச்சியோடும் உண்மையைத் தேடி அலைகிறார்கள் இவர்கள். தேடிக் கண்டவற்றைச் சமுதாயத்துக்கே வழங்கி விடுகிறார்கள். அப்படியானால் விஞ்ஞானிகள் தாம் இவர்கள்.

உலகின் பல இடங்களிலும் இந்த ஞானக் கூட்டம் உண்டு. எல்லாக் காலத்திலும் உண்டு.

இவர்கள் எல்லோரும் முடிந்த .முடிபாக என்ன சொல்கிறார்கள்; ''கடவுள் இருக்கிறார். அவர் ஒருவர்தான்! அவரே சகலமும்!''

இனி, இந்த ஒரே ஒரு தெய்வம் திருமால் (ஆழியான்) என்றும் சிலர் சொல்கிறார்கள்.

சொல்கிறார்களே தவிர யாராவது கடவுளைப் பார்த்ததுண்டா? நான் பார்த்தேன்; அவர் இப்படி இருக்கிறார்! என்று சொல்லியது உண்டா? இல்லை! ஏன்?

மனித (நம்முடைய) காரியம் அவ்வளவுதான்.

''தேருங்கால் தேவன் ஒருவனே என்றுரைப்பர்;
ஆரும் அறியார் அவன்பெருமை! - ஓரும்
பொருள்முடிவும் இத்தனையே; எத்தவம்செய் தார்க்கும்
அருள்முடிவும் ஆழியான் பால்''

(ஓரும் பொருள் முடிவும் இத்தனையே - ஆராய்ச்சியில் கண்ட முடிவு இவ்வளவுதான். கடவுள் உண்டு என்பதோடு சரி.

ஆழியான்பால் - திருமால் மேல் (பக்தி கொண்டவர்களுக்கும்) அருள் முடிவும் (இத்தனையே) - அவனுடைய கிருபாகடாட்சம் இவ்வளவுதான். அதாவது நம்பிக்கை, பக்தி, ஆனந்தம் அதோடு சரி.)

**குறிப்பு :** ஒன்றாயிருந்தால் பார்க்கலாம். சகலமுமாக விளைந்த ஒன்றை எப்படிப் பார்க்க முடியும்? அதுதான் விளைந்த வண்ணமாகவே இருக்கிறதே! என்னும் இடக்கு பாடலில் கிடக்கிறது. ஒவ்வொன்றிலும் (சகலவற்றிலும்) அவனைப் பார்த்தால் தான் பார்க்க முடியும். அவைகளை விட்டு விட்டுத் தனியாகப் பார்ப்பது வீண் என்னும் உண்மை அந்த இடக்கில் கிடக்கிறது.

(2)

அரியும் சிவனும் ஒன்று என்பது ஒரு வழக்கு. பூர்வமான வழக்குத்தான்.

இந்த வழக்கை ஒட்டிச் சிவபெருமானின் அம்சம் (கூறு) ஆகத் திருமாலையும், திருமாலின் அம்சமாகச் சிவபெருமானையும் சித்தரித்துக் காட்டுவார்கள்.

வேடிக்கையான பொழுதுபோக்குத்தான் இது.

கடவுள் ஒருவர்தான் என்று தெளிவு பெற்றபின் அதில் பங்காளி வழக்குப் போடுவது நியாயமா? பித்தலாட்டம் என்கிறார் திருமழிசை ஆழ்வார்.

*"ஆறு சடைக்கரந்தான் அண்டர்கோன் தன்னோடும்*
*கூறுடையான் என்பதுவும் கொள்கைத்தோ? - வேறொருவர்*
*இல்லாமை நின்றானை, எம்மானை, எப்பொருட்கும்*
*சொல்லானைச் சொன்னேன் துணிந்து"*

(ஆறு - நதி, கங்கை. சடைக்கரந்தான் - சடையில் தேக்கி வைத்திருக்கிற சிவன். அண்டர்கோன் தன்னோடு கூறுடையான் என்பது கொள்கைத்தோ - தேவாதி தேவனாகிய திருமாலோடு ஒத்தவன் அந்தச் சிவன் என்பது முறையாகுமா? வேறு ஒருவர் இல்லாமல் நின்றான் - தனக்கு இணையாக யாரையும் வைத்துக் கொள்ளவில்லை திருமால். தலைவன் என்றால் அவன் ஒருவன்தான் எல்லோரும் அவனுக்குத் தொண்டர்கள்தாம்.

எப்பொருட்கும் சொல்லான் - எல்லாப் பொருள்களையும் உணர்த்த ஒரு சொல் உண்டென்றால் அது திருமால் என்பதுதான்.)

மா என்கிற சொல் குதிரை, வண்டு, இலட்சுமி, பெருமை, மாம்பழம் என்று உணர்த்தவில்லையா? அதே போல திருமால் என்னும் சொல் எல்லா வஸ்துகளையும் உணர்த்தும், காரணம் எல்லாமே அவன்தான்.

சொன்னேன் துணிந்து - அதைச் சொல்வதில் எனக்குத் துளிக்கூடச் சந்தேகம் இல்லை. தெள்ளத் தெளிந்தே சொல்கிறேன்.

(3)

திருமழிசையாழ்வார் எப்பொழுதும் தெய்வ சிந்தனையிலே திளைக்கிறவர். அதனால் எப்பொழுதும் ஆனந்தமாகவே இருப்பார்.

இந்த ஆனந்தம் திருமாலின் திருவருள் என்று நம்புகிறவர் ஆழ்வார்.

ஆனாலும் சில சமயம் திகைப்பு வந்து விடுகிறது. எம்பெருமான் என்னைக் கை விட்டுவிட்டானே, அருள் பாலிக்கவில்லையே எனக்கு என்று ஏங்கி விடுகிறார்.

அந்த ஏக்கத்திலிருந்து ஓர் ஆவேசமே வந்து விடுகிறது.

'எனக்கு அவனைத் தவிர வேறு யார் துணை? அவனுக்கும் என்னைத் தவிர வேறு துணை ஏது?

அதனால் எனக்கு நிச்சயம் அவன் அருள் உண்டு' என்று பிறக்கிறது ஆவேசம்.

அது எப்படிப் பாடலாய் உருவெடுக்கிறது என்று பாருங்கள்!

*"இன்றாக, நாளையே ஆக, இனிச்சிறிது*
*நின்றாக நின்னருள்என் பாலதே - நன்றாக*
*நான்உன்னை அன்றி இலேன்கண்டாய் நாரணனே!*
*நீயும் எனைஅன்றி இல்"*

(இனிச் சிறிது நின்றாக - கொஞ்சம் கால தாமதமானாலும், நின் அருள் என் பாலது - உன் திருவருள் எனக்கு நிச்சயம் உண்டு.)

**குறிப்பு :** கடைசி இரண்டுவரியும் எதுகைக்குக் கட்டுப்பட்டு நிற்கவில்லை.

உண்மையான உணர்ச்சி ஆவேசம் கொண்டு எழுந்தால் போதும். அதுதான் எதுகை; அதுதான் மோனை.

(4)

பிரமதேவன் ஏதோ தவறு செய்துவிட்டான். சாபத்துக்கு ஆளாகியும் விட்டான். பிறகு சாபத்திலிருந்து விடுதலை பெற என்ன செய்தான்?

கங்கையையே ஒரு கமண்டலத்தில் (கலையத்தில்) அடைத் தான். திருமாலின் திருவடிகளில் அதை ஊற்றி அவர் பாதங்களைத் தன் கைகளாலேயே கழுவி விட்டான்.

பிரம்மாவின் மேல் பரிவு உண்டாகிவிட்டது திருமாலுக்கு. அவ்வளவுதான் அவன் சாபம் தொலைந்தது.

இது பெரிதல்ல. கங்கை என்னும் நீர்மகள் சாதாரணப பெண்மணிதான். நெருப்பிலிருந்து வந்தவள்தானே அவள்.

அப்படி ஒரு சாதாரணப் பெண் நெருப்பு மலையாகிய சிவபெருமான் தலை மேலேயே ஏறி உட்கார்ந்திருக்கிறாளே அது எப்படி?

அதுவும் திருமாலின் திருவடி மகிமைதான்.

இனிப் பாடல் -

*"குறைகொண்ட நான்முகன் குண்டிகைநீர் பெய்து,*
*மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி, - கறைகொண்ட*
*கண்டத்தான் சென்னிமேல் ஏறக் கழுவினான்*
*அண்டத்தான் சேவடியை ஆங்கு"*

(குறை - சாபம். குண்டிகை - சிறுகுடம். கலயம், மறை கொண்ட மந்திரத்தால் வாழ்த்தி - வேத மந்திரங்களை உச்சரித்து. கறைகொண்ட கண்டன் - நஞ்சைக் கழுத்தில் வைத்துள்ள சிவன். கறை - நஞ்சு. சென்னி - தலை. அண்டத்தான் - திருமால்.)

**குறிப்பு :** திருமாலின் காலில் பட்டதால் சிவபெருமான் தலையில் ஏறும் வாய்ப்புக் கிடைத்து விட்டது கங்கைக்கு.

உறுதியிலிருந்து உல்லாசம் வரும். அந்த உல்லாசம் அப்படியும் இப்படியுமாகத் துள்ளிக் குதிக்கும். விண்ணுக்கும் மண்ணுக்குமே துள்ளிக் குதிக்கும்.

ஆட்டமும் பாட்டமுமாய் இருக்கிறது பாசுரம்.

(5)

உல்லாசமானது கரைபுரண்டு ஓடுகிறது ஆழ்வாரிடம். திருவேங்கட மலையையே கை கூப்பிக் கும்பிடுகிறார். அதன் காலில் விழுந்து கும்பிடுகிறார்.

திருவேங்கடமலையை வெறும் பாறையும் மண்ணும் மரமும் நிரம்பியவை என்றா பக்தியானது பார்க்கும். வேங்கடமலையில் எழுந்தருளியுள்ள பெருமானை எப்படிப் பார்க்குமோ அப்படிப் பார்க்கும் பக்திக் கண்.

மலையின் ஒவ்வொரு அணுவும் திருமாலின் அம்சம். சந்நிதானத்தின் ஒவ்வோர் அணுவும் திருமாலின் அம்சம்.

திருமால்தான் மலையாக வந்து நிற்கிறார். கோயிலாக எழுந்து நிற்கிறார்.

சந்நிதானத்துள் நின்று பக்தர்களை வருக வருக என்று அருட் பார்வையால் அழைக்கும் மூர்த்தியைப் பற்றியோ சொல்ல வேண்டாம்.

இந்த உண்மை உல்லாச மயமாய் வெண்பாவில் எப்படி அடிமேல் அடி வைத்து வருகிறதென்று பாருங்கள்.

*"வேங்கடமே விண்ணோர் தொழுவதும், மெய்ம்மையா*
*வேங்கடமே வெவ்வினைநோய் தீர்ப்பதுவும், - வேங்கடமே*
*தானவர்கள் மாயத் தனியாழி யைத்தொட்டு*
*வானவரைக் காப்பான் மலை"*

(மெய்ம்மையா - நிச்சயமாக. தானவர் - ராட்சதர். உணர்ச்சியே இல்லாத வெறும் தடிமுண்டங்கள். வானவர் - உணர்ச்சிமயமான ஞானிகள்.)

**குறிப்பு :** *சீலமும் ஞானமும் நிறைந்த ஞானியர் இனம் ஒன்று. வெறும் லௌகீக வெறியில் உழலும் ஆபாசக் கூட்டம் ஒன்று. பின்னதுக்கு ஆள்ப்பலம் அதிகம். தந்திரங்களும் அதிகம் முன்னதால் தாக்குப் பிடிக்க முடியாதுதான். தெய்வ அருள் ஆனாலும் பின்னதை அப்போதைக்கப்போது களை பறித்து முன்னதைக் காப்பாற்றி வருகிறது.*

*தானவர்கள்மாய..... காப்பான் மலை.*





# திருப்பாணாழ்வார்

## அமலன் ஆதிப்பிரான்

**கா**விரி பாயும் சோழ நாட்டுக்கு வளநாடு என்று பெயர். சோழ வளநாட்டின் தலை நகரம் உறையூர். திருச்சிராப்பள்ளியை ஒட்டிய ஊர் உறையூர்.

காவிரியின் தென் கரையில் உறையூரும், வடகரையில் திருவரங்கமும் இருக்கின்றன.

திருப்பாணாழ்வார் என்னும் பரமபக்தர் இனிமையாகப் பாடுவார்.

பாடல் மூலமும் பாடலோடொட்டிய மதுரமான இசை மூலமும் இறைவனை அனுபவித்த பெரியார் அவர்.

''பண்ணில் நோக்கும் பாரா அமுது'' என்று அழகாய்க் குறிப்பிடுகிறார் கம்பர். பண்ணும் பாட்டும் கலந்த ஒரு பொருத்தமான பண்பாட்டின் மூலமே ஞானிகள் பரா அமுதை (கடவுளை) தரிசிப்பார்களாம்.

காவிரியின் தென்கரையில் நின்றே வட கரையில் உள்ள திருவரங்கப் பெருமான் சந்நிதியை நோக்கி நாள்தோறும் பாடிவந்தார் ஆழ்வார்.

சுவாமிக்குத் திருமஞ்சனமாட்ட காவிரியில் நீர் எடுக்க வருவார்கள் கோவில் பட்டர்கள். அவர்களுக்கு எப்படி ஆழ்வாரின் பெருமை தெரியும்? அதனால் விலகு, விலகு என்று கூப்பாடு போடுவார்கள்.

தன்னை மறந்து அவன் நினைப்பில் பாடும் ஆழ்வாருக்கு இவர்கள் கூப்பாடு காதில் விழவில்லை. ஆத்திரம் கொண்ட அந்தக் கும்பலில் உள்ள சிலர் கல்லெடுத்தே எறிந்து விட்டார்கள் ஆழ்வாரை.

ரத்தம் கொட்டிவிட்டது மண்டையிலிருந்து. என்ன அதிசயம்? ஸ்ரீரங்கநாதருடைய மண்டையிலிருந்தும் சொளு சொளு என்று ரத்தம் கொட்டிவிட்டது. அவ்வளவுதான் ஸ்ரீரங்கம் ஊரே பதறிவிட்டது.

பயந்த கலக்கத்தில் தூக்கம் எங்கு வரும் அவர்களுக்கு. புரண்டு புரண்டு படுத்தார்கள். அதிகாலை மூன்று மணிக்ககு மேல் இளங்காற்றில் ஏதோ உறங்கினார்கள்.

கிட்டத்தட்ட எல்லோரும் கனவு கண்டார்கள். திருப்பாணாழ் வாரை வணங்கி அவரை நீங்கள் தோளிலேற்றி வரவேண்டும். நம் சந்நிதியில் இறக்கி நம் பாடுவானுக்கு தரிசனம் செய்வித்துச் சிறப்பிக்க வேண்டும்.

இப்படி உத்தரவாகிவிட்டது கனவில். அப்படியே செய்தார்கள் பட்டர்கள்.

திருப்பாணாழ்வாரின் பக்தியும் பண்பாடும் அப்படி. அவர் பாடிய ப்ாடல்கள் பத்துத்தான். பத்துப்பாடல்களும் திருப்பதி லட்டுத்தான்.

ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைச் சர்வாலங்கார பூஷணனாகப் பூர்ண சௌந்தர்யம் பொங்க நம் கண்முன் கொண்டு வந்து நிறுத்தும் பாடல்.

இதோ அவற்றிலிருந்து இரண்டு பாடல்கள்.

அரங்கநாதனைக் காணக் காணக் கண்கள் குளிரும். அந்த நீல மேகசாமள வண்ணத்தில் தான் சௌந்தர்யப் பிரகாசம் எவ்வளவு. அதில் முத்து மாலைகளும் நவமணி ஆரங்களும் கிடந்து புரள்வது மேகமும் மின்னலும் கட்டி விளையாடுவது போலல்லவா இருக்கிறது.

இனிப் பாடல் -

**"தான தானன**
**தன்னன தானன**
**தானன தன்**
**ஆல மாமரத் -தின்இலை மேல்ஒரு**
**பாலக னாய்**
**ஞாலம் ஏழும்உண் -டான்அரங் கத்(து)அர -**
**வின் அணையான்**
**கோல மாமணி ஆரமும் முத்தும்**
**குலவும் எழில்**
**நீல மேனிஐ யோநிறை கொண்டதென்**
**நெஞ்சினை யே"**

பிரளய காலத்தில் சிறு பாலகனாய் ஓர் ஆல இலைமேல் மிதந்தான். ஏழு உலகையும் அள்ளியுண்ட பாலகன் அப்படி மிதந்தான். அவன் யார்?

(அரங்கத்து அரவின் அணையான் - திருவரங்கத்திருக் கோவிலில் ஆதி சேஷ சயனத்தில் பள்ளி கொண்ட அரங்கன்தான் அப்படி மிதந்தான்.

கோல மாமணி ஆரமும் முத்தும் குலாவும் எழில் - அவன் திருமேனியிலும் அவன் திருத்தோள்களிலும் புரண்டு புரண்டு நெளிகிற முத்து மாலைகளும், நவரத்ன கண்டிகைகளும் கண்ணைப் பறிக்கின்றன. அவ்வளவுதானா? நீலமேனி ஐயோ - அடடா! அந்த நீல நெடுங்கடல் போன்ற தூய சாமள வண்ணன். மாலைகளோடும் மணிகளோடும் குலாவி. என் நெஞ்சினை நிறை கொண்டதே - என் இதயம் முழுவ தையும் தன் வசப்படுத்திச் சௌந்தர்ய சொரூபி ஆக்கிவிட்டது என்னை. நான் என்ன செய்வேன் இதற்கு?)

**குறிப்பு :** *அற்புதமான பாடல். அற்புதமான பண். பாடலும் பண்ணும் சேர்ந்து உணர்ச்சிக்கு அற்புதமாய் உருவங் கொடுக்கின்றன.*

(2)

*இனி திருவரங்கப் பெருமானின் திவ்ய சௌந்தர்யம் உணர்ச் சியை உருக்கிவிட்டது. ஆழ்வாரின் இதயத்தைப் பிசைந்தே விட்டது. குழைத்துப் பிசையப் பிசைய வேறொரு வஸ்துவாகவே மாறி விட்டார் ஆழ்வார். அழகு மயமாகவே மாறி விட்டார்.*

*ஆழ்வாரின் சௌந்தர்யம் பெருமானின் சௌந்தர்யத்தோடு கலந்து மருவத் துடிக்கிறது.*

*காந்தமும் காந்தமும் ஒட்டுவதற்கு முனைவது இயல்புதானே.*

*இந்த நிலையில் அவரால் வேறு எதைப் பார்த்து அனுபவிக்க முடியும்.*

*அவரே சொல்கிறார்.*

***"தான தன்னன***
***தானன தன்னன***

***கொண்டல் வண்ணனைக்;***
***கோவல னாய்வெண்ணெய்***
***உண்ட வாயனை,***
***உள்ளம்க வர்ந்தானை,***
***அண்டர் கோனை,***
***அரங்கத் தமுதினைக்***

*கண்ட கண்கள்மற்று*
*ஒன்றினைக் காணாவே”*

(கொண்டல் - மேகம். உள்ளம் - உணர்ச்சியை. கவர்ந்தான் - கைப்பற்றிவிட்டான். அண்டர்கோனை - தேவாதிதேவனை.)

**குறிப்பு :** *அடடா! எப்பேர்ப்பட்ட பொக்கிஷங்களை நமக்காகத் தேடி வைத்துப் போயிருக்கிறார்கள் முன்னோர்கள்! அனுபவிக்க வேண்டாமா நாம்.*





# தொண்ரடிப்பொடி ஆழ்வார்

## திருமாலை

**தொ**ண்டரடிப் பொடியாழ்வாரின் இயற்பெயர் விப்ர நாராயணன். இவர் சோழவள நாட்டில் மண்டைக்குடி என்னும் ஊரில் பிறந்தவர். திருமணம் செய்துகொள்ளாமல் பிரம்மச்சர்ய கோலத்திலேயே வாழ்ந்தவர். தீவிரமான பக்தர். பக்திப் பிரவா கத்தில் கரைந்து விடுவார். மற்றவர்களையும் கரைத்து விடுவார்.

விராட் புருஷனாகிய இறைவனின் எல்லையற்ற சௌந்தர் யத்தில் ஈடுபட்டு ஒன்றியவர், அதனால் இறைவனுடைய கண் கொள்ளாக் காட்சியை அணு அணுவாக அனுபவிப்பார்.

எல்லாம் வல்ல பெருமானின் கல்யாண குணங்களிலும் பேரழகிலும் தம்மைப் பறிகொடுத்தவர் ஆழ்வார். உடல், பொருள், ஆவி எல்லாவற்றையும் அவற்றுக்கே தத்தம் செய்தவர். அதனால் இறைவன் மட்டும் அல்ல. அவன் எழுந்தருளி அருள்பாலிக்கும் ஸ்ரீரங்கம், கோவில், காவிரி, சோலை, அங்குள்ள மக்கள், மலர்கள், பறவைகள் எல்லாமே இவருக்கு ஆனந்தத்தைக் கொடுத்தன.

ஸ்ரீரங்கமும் அங்கு அரவணையில் பள்ளிகொண்ட பெரு மாளுந்தான் இவருக்குச் சகலமும்.

மல்கோவா மாம்பழத்தைப் பார்த்த உடனேயே அதன் மணமும் ருசியும் மயக்கும். மாம்பழத்தை வெட்டித் துண்டு துண்டாக வாயில் போட அது தேனாகக் கரையும், தேகம் பூராவும் பூரிக்கும்.

ஆழ்வாருடைய பாசுரங்களும் அப்படித்தான், பார்த்தாலே பரவசப்படுத்தும். பாடப்பாட ஆனந்தத்தின் சொரூபியாக மாறிவிடு வோம் நாம்.

இனி, பாடல்களைப் பார்ப்போம்.

அண்ட பிண்ட சராசரங்களை எல்லாம் உண்டு உமிழ்ந்த பெரு மானே! ரங்கநாதா! ரங்கநாதா! என்னும் உன் திவ்ய நாமங்களை உச்சரிக்க உச்சரிக்க ஊக்கம் உண்டாகிறது. பயம் ஓடி விடுகிறது.

எமனுடைய தலைமேல் ஏறி நின்று அந்தத் தலையையே வயலாக வைத்து உழவு செய்கிற அளவுக்குத் தைர்யம் வருகிறது.

நாள்வாழ்க, நாள்வாழ்க (பொலிக பொலிக என்பது போல) என்று கோஷமிடத் தோன்றுகிறது.

இப்படிச் சொல்கிறார் ஆழ்வார்.

''காவலில் புலனைவைத் து
கலிதன்னைக் கடக்கப்பாய்ந் து
நாவலிட்டு உழிதர்கின் றோம்
நமன்தமர் தலைகள்மீ தே;
மூவுலகு உண்டுமிழ்ந் த
முதல்வநின் நாமம்கற் ற
ஆவலிப் புடைமை கண்டாய்
அரங்கமா நகருளா னே!''

(காவலில் புலனைவைத்து - ஐம்புலன்களையும் ஒரு கட்டுப் பாட்டில் வைத்து, கலிதன்னை கடக்கப் பாய்ந்து - ஆணவத்தை தாண்டி, நமன்தமர் - எமனும் அவன்கையாட்களும். நாவல் - சங்காரந்தி போன்ற மங்கல நாள்களில் நாள்வாழ்க என எழுப்பும் ஒலி, நாமம் கற்ற ஆவலின் உடைமை கண்டாய் உன்திருநாமங்களை உச்சரிக்க உச்சரிக்க அதன்மூலம் ஆர்வமும் வேகமுந்தான் அப்படி.)

(2)

இனி தாய்க்குக் குழந்தைதான் சகலமும், ''உன் பிள்ளையை எனக்குக் கொடுத்துவிடு, பதிலுக்கு அரண்மனைபோல ஒரு மாளிகை தருகிறேன். வயல், தோப்பு ரொக்கம் தருகிறேன்'' என்றால் எப்படிஏற்றுக் கொள்வாள்தாய்?

தொட்டிலில் கிடக்கும் குழந்தையை வாரி எடுப்பாள், மார்போடு மார்பாக இறுக அணைப்பாள், முன்தானைச் சேலையால் மூடி ஓட்டமாய் ஓடிவிடுவாள் அந்த இடத்தை விட்டு.

இனி, குழந்தையும் அப்படித்தான் ''என்னோடு வந்துவிடு, வளர்ந்து ஆளானதும் இந்திரலோகத்தையே நீ ஆளலாம். அம்மாவே வேண்டாம், வா'' என்று தூக்கிக் கொண்டு போனால் குழந்தை சும்மா இருக்குமா? கதறிக் கதறிக் கரையும்.

குழந்தைக்கு வேண்டியது அம்மாதான்.

இனிப்பாடல்

''பச்சைமால் மலைபோல்மே னி
பவளவாய் கமலச்செங் கண்
அச்சுதா! அமரர்ஏ றே!
ஆயர்தம் கொழுந்தே என்னும்

*இச்சுவை தவிரயான் போய்*
*இந்திர லோகம்ஆ ளும்*
*அச்சுவை பெறினும்வேண் டேன்*
*அரங்கமா நகருளா னே!"*

(கமலம் - செந்தாமரை மலர்கள், அச்சுதன் - சகலதத்துவங்களும் அச்சாக (ஆதாரமாக) இருக்கிறவன். அமரர் ஏறு - தேவர்களின் தலைவன், ஆயர்தம் கொழுந்து - பசுவையும் கன்றையும் பாதுகாக்கிற கூட்டம் எங்கெங்கு இருந்தாலும் சரி, அந்த இனம் முழுவதும் அவனுடைய நேரடி வாரிசுகள் (சுவை - இன்பம் தான்.)

(3)

ஞானிகள், யோகிகள், அறிஞர் பெருமக்கள் இவர்கள் எல்லோரும் ஸ்ரீரங்க நாதருடைய கல்யாண குணங்களை இழை இழையாகப் பிரித்து எடுப்பார்கள், ஒவ்வோர் அம்சத்தையும் பார்த்துப் பார்த்து மயங்குவார்கள். உணர்ச்சிமயமாகப் பரவிப் பாராட்டுவார்கள்.

சாதாரண மக்களால் இப்படி முடியுமா? முடியாது. ஆனாலும் அவர்கள் திருவரங்கம் திருவரங்கம் என்று சொன்னால் போதும்.

அரங்கநாதா அரங்கநாதா என்று கூப்பிட்டால் போதும். நரகலோகமே தூர்ந்து போகும். மேடாகி அதில் அழகிய பசும் புல் முளைத்துக் கண்களுக்குக் குளுமை கொடுக்கும்.

*"எறியும் நீர்த் தரங்கவே லை*
*இருநிலத்து உணர்ந்த மாந்தர்*
*வெறிகொள்பூந் துளபமா லை*
*விண்ணவர் கோனைஏத் த;*
*அறிவிலா மனுசரே னும்*
*அரங்கம் என்று உரைப்பாரா கில்*
*பொறியில்வாழ் நரகம்எல் லாம்*
*புல்எழுந்து ஒழியும்அன் றே!"*

(எறியும் நீர்த்தரங்கம் - அப்படியும் இப்படியும் மோதும் அலைகள். வேலை - சமுத்திரம் சூழ்ந்த, உணர்ந்த மாந்தர் - அறிஞர் பெருமக்கள். விண்ணவர் கோனை ஏத்த - தேவதேவனாகிய ஸ்ரீமந் நாராயண மூர்த்தியின் மகிமைகளை எடுத்து விளக்குவார்கள். அவர்கள் காரியம் அப்படி இருக்க. பொறியில்வாழ் - கொடுமையே குடிகொண்டிருக்கின்ற. புல் எழுந்து ஒழியும் - பசும் புல் முளைக்கும், நரகம் என்பதே ஒழிந்துபோய்விடும்.)

(4)

திருவரங்கத்தைச் சுற்றி கண்ணுக் கெட்டியதூரம் சோலைகளும் நந்தவனங்களும்தான். எங்கு பார்த்தாலும் பச்சைப்பசேல் என்றிருக்கும்.

காவிரியும் கொள்ளிடமும் பெருமானின் திருவடிமலர்களை வருடிச் செல்கின்றன.

அரங்கநாதர் கோயில் கொண்டு சயனகோலத்தில் அருள் பாலிக்கிறார் ஸ்ரீரங்கத்தில்.

அந்தப் பெருமானை நினைக்க வேண்டாமா? ஸ்ரீரங்கத்தைத் தான் மறக்க முடியுமா?

திருவரங்கம், அரங்கநாதன் என்று வாய் திறந்து சொல்லாதவன் ஒரு மனிதனா? கிராதகன் என்றால் அவன்தான்.

அவன் முகத்தில் விழித்தாலே பாவம், அவன் கொடுக்கிற தண்ணீர்கூட விஷந்தான், அவன் உண்ணும் சாப்பாட்டைப் பற்றிச் சொல்லவா வேண்டும்.

"வண்டினம் முரலும்சோ லை
மயிலினம் ஆலும்சோ லை
கொண்டல்மீது அணவும்சோ லை
குயிலினம் கூவும்சோ லை
அண்டர்கோன் அமரும்சோ லை
அணிதிரு அரங்கம்என் னா
மிண்டர்பாய்ந்து உண்ணும்சோற் றை
விலக்கிநாய்க்கு இடுமின்நீ ரே"

(வண்டினம் முரலும் சோலை - வண்டுகள் கூட்டம் கூட்டமாய் புஷ்பங்களில் விழுந்து ரீங்காரம் பண்ணும், ஆலும் - நடனமாடும் கொண்டல் - மேகங்கள், மீது அணவும் - மரங்களின் உச்சியில் அமர்ந்து இளைப்பாறும், அண்டர் கோன் - திருமால், அரங்கம் என்னா - திருவரங்கம் என்று சொல்லாத, மிண்டர் - தடியர், பாய்ந்து உண்ணும் சோற்றை - சோற்றைக் கண்டால் போதும் புலி பாய்வது போல் பாய்வார்கள், விலக்கி நாய்க்கு இடுமின் - அந்தச் சோற்றை நாய்க்குப் போடுங்கள், நீங்கள் உண்ணாதீர்கள். உண்டால் பாவம்.)

(5)

இறைவனிடம் நம்பிக்கை வைத்தால் போதும். நம்பின வர்களின் நம்பிக்கைக்குத் துணையாக இருப்பான் பெருமான் நண்பனாய், தோழனாய், நாயகனாய், தந்தையாய், தாயாய்,

குழந்தையாய் எப்பொழுதும் நம்பினவர்களைச் சுற்றிச் சுற்றிவருவான் பெருமான்.

உண்மையின் மேல் நம்பிக்கையே இல்லாமல் ஊரை ஏமாற்ற வேஷம் போடும் ஆசாமிகளிடம் உறவாடவே மாட்டான். எட்டி நின்று பார்க்கக்கூட முடியாது அவர்களால்.

திருமால் ஒருவனே தெய்வம் என்று தெளிந்த பின் சந்தேகம் எப்படிவரும்?

*மெய்யர்க்கே மெய்யன்ஆ கி*
*மெய்யிலா என்னைப்போன் ற*
*பொய்யர்க்கே பொய்யன்ஆ கும்*
*புள்கொடி உடையகோ மான்*
*உய்யப்போம் உணர்வினார்க் கு*
*ஒருவன் என்று உணர்ந்தபின் னை*
*ஐயப்பாடு அறுத்துத்தோன் றும்*
*அழகன்ஊர் அரங்கம்அன் றோ*

(மெய்யர் - உண்மையான நம்பிக்கை கொண்டவர்கள். புள் கொடி - கருடனையே கொடியில் போட்டு எழுதி இருக்கிற. உய்யப்போம் உணர்வினார்க்கு - பாச வலையைக் கடந்து தப்பித்தவர்களுக்கு. ஐயப்பாடு - சந்தேகம்.)

**குறிப்பு:** உண்மையை எளிதாய் இனிதாய் எடுத்துச் சொல்வதற்கென்றே காத்துக் கிடக்கிறது தமிழ்.

(6)

திருவரங்கத்தில் சயனகோலத்தில் அருள் பாலிக்கும் திருவரங்கனை ஆழ்வார் பார்த்தார். ஆனந்தக் கண்ணீர் தாரை தாரையாகப் பெருகியது. எலும்புகள் எல்லாம் நெக்கு நெக்காய் உருகிவிட்டன. பிறகு உணர்ச்சியின் நிலையைச் சொல்லவா வேண்டும்.

மற்றவர்கள் பலருக்கு இது விளங்கவில்லை, ஒரு மாதிரிப் பார்க்கிறார்கள் ஆழ்வாரை.

பாவம் ஆழ்வார் என்ன செய்வார்? பக்தர்களை ஒரு சேரக் கூட்டிவைத்துப் பரவச நிலையில் தனக்கு நேர்ந்ததைச் சொல்கிறார்.

*"குடதிசை முடியைவைத் து,*
*குணதிசை பாதம்நீட் டி,*
*வடதிசை பின்புகாட் டி,*
*தென்திசை இலங்கைநோக் கி*

*கடல்நிறக் கடவுள்எந் தை*
*அரவணை துயிலுமா கண்டு*
*உடல்எனக்கு உருகும்ஆ லோ!*
*என்சொல்கேள் உலகத்தீ ரே?"*

(குடதிசை - மேற்குத்திசை, குணதிசை - கிழக்குத் திசை, பின்பு - முதுகை நோக்கி - பார்த்தபடியே. கடல்நிறக் கடவுள் எந்தை - ஸ்ரீரங்கநாதனாகிய என் அப்பன், அரவணைதுயிலும் ஆகண்டு - அனந்தசயனத்தில் படுத்திருக்கும் அழகிய திருக்கோலத்தைப் பாரத்து. என்சொல் கேன் - எலும்புகள் உருகுகின்றன. நான் அதைத் தடுக்க முடியுமா?)

(7)

*சமுத்திரத்தைப் பற்றி அப்படி இப்படி என்று பேசலாம், விடிய விடியப் பேசலாம். நாள் கணக்கில் பேசிக்கொண்டே இருக்கலாம்.*

*பேச்சுக்குள் அடங்கிவிடுமா சமுத்திரம், ஆராய்ச்சி பண்ணி பக்கம் பக்கமாய் எழுதமுடியுமே தவிர, ஒரு துளி ஜலத்தை உண்டாக்க முடியுமா?*

*கடவுளைப் பற்றிய பேச்சும் அப்படித்தான். ஆராய்ச்சியும் அப்படித்தான்.*

*"பேசிற்றே பேசல்அல் லால்*
*பெருமைஒன்று உணரல்ஆ காது;*
*ஆசற்றார் தங்கட்கல் லால்*
*அறியல்ஆ வானும்அல் லன்;*
*மாசற்றார் மனத்துளா னை*
*வணங்கிநாம் இருப்பதல் லால்*
*பேசத்தான் ஆவதுண் டோ?*
*பேதைநெஞ் சே! நீசொல் லாய்!"*

(பேசிற்றே பேசல் அல்லல் - அறைத்த மாவையே மாறிமாறி அறைப்பது போலச் சொன்னதையே மாறிமாறிச் சொல்லிக்கொண்டிருக்க வேண்டியதுதான். ஆசுஅற்றார் - குற்றம் குறைஇல்லாத உத்தமர், அறியல் ஆவானும் அல்லன் - மற்றவர்களால் பார்க்கவே முடியாது. மாசு அற்றார் - அழுக்கற்றவர்.)

(8)

*நம்முடைய காரியம் வழிபடுவதுதான். ஆராய்ச்சி, வியாக்யானம் நமக்குத் தேவை இல்லை மனமே! தேவை இல்லை.*

*காலை, மாலை இப்படி இரண்டு வேளைகளில் இரண்டு மலர்களைக் கொய்து இறைவன் திருவடிகளில் போட முடியாத மூடன் பிறந்து என்ன பலன்? வாழ்ந்து என்ன பலன்?*

உலகில் எத்தனையோ மூடஜென்மங்கள். அந்த மூடங்களின் இப்படி மூடத்தனத்தைத் தன்தலையில் போட்டு முறையிடுகிறார் ஆழ்வார்.

*"போதெலாம் போதுகொண் டுன்*
*பொன்னடி புனையமாட்டேன்*
*தீதிலா மொழிகள்கொண் டுன்*
*திருக்குணம் செப்பமாட் டேன்,*
*காதலால் நெஞ்சம்அன் பு*
*கலக்கிலேன், அதுதன்னா லே*
*ஏதிலேன் அரங்கர்க்கல் லேன்*
*என்செய்வான் தோன்றினே னே?"*

(போது எல்லாம் - ஒவ்வொரு வேளையும், போது கொண்டு - மலர்களைக் கொண்டு. செப்ப - சொல்லக். காதலால் நெஞ்சம் அன்பு கலக்கிலேன் - பக்தியால் மனம் உருகி உன்னை மருவமுடியவில்லை, ஏதுஇலேன் - தெண்டத்துக்கு இருக்கிறேன், ஏது - காரணம். என் செய்வான் தோன்றினேன் - என்னத்துக்காகப் பிறந்து தொலைந் தேன் நான்?)

**குறிப்பு:** *பரிவு என்று ஒன்று. அது கண்ணுக்குப் புலனாகாது, ஆனால் வார்த்தைக்கு வார்த்தை கதறும் அந்த ஒலி மூலம் பரிவு கண்ணுக்கு புலனாகிறது.*

(9)

*"நாதி இல்லாதவன் நான். உன்னைத்தான் நம்பி இருக்கிறேன். நீயும் கைவிட்டுவிட்டால் அப்புறம் என் கதி எஃனாவது"? என்று அரங்கநாதனிடம் முறையிடுகிறார் ஆழ்வார்.*

நேருக்கு நேராக நின்றே முறையிடுகிறார் தொண்டரடிப்பொடி ஆழ்வார்.

*"ஊரிலே ன்காணிஇல் லை*
*உறவுமற் றொருவர்இல் லை*
*பாரில்நின் பாதம்அன் றிப்*
*பற்றிலேன் பரமமூர்த் தி!*
*காரொளி வண்ணனே! என்*
*கண்ணனே! கதறுகின் றேன்*
*ஆருளர் களைகண்அம் மா*
*அரங்கமா நகருளா னே!"*

**(ஊர் - சொந்த ஊர். காணி - வீடுவாசல் பாரில் - உலகில் பற்றுஇல்லேன் - வேறு ஒன்றிலும் நாட்டம் இல்லை. கார்ஒளி - இருள் போன்ற நீல நிறம், களைகண் - ஆதரவு.)**

(10)

*நாலா பக்கங் களிலிருந்தும் மேகங்கள் கூட்டம் கூட்டமாய்க் கூடினால் எப்படி இருக்கும்? அப்படிக் கருகருவென்று கண்ணைப பறிக்கும் வண்ணத்தில் அமர்ந்திருக்கிறார் திருவரங்கத்தில் பெருமாள்.*

*குருடனுக்குக் கூடத் தெரியும்படி அப்படித் துலாம்பரமாய்க் காட்சி அளிக்கிறார் பெருமாள். ஆனுலும் அவர் நாபகமே இல்லாமல் அலைகிறார்கள் பலர் இவர்களைப் போல கொடிய துஷ்டர்கள் உண்டா?*

*ஒன்றுக்கும் அசையாத கல்லுளி மங்கன்கள் என்றால் இவர்கள்தாம்.*

*அவர்கள்மேல் கொண்ட பரிவு காரணமாகத் தம்மையே அவர்களாகப் பாவித்துக் கதறுகிறார் ஆழ்வார்.*

*"ஆர்த்துவண்டு அலம்பும்சோ லை*
*அணிதிரு அரங்கம்தன் னுள்*
*கார்த்திரள் அனையமே னிக்*
*கண்ணனே உன்னைக்கா ணும்*
*மார்க்கம்ஒன் றறியமாட் டா*
*மனுசரில் துரியன்ஆ ய*
*மூர்க்கனேன் வந்துநின் றேன்*
*மூர்க்கனேன் மூர்க்கனே னே!"*

**(ஆர்க்கும் - ஆரவாரத்தோடு புஷ்பத்தில் அளையும். கத்திரள் மேகக்கூட்டம் துரியன் - துஷ்டன்.)**

(11)

*பெண்மையை மதிக்க வேண்டும். மதித்து உறவாட வேண்டும் மதித்து உபசரிக்க வேண்டும். இது மனைவிக்குக் கணவன் செய்ய வேண்டிய கடமை.*

*ஆனால் தன்னையே பெண்மையிடம் பறிகொடுத்து விடக் கூடாது.*

*காம இச்சைக்கு அடிமை ஆவதன் மூலம் பொய்வருகிறது. கொலைபாதகம் நிகழ்கிறது. சகல அட்டூழியங்களுக்கும் மூலம் திருட்டுத்தனமான காமவெறிதான்.*

இந்தப் பாவிகளை நினைத்தால் யாருக்கும் ஆங்காரம் வரும். ஆனால் ஆழ்வார் போன்ற பக்தர்களுக்கோ இரக்கம் உண்டாகி விடுகிறது. அவர்கள் மேலம்

*"மெய்யெலாம் போகவிட்டு*
*விரிகுழ லாரில்பட் டு*
*பொய்யெலாம் பொதிந்துகொண்ட*
*போழ்க்கணேன் வந்துநின் றேன்;*
*ஐயனே! அரங்கனே உன்*
*அருள்என்னும் ஆசைதன் னால்*
*பொய்யனேன் வந்துநின் றேன்*
*பொய்யனேன் பொய்யனே னே!"*

(மெய் - உண்மை. மானம் மரியாதை முதலிய உண்மைத் தன்மைகள். விரிகுழலார் - பெண்கள். போழ்க்கணேன் - போக்கிலி.

வந்து நின்றேன் - வந்துவிட்டேன், என்னை (யும்) காப்பாற்ற வேண்டும்.)

(12)

பெருமானே! நானொரு வேஷக்காரன். பக்தர்களைப் போல் வேஷம்போடுகிறேன். நியமம் தவறாமல் பூஜை பண்ணுகிறேன் மந்திரங்களை உச்சரிக்கிறேன். மௌன வேஷம் போட்டுத் தியானமும் பண்ணுகிறேன்.

இந்தத் துணிச்சல் எனக்கு எப்படி வந்தது? நீ எங்கோ இருக்கிறாய் என்னும் அசட்டுத் தனத்திலிருந்து வந்தது.

ஆனால் இப்பொழுதுதான் தெரிகிறது, நீ எனக்கு உள்ளேயே இருக்கிறாய் என்று. அவ்வளவுதான் முதலில் அவமானப்பட்டேன். பிறகு என் செயலை நினைக்க நினைக்க உள்ளுக்குள்ளேயே சிரிப்பாய் வருகிறது எனக்கு.

*"உள்ளத்தே உறையும்மா லே!*
*உள்குவான் உணர்வொன்றில் லாக்*
*கள்ளத்தேன் நானும்தொண் டாய்*
*தொண்டுக்காம் கோலம்பூண் டேன்;*
*உள்குவார் உள்கிற்றெல் லாம்*
*உள்ளிருந்து அறிதிஎன் று*
*வெள்கிப்போய் யான்என்உள் ளே*
*விலாவறச் சிரித்திட்டே னே"*

(உள்குவான் உயர்வு ஒன்று இல்லாக் கள்ளத்தேன் - நினைப்

பதற்கே தகுதியற்ற திருடன் நான். தொண்டுக்கு ஆம் கோலம் பூண்டேன் - ஆனாலும் பரம பக்தனைப்போல வேஷம் போட்டேன்.

உள்குவார் உள்கிற்று எல்லாம் உடன் இருந்து அறிதி என்று - நீ கூடவே இருக்கிறாய் எல்லோருடைய நினைப்பையும் நோக்கத்தையும் தெரிந்து கொள்கிறாய்!.

குறிப்பு: - *போலித்தனம் என்பது அனாதியான தத்துவம். எல்லாத் துறைகளிலும் அது உண்டு, பக்தித் துறையிலும் உண்டு, ஆழ்வார் காலத்திலும் உண்டு.*

(13)

*பெருமானே! உன்னைத் தவிர வேறு யார் இருக்கிறார்கள் எனக்கு? மாவலியிடம் மண்வேண்டி அளந்தாய், அது மட்டுமா? பேரண்டம் முழுவதும் வியாபித்தும் இருக்கிறாய், உன்னையே நம்புகிறேன். உன்னையே பாவிக்கின்றேன். உன்னையே தஞ்சம் என்று பற்றுகிறேன்.*

*''தாவிஅன் றுலகம்எல் லாம்*
*தலைவிளாக் கொண்டஎந் தாய்!*
*சேவியேன் உன்னைஅல் லால்*
*சிக்கெனச் செங்கண்மா லே!*
*ஆவியே! அமுதேஎன் தன்*
*ஆருயிர் அனையஎந் தாய்!*
*பாவியேன் உன்னைஅல் லால்*
*பாவியேன் பாவியே னே!''*

(தலைவிளாக்கொண்ட எந்தாய் - முழுவதும் வியாபித்த பெருமானே! சிக்கென - இறகப்பற்றி. உன்னை அல்லால் சேவியேன் உன்னையே வணங்குகிறேன். உன்னை அல்லால் பாவியேன் - எப்பொழுதும் உன் ஞாபகந்தான், உன்னைத் தவிர வேறு எதையும் நான் பாவிக்கமாட்டேன்.)

(14)

*தாயைப் பிரிந்து கன்று தவிப்பது போல உன்னையே எண்ணி எண்ணித் தவிக்கிறேன் நான். மலையையே குடையாகத் தூக்கிப் பிடித்துப் பசுக்களையும் கன்றுகளையும் காத்தவன் அல்லவா நீ?*

*ஏன் என்னைக் கவனிக்கமாட்டேன் என்கிறாய்? பெருமானே! காரணம் என்ன சொல்லும்.*

*''மழைக்கன்று வரைமுன்ஏந் தும்*
*மைந்தனே! மதுரஆ றே*

*உழைக்கன்றே போலநோக் கம்*
*உடையவர் வலையுள்பட் டு*
*அழைக்கின்றேற்கு என்னைநோக்கா து*
*ஒழிவதே? உன்னைஅன் றேர்*
*அகைக்கின்றேன் ஆதிமூர்த் தி*
*அரங்கமா நகருளா னே!"*

**(மழைக்கு அன்று - முன்னொரு காலத்தில் பிரளய மழைக்காக உறவாடி வரை - மலை. உழைகன்றுபோல - தாயைப் பிரிந்த கன்று போல், உடையவர் வலையுள்பட்டு - பெருமானே உன் கோலத்தில் சிக்கி, அழைக்கின்றேன்கு - கூவிக்கூவிக் கூப்பாடு போடகிற என்னை. நோக் காது. ஒழிவதே - பார்க்காமல் - கவனிக்காமல் இருக்க என்ன காரணம்?)**

*உன்னைத் தானே நான் கதறிக் கதறி அழைக்கின்றேன். இதுகூட விளங்கவில்லையே உனக்கு மதுரம் - தித்திப்பு. மதுர ஆறே - தித்திக்கும் அமிர்த வெள்ளமல்லவா நீ!*

(15)

*நம்பி அழைக்க அழைக்க ஏன் என்று கேட்காமலா போவார் பெருமாள்? என்னப்பா விஷயம் என்று கேட்டார். கேட்டது மட்டுமா? பயல் நம்ம ஆள் என்று. பரிவே உண்டாகிவிட்டது பெருமாளுக்கு.*

*திருவரங்கத்தில் எங்கு பார்த்தாலும் முனிவர்களும் யோகிகளும் கூட்டம் கூட்டமாய் இருக்கிறார்கள்.*

*உள்ளொளி பெற்ற பக்தர்களை அழைத்து, விப்ர நாராயணன் பொடியன்தான், ஆயினும் அவனைச் சேர்த்து வைத்துக் கொள்ளுங்கள் என்று அருள் பாலித்தும் விட்டார்.*

*அடடா! எம்பெருமானின் அருளை என்னென்று சொல்ல?*

*"தெளிவிலாக் கலங்கள்நீர் சூழ்*
*திரு அரங் கத்துள் ஓங் கும்*
*ஒளிஉளார் தாமேஅன் றோ*
*தந்தையும் தாயும்ஆ வார்;*
*எளியதோர் அருளும்அன் றே*
*என்திறத்து எம்பிரா னார்*
*அளியன்நம் பையல் என் றார்*
*அம்மவோ கொடியஆ றே"*

**(தெளிவிலாக் கலங்கல் சூழ்நீர் - இது எந்த இடத்து மரக்கலம் என்று தெளியமுடியாதபடி மரக்கலங்கள் ஒன்றோடோன்று சேர்ந்து**

கிடக்கும் காவிரி, ஒளி உளார் - மெய்யுணர்வு பெற்ற பக்தர். அவர்கள் தாம் தாயும் தந்தையும் எனக்கு. அளியன் நம் பையல் என்றார் - விப்பிரநாராயணன் நம்ம பயல் கவனித்துக் கொள்ளுங்கள் என்றார். பெருமானின் அருள் எளியதிலும் எளியதுதான். ஆனால் எத்தனை நியமங்களைக் கடைப்பிடிக்க வேண்டியுள்ளது. இறைவனுடைய எளிமையிலும் ஒரு (கொடிய ஆறு) கடுமை இருக்கத்தான் செய்கிறது.)

(16)

*எம்பெருமானே! நீர் பொல்லாத ஆசாமி தான், ஆசாபாசம் அவ்வளவையும் துடைத்துத் துப்புரவான பிறகுதான் ஒருவரை ஏற்றுக் கொள்கிறீர் நீர்.*

*ஆனால் அதற்கு அடையாளமாக தலைரோமத்தையே வேரோடு பிடுங்கி மழுங்க அடித்துவிடுகிறார்கள் பல சோம்பர் (துறவி)கள்.*

*"மேம்பொருள் போகவிட் டு,*
*மெய்ம்மையை மிகஉணர்ந் து,*
*ஆம்பரிசு அறிந்துகொண் டு,*
*ஐம்புலன் அகத்தடக் கி,*
*காம்பறத் தலைசிரைத் துன்*
*கடைத்தலை இருந்துவா ழும்*
*சோம்பரை உகத்திபோ லும்*
*சூழ்புனல் அரங்கத்தா னே!"*

(மேம்பொருள் போகவிட்டு - மேம்போக்கான (ஆடம்பரங்களை) காரியங்களை உதறி எறிந்து விட்டு, ஆம்பரிசு அறிந்து - எது தேவை என்பதைத் தெரிந்து, அகத்து அடக்கி - மனசின் கட்டுப்பாட்டில் வைத்து, காம்பு - முளை, சோம்பர் - பரபரப்பு இல்லாமல் அமைதி யாக இருக்கும் ஆன்றோர்.)

(17)

*ஈவு இரக்கம் இல்லாத கொலை பாதகர்கள் கூட திருமாலிடம் நம்பிக்கை வைத்துப் பக்தி கொண்டு விட்டால் போதும்.*

*அவர்களுக்கும் அருள் பாலிப்பார் பெருமாள்.*

*"திருமறு மார்பநின் னைச்*
*சிந்தையுள் திகழவைத் து*
*மருவிய மனத்தாரா கில்*
*மாநிலத்து உயிர்கள்எல் லாம்*

*வெருவரக் கொன்றுசுட்டிட்டு*
*ஈட்டிய வினையரே னும்*
*அடியரை உகத்திபோ லும்*
*அரங்கமா நகருளா னே!"*

(திருமறுமார்ப - திருமகளை இதயத்தில் வைத்திருக்கும் திருமாலே! வெருவர - பயப்படும் படி. ஈட்டிய வினையர் - பாவத்தைப் பெருக்குகிறவர்கள். உகத்தி போலும் - விரும்புவாய் போலும்.)

**குறிப்பு:** *நல்லதுக்கும் நமக்குச் சம்மந்தமில்லை கெட்டதுக்கும் நமக்குச் சம்பந்தம் இல்லை, எல்லாம் இறைவன் செயலே.*

(18)

*பக்தி என்பது அந்த உணர்வுதான். பிறகு பக்தர்களை எப்படிக் கைவிடுவார் பெருமாள்?*

*பக்தர்களுடைய எச்சில்கூட அமிர்தந்தான் என்கிறார் ஆழ்வார். பக்தர்கள் போக்கிரிகளாக இரந்தாலும் சரி, அவர்கள் சாப்பிட்டு வைத்த மிச்சம் அமிர்தமேதான்.*

*பகதியின ஆழவசம அபபடி.*

*"வானுளார் அறியலா கா*
*வானவா என்பாரா கில்,*
*தேனுலாம் துளபமா லைச்*
*சென்னியாய் என்பாரா கில்,*
*ஊனம்ஆ யினகள்செய் யும்*
*ஊனகா ரவர்களே னும்*
*போனகம் செய்தசே டம்*
*தருவரேல் புனிதம்அன் றே"*

(தேன் உலாம் - தேன் கசியும். சென்னி - தலை, ஊனம் - தவறு ஊனகர் - வெறும்தடியர், போனகம் - சாப்பாடு. சேடம் - மிச்சம்.)

**குறிப்பு:** *காதலின் வேகந்தான் பக்தியின் வேகமும். அதரபானம் தேவபானமாகத் தித்திக்கிற கணக்குத்தான்.*

(19)

*கருணைக் கடல் என்றால் திருமால் தான். ஐயம் திரிபறக்கற்று ணர்ந்த ஞானிகளிடம் அவன் வேண்டுவது இதுதான்.*

*"குற்றமற்ற முனிபுங்கவர்களே! நம்மீது பக்திகொண்டவன் உள்ளத்தைப் பாருங்கள். உம்மை மட்டும் பார்க்காதீர்கள்.*

*யாராக இருந்தாலும் பக்தனை வழிபடுங்கள். திருமண உறவுகூட வைத்துக் கொள்ளுங்கள்".*

*"பழுதிலா ஒழுகல்ஆற் றும்*
*பலசதுப் பேதிமார் காள்!*
*இழிகுலத் தவர்களே னும்*
*எம்மடி யார்களா கில்*
*தொழுமின்நீர் கொடுமின்கொண் மின்*
*என்றுநின் னோடும்ஒக் க*
*வழிபட அருளினாய் போல்*
*மதில்திரு அரங்கத்தா னே!"*

(பழுதுஇலா - குற்றம் இல்லாபடி, ஒழுகல் ஆற்றும் - ஒழுக்க றெநியில் நின்று வாழும் பலசதுப்பேதிமார்கள் - ஒழுக்கக்களஞ் சியங்களே! தொழுமின் - வணங்குங்கள் கொண்மின் - வாங்குங்கள், நின்னோடும் ஒக்க - உனக்கு எல்லோரும் ஒரே மாதிரியானது போல, அடியார் கூட்டத்தையும் ஒன்றாய் நின்று வழிபட வைத்து விட்டாய், மதில் - கோட்டை.)

(20)

இனி இறைவனிடமே ஒருகேள்வியைப் போட்டு அவனை மடக்கப் பார்க்கிறார் ஆழ்வார்.

எப்படி?

பெருமானே சிவபெருமானும் பிரம்மாவும் ஊழி ஊழி காலமாகத் தவம் செய்கிறார்கள். உன்னை நேரில் ஒரு தடவையேனும் பார்த்துவிட வேண்டும் என்பதற்குத்தான்.

ஆனாலும் உன்னைத்தரிசிக்கும் பாக்கியம் அவர்களுக்குக் கிடைக்கவில்லை. ஆனால் 'ஆதிமூலமே' என்று ஒரு யானை கூப்பாடு போட்டது, உடனே அதன் முன் வந்த நின்றாய்.

அல்லும் பகலும் கதறி அழைத்த சிவனையும் பிரம்மாவையும் நீ மட்டம் தட்டி விட்டாய், இது தெரிந்தும் அடியார் கூட்டம் கோவிந்தா கோவிந்தா என்று கூப்பாடு போட்டுக் கொண்டி ருக்கிறதே, அவர்களுக்காகவது அருள் பாலிப்பாயா?

***"பெண்ணுலாம் சடையினா னும்,***
***பிரம்மனும் உன்னைக்காண் பான்***
***எண்ணிலா ஊழி ஊழி***
***தவம்செய்வார் வெள்கிநிற் ப,***
***விண்ணுளார் வியப்பவந் து***
***ஆனைக்கன்று அருளியீந் த***
***கண்ணறா! உன்னைஎன் னோ***
***களைகணாக் கருதும்ஆ றே?"***

(பெண் உலாம் சடையினானும் - சிவபெருமான், பெண் - கங்கை, உலாம் சடை - தவழும்சடைமுடி, காண்பான் - நேரில் காண, வெள்கிநிற்ப - சிவனும் பிரம்மனும் வெட்கப்படும்படி, விண்ணுளார் ? தேவர்கள், கண்ணறா - கண்ணோட்டம் என்னும் தாட்சண்யம் இல்லாத பெருமானே! களைகணா - ஆதரவு என்று நம்பி.)

(21)

நான்கு வேதங்களையும் அவற்றோடு ஒட்டிய ஆறு அங்கங்களையும் கற்றுத் தெளிவது சாமான்ய காரியம் அல்ல.

அப்படியெல்லாம் கற்ற சாஸ்திர விற்பன்னர்களே ஆளுக்கொரு மூலையைப் பார்ப்பார்கள், எல்லோரும் ஒன்றுபட்டு ஒன்றைப் பார்க்கிற காரியம் - 'ஒன்றாகக் காண்பதே காட்சி' என்பது அவர் களுக்கு ஒத்து வராது.

அப்படியானால் அவர்களை ஒன்றுபடுத்தி வழிநடத்துவது (தலைமை தாங்குவது) மிகமிகக் கடினம்.

அந்தணர்களிலேயே அவர் அவர்களுக்குக்கென்று ஒரு தனி மரியாதை. சாஸ்திரிகள், வேதப்பிராமணாள், ஆச்சாரியார், தேசிகன் என்றெல்லாம் அவர்களுக்குப் பட்டாபிஷேகம் வேறு.

என்ன இருந்து என்ன பலன்? பக்தி இல்லைஎன்றால் ஒன்றும் இல்லை. காட்டு மிராண்டியை (புலி, யானை-) விட மட்டமானவன் பக்தி இல்லாதவன்.

அப்படியானால் பக்தி உள்ளவன்தான் ஞானி. சாமான்ய வேடனாகிய குகன்கூட ஆழ்வார்களெல்லாம் புகழ்ந்து பாராட்டக் கூடிய ஞானியாகிவிடுவான்.

திருவரங்கப் பெருமானிடமே இந்த ரகஸ்யத்தைச் சொல்கிறார் ஆழ்வார்.

*"அமர ஓர்அங்கம்ஆ றும்*
*வேதம்ஓர் நான்கும்ஓ தித்,*
*தமர்களில் தலைவரா ய*
*சாதிஅந் தணர்களே னும்*
*நுமர்களைப் பழிப்பாரா கில்*
*நொடிப்பதோர் அளவில்ஆங் கே*
*அவர்கள்தாம் புலையர்போ லும்*
*அரங்கமா நகருளா னே!"*

(அமர - ஆரஅமர இருந்து ஆராய்ந்து. தமர்களில் தலைவர் - தம்மை ஒத்த எல்லோருக்கும் தலைவர். நுமர் - உம் அடியார்கள் நொடிப்பதோர் அளவில் - சொடக்குப் போடும் நேரத்தில், அப்பொழுதே.)





# குலசேகர ஆழ்வார்

## குலசேகரப் பெருமாள் திருமொழி

**ப**க்தி என்பது ஒன்று தான். ஆனாலும் உண்மையை நோக்கி அது தாவிப்பாயும் வேகம் பலவகை, கட்டிப்பிடித்துத் தழுவும் ஆதங்கத்திலும் வகைகள் பல.

அதனால் பலநிலைகளில் பல தோற்றங்களில் காட்சி கொடுக்கிறது பக்தி. குலசேகரப் பெருமானின் பக்தி அதில் ஒரு வகை.

குலசேகரப் பெருமாள் சேரநாட்டில் திருவஞ்சைக் களத்தில் பிறந்தவர். கோழிக்கூடு வட்டாரத்துக்கு அரசர்.

திருமாலின் லீலா விநோதங்களைப் படிக்கும் போது தன்னை மறந்து விடுவார். திருமாலைப் பற்றி மற்றவர்கள் சொல்ல அதைக் கேட்கும் பொழுதும் அப்படியே,

தன்னையே இழந்துவிடுவார். ராமனாக கிருஷ்ணனாக மாறிவிடுவார். கதைகளில் அவர்களுக்கு வெற்றியும் மங்களமும் கிடைக்கிற பொழுது இவர் அவற்றைத் தமக்குக் கிடைத்தவையாக அனுபவிப்பார். அவர்க ளுக்கு இடையூறும் தொல்லையும் ஏற்படுகிற பொழுது அவற்றையும் தமக்கு ஏற்பட்டவையாகப் பாவித்து வருந்துவார்.

கதைகள் கேட்கும் பொழுது அவற்றை நடந்து முடிந்தவை என்று நினைக்காமல் இப்பொழுதுதான் அவை நடைபெறுவதாகப் பாவித்து ஈடுபடுவார். ராமச் சந்திரமூர்த் திக்காகத் தம்சேனைகளைத் திரட்டி இலங்கைமேல் படைஎடுக்கிற அளவுக்கு பக்திவசப்பட்டவர் ஆழ்வார்.

திருமாலை மதிப்பதுபோலவே வைஷ்ணவ அடியார்களையும் மதிக்கிறவர் இவர். ஒரு சமயம் ராஜ்யப்பொறுப்பே வேண்டாம் என்று உதறி எறிந்துவிட்டு ஸ்ரீரங்கம் போய் பெருமாளுக்குத் தொண்டு செய்து அங்கேயே தங்கிவிடத் தீர்மானித்துவிட்டார்.

இதை அறிந்த அமைச்சர்கள் இவர் அதைச் செய்யாமலிருக்க வைஷ்ணவ பாகவதர்கள் பலரை வரவழைத்தார்கள். ஆழ்வாரைச் சந்திக்கச் செய்தார்கள்.

பாகவதர்களுடன் உறவாட உறவாட இங்கிருந்தே திருமாலைச் சேவித்தால் போதும் என்று தீர்மானித்துவிட்டார் ஆழ்வார்.

நாளாக நாளாக பாகவதர் கூட்டம் பெருத்து விட்டது. பாகவதர் சொல்படிதான் அரசரும் செயல்பட ஆரம்பித்துவிட்டார். இது அமைச்சர்களுக்கு எரிச்சலை உண்டுபண்ணியது. பொறாமை வந்தால் எரிச்சல் தானே வரும்?

அரசியல் என்று வந்துவிட்டால் புண்ணியம் பாவம் எல்லாம் தலைகீழாக மாறிவிடும். எதை வேண்டுமானாலும் பலியிடத் துணிந்துவிடும். அப்படி ஒரு சதியை உருவாக்கிவிட்டார்கள் அமைச்சர்கள்.

பெருமானின் திருவாபரணத்தில் ஒன்றை இவர்களே களவாடினார்கள். பிறகு, பாகவதர்கள்தாம் இதைச் செய்திருக்க வேண்டும் என்று வாதாடவும் செய்தார்கள.

வேதனைப்பட்டார் ஆழ்வார். ''நானே என்னைப் பலியாக வைத்து உண்மையை நிரூபிக்கிறேன் என்றார். மூர்க்கமான கொடிய சர்ப்பம் ஒன்றைக் குடத்துள் அடைத்தார். நகையைப் பாகவதர்கள் திருடி இருந்தால் சர்ப்பம் என்னைத் தீண்டட்டும் என்று கையை விட்டார்.

படுமெடுத்து ஆடியதே தவிர கடிக்கவில்லை பாம்பு. திருடர்கள் குற்றத்தை ஒப்புக்கொண்டார்கள். மன்னிப்புக் கேட்டார்கள். மன்னிப்பும் வழங்கினார். ''அரசியலில் இவ்வளவு அயோக்கியத்தனங்களா இருக்கின்றன என்று ஆயாசப்பட்டார் ஆழ்வார்.

ஆயாசம் விடவில்லை. ராஜ்யத்தை மகனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்து வழங்கினார். ஸ்ரீரங்கத்துக்கு வந்து பெருமானின் எல்லையற்ற அழகைப் பருகிப்பருகி உருகினார்.

திருவேங்கடம், அயோத்தி திருக்கண்ணபுரம், தில்லைச் சித்ரகூடம், அழகர்மலை முதலிய திவ்யதேசங்களுக்கும் போய் வந்தார். பெருமானைக்கண் குளிரக்கண்டு மகிழ்ந்தார்.

நெல்லை மாவட்டம் அம்பாசமுத்திரம் வட்டத்தில் உள்ள மன்னார் குடிக்கு வந்தார். அங்குள்ள ராஜகோபால ஸ்வாமிக்கு கோவிலிலிருந்தே திருத்தொண்டு செய்தார்.

முக்திநிலை பெற்றதும் அங்குதான்.

ஸ்ரீரங்கமும், அரங்க நாதரும், அவர்பள்ளிகொண்ட திருக்கோலமும் ஆழ்வாரைப் பரவசப்படுத்தின. எங்குபோனாலும் அவை

கூடவே வரும். அவற்றைப் பார்த்துப் பார்த்துக் கண்ணீர் பெருகக் கரைவார் ஆழ்வார்.

இதோ ஆழ்வார் உருகுவதைப் பாருங்கள்.

*"இருள்இரியச் சுடர் மணிகள்*
*இமைக்கும்நெற் றி*
*இனத்துத்தி அணிபணம் ஆ*
*யிரங்கள் ஆர்ந் த*
*அரவரசப் பெருஞ்சோதி*
*அனந்தன்என் னும்*
*அணிவிளங்கும் உயர்செம்பொன்*
*அணையைமே வி,*
*திருவரங்கப் பெருநகருள்*
*தெண்ணீர்ப்பொன் னி*
*திரைக்கையால் அடிவருடப்*
*பள்ளிகொள் ளும்*
*கருமணியைக் கோமளத்தைக்*
*கண்டுகொண் டென்*
*கண்ணிணைகள் எனறுகொலோ!*
*களிக்கும் நா ளே"*

(இருள் இரிய - இருட்டு ஓட, நெற்றி - தலை, துத்தி - புள்ளி, அணிபணம் - அழகிய படங்கள், பாம்பின். படங்கள், அரவு அரசு - சர்ப்பங்களுக்கு ராஜா அனந்தன் (ஆதிசேஷன்). அவன் தான் மெத்தை, படுக்கை. பொன்னி - காவிரி - திரை - அலை, கருமணியைக் கோமளத்தை - பெருமானின் திவ்யதிருக்கோலத்தை, களிக்கும் நாள் என்றுகொல்? பார்த்துப் பார்த்துப் பரவசம் அடையும் நாள் என்று வருமோ எனக்கு?)

(2)

அரங்கநாதன் அருளுக்கும் ஆனந்தத்துக்கும் இணையாக எதைச்சொல்ல? அருளிச் செயல் என்று போற்றுப்படும் தமிழ்பாசுரங்களைத்தான் இணையாகச் சொல்ல முடியும். அவனை ஞானிகள் தொடர்ந்து நினைப்பார்கள். அவன் புகழையே பேசுவார்கள். பேசப்பேச அவர்கள் வாயில் தேனூறும்.

ஞானிகள் நிறைந்த இடம் திருவரங்கம்.

*"மாவினைவாய் பிளந்துகந்த*
*மாலைவே லை*
*வண்ணனை, என் கண்ணனை,வன்*
*குன்றம்ஏந் தி*

*ஆவினைஅன்று உயக்கொண்ட*
*ஆயர்ஏற் றை,*
*அமரர்கள்தம் தலைவனைச், செந்*
*தமிழ்இன் பப்*
*பாவினைப்,பற் றற்றார்வாய்*
*அமுதை, நீங்காப்*
*பழவடியார் சூழரங்கப்*
*பள்ளிமே ய*
*கோவினை,நா உறவாழ்த்தி*
*என்தன்கை கள்*
*கொய்மலர்தூய் என்றுகொலோ*
*கூப்பும்நா ளே!"*

(மாவினைவாய்பிளந்து - கொல்லவந்த பிராணியின் வாயைப் பிளந்தும்; வேலைவண்ணன் - கடல் நிறவண்ணன். குன்று-மலை, ஆ - பசு, உயக்கொண்ட - பாதுகாத்த, கூப்பும் - கும்பிடும் நாள்.)

(3)

மனதில் முளைத்த எல்லா ஆசைகளையும் களைந்தெறிந்து விட்டார்கள் பக்தர்கள். களைபறித்த பள்ளத்தைத் தூர்த்தும் விட்டார்கள். ஆனால் பகவான் மேல் உண்டாகும் ஆசையை ஒன்றும் செய்ய முடியவில்லை பக்தர்களால்.

அவர்கள் கூட்டம் கூட்டமாய் வந்து அரங்கனைச் சேவிக் கிறார்கள். அரங்கநாதா! அனந்தசயனா! என்று கூவிக்கூவி ஆனந்தக் கண்ணீர் வடிக்கிறார்கள்.

அதை அனுபவிப்பதைவிட அரிய பெரும்பேறு வேறு என்ன இருக்கிறது?

*"தூராத மனக்காதல்*
*தொண்டர்தங் கள்*
*குழாம்குழுமித் திருப்புகழ்கள்*
*பலவும்பா டி,*
*ஆராத களிப்போடு*
*அழுதகண் ணீர்*
*மழைசோர நனைந்துருகி*
*ஏத்திநா ளும்*
*சீரார்ந்த முழவோசை*
*பரவைகாட் டும்*
*திருவரங்கத்து அரவணையில்*
*பள்ளிகொள் ளும்*

*போராழி அம்மானைக்*
*கண்டுதுள் ளிப்*
*பூதலத்தே என்றுகொலோ!*
*புரளும்நா ளே!"*

(தூராத - தூர்க்கமுடியாத. மனக்காதல் - பக்தி. குழுமி - கூடி, ஆராத - வற்றாத, களிப்பு - ஆனந்தம். முழுவோசை பரவை காட்டும் திருவரங்கம் - முரசவாத்தியங்களின் ஒலி கடல் ஒலி போல முழங்கும் இடம் திருவரங்கம். அரவணை - அனந்தசயனம். போராழி அம்மான் - எதிரிகளை யுத்தத்தில் தொம்சம் பண்ணும் சக்கரம். ஆழி - சக்கரம்.)

(4)

*ஒவ்வோர் அம்சத்திலும் பொய்யும் பித்தலாட்டமுமாய் பரிணமிக்கிறது பிழைப்பு - அதாவது உலகியல் 'என்னய்யா இது அனியாயமாக இருக்கிறதே' என்றால் 'பிழைக்கத்தெரியாத பைத்தியம் நீ' என்கிறார்கள்.*

*ஆம், நான் பைத்தியந்தான். திருவரங்கன் மேல் காதல் கொண்ட பைத்திய்மேதான் நான் என்கிறார் குலசேகரப்பெருமாள்.*

*"மெய்யில் வாழ்க்கையை*
*மெய்யெனக் கொள்ளும்இவ்*
*வையம் தன்னொடும்*
*கூடுவது இல்லையான்;*
*ஐய னே!அரங்*
*கா!என்று அழைக்கிறேன்*
*மையல் கொண்டொழிந்*
*தேன்என்தன் மாலுக்கே"*

(மெய்இல் - உண்மை இல்லாத. வாழ்க்கை - பிழைப்பு, வையம் - உலகியல், யான்கூடுவது இல்லை - என்னால் ஒத்துப் போக முடியவில்லை, மையல் கொண்டொழிந்தேன் - பைத்தியம் கொண்டுவிட்டேன். என்மாலுக்கு - எம்பெருமானாகிய என்னுடைய திருமாலிடம்.)

(5)

*கொஞ்சம் வாழ்க்கையைப் பின்னோக்கிப் பார்த்தால் அங்கங்கே அதிசயங்கள் தெரியும். ஆர அமரப் பொறுமையாகப் பார்க்க வேண்டும். சாப்பாட்டுப் பந்திக்குப் போஜனப் புரைக்குள் ஓடுவதுபோல வேகம் கூடாது.*

*மிக மிக மட்டமான முறையில் அதல பாதாலத்தை நோக்கி*

விழ இருந்த நம்மை ஏதோஒன்று வந்து எப்படியோ திசை திருப்பிக் கொண்டுபோனது தெரியும்.

அணுவளவு கவனக்குறைவாக இருந்தாலும் அதோகதிதான் ஏற்பட்டிருக்கும். இப்படித் தடுத்தாட்கொண்டது தெய்வந்தான்.

உடனுக்குடன் இதைத் தெரிந்த கொண்டவர்கள் மகான்கள். அவர்கள் சொல்லும் அனுபவங்களே சத்திய சோதனை, அவர்கள் வழிவேறு.

இனி, அதைப்பற்றி நினைப்பே இல்லாமல் பிழைப்பை நடத்தியவர்கள் மேலும் மேலும் ஒற்றை வழித்தடத்திலே வண்டியை ஓட்டுகிறவர்களே.

குலசேகரப்பெருமாளோ உடனுக்குடன் உண்மையைப் பார்த்தவர். பாதையை அப்பொழுதே மாற்றிக் கொண்டவர். இதோ அவர் வாக்குமூலம்.

*"எத்தி றத்தினும்*
*யாரொடும் கூடும்அச்*
*சித்தம் தன்னைத்*
*தவிர்த்தனன் செங்கண்மால்;*
*அத்த னேஅரங்*
*காஎன்று அழைக்கின்றேன்*
*பித்த னாய்ஒழிந்.*
*தேன்எம் பிரானுக்கே"*

(எத்திறத்தினும் - ஒவ்வொரு செயலினும், யாரொடும் - நல்லவர் கெட்டவர் என்று பாராமல் ஒவ்வொருவருடனும் கூடும். சித்தம் தன்னை - காரியந்தானே முக்கியம், யாராக இருந்தால் நமக்கென்ன என்று பாய்ந்தோடும் மனத்தை. சித்தம் - மனம். தவிர்த்தனள் - தடுத்து வழிகாட்டினான். பித்தனாய் - பைத்தியமாய்.)

(6)

கணவன் மனைவிக்குள்ளேயே பலகருத்துகள் ஒத்துப்போக மாட்டேன் என்கின்றன.

கணவனுடைய காரியங்களில் பல கிறுக்குத் தனமாகத் தெரிகின்றன மனைவிக்கு. அப்படியே மனைவியின் காரியங்கள் பல கோமாளித்தனங்களாகத் தெரிகின்றன கணவனுக்கு

ஆனாலும் இரண்டுபேரும் அன்யோன்யமாகவே வாழ்கிறார்கள். ஒருவர்மேல் ஒருவர் உயிரைவைத்தே வாழ்கிறார்கள்.

வாழ்க்கை என்றால் வேற்றுமைக்குள்ளே ஒரு ஒற்றுமை. சகிப்புத் தன்மை, பொறுமை.

முற்றத்துறந்த முனிவர்கள் நிலையும் அப்படித்தான்.

உண்மை தெரியாமல் பொய்யில் கிடந்து இப்படி உழல்கிறார்களே மனிதர்கள் என்று அவர்கள் பரிவுகாட்டுகிறார்கள் நம்மேல்.

நாமோ, என்ன பைத்தியக்காரத்தனம் இது? அனுபவிக்க வேண்டியவற்றை எல்லாம் அனுபவிக்காமல் இப்படிப் பண்டாரம் பரதேசிகளாய்த் திரிகிறார்களே இவர்கள் என்று கண்ணடித்துச் சிரிக்கிறோம்.

என்ன செய்ய? குடும்ப் நிலை மாதிரிதான் உலகநிலையும்.

"பேய ரேஎனக்கு
யாவரும்; யானும்ஓர்
பேய னேஎவர்க்
கும்இது பேசினேன்!
ஆய னேஅரங்
காஎன்று அழைக்கின்றேன்;
பேய னாய்ஒழிந்-
தேன்எம் பிரானுக்கே!"

(பேயனே எனக்கு யாவரும் - என்னுடைய பார்வையில் எல்லோரும் ஏமாந்த பைத்தியங்கள்தான். பேய்னே எவர்க்கும் யான் - அவர்கள் பார்வையில் நானும் அப்படித்தான். அதனால் இன்னும் உரத்த குரலில் கோபாலா, ரங்கநாதா என்று கூப்பாடு போடு கிறேன். அப்படித்தான் போடுவேன்.)

(7)

எம்பெருமானோ நின்று வரவேற்கிறான் அடியவர்களை வேங்கடமலையில். அவன் சந்நிதியை ஒட்டிய தீர்த்தக்கரையில் ஒரு நாரையாய் நிற்க வரம் தரமாட்டானா பெருமான் என்று ஏங்குகிறேன் நான்.

அதனால் கொழுப்பைத் தீனிபோட்டு வளர்க்கும் பணவெறியும் பதவி வெறியும் நிறைந்த மனிதப் பிறவி மட்டும் வேண்டவே வேண்டாம் என்கிறார் ஆழ்வார்.

"ஊனேறு செல்வத்து
உடற்பிறவி யான்வேண்டேன்
ஆனேறு ஏழ்வென்றான்
அடிமைத் திறம்அல்லால்;

கூன்ஏறு சங்கம்
இடத்தான்தன் வேங்கடத்து
கோனேரி வாழும்
குருகாய்ப் பிறப்பேனே"

(ஆன்ஏறு ஏழ்வென்றான் - எதிர்த்து வந்த காளைகள், ஏழையும் அடக்கிய கண்ணன். அடிமைத்திறம் அல்லாமல் - அவனுக்குப் பணிவிடை செய்ய வேண்டும். வாழ்நாள் எல்லாம் பணிவிடை செய்ய வேண்டும், அதுமுடிந்தபின் அவனைப்பார்த்துக் கொண்டே இருக்க, கோனேரி - தடாகக்கரையில். குருகாயப் பிறப்பேன் - நாரையாகப் பிறந்தாலே போதும். ஆனால் ஊன்ஏறு - கொழுப்பை வளர்க்கும். உடற்பிறவி - இந்த உடலோடு ஒட்டியபிறவி, மனிதப் பிற்வி. கூன்ஏறு சங்கம் - வளைந்த சங்கு."

**குறிப்பு:** *மனிதனிடந்தான் எல்லாம் என்னுடைய காரியமே என்னும் ஆணவம் - நான் என்னும் ஆணவம் உண்டு. புல்லி லிருந்து யானைவரை வேறு எதனிடமும் இந்தத் தடிப்புத்தி கிடையாது. ஆனாலும் தனக்கு அப்பால் ஒன்று இருக்கிறது என்று உணரவும் அந்த உணர்வில் திளைக்கவும் அந்த மனிதனால்தான் முடியும். அதில் ஆணவம் கரையும்.*

*ஆழ்வார் வேண்டுவது அந்த நிலையைத்தான். மாமனித நிலையைத்தான். நான் சாதாரண மனிதனாக இருக்க விரும்ப வில்லை. மாமனிதனாகத்தான் விருப்பம் எனக்கு என்று அது லெள்தீக்மாக இருக்காதே? அதற்காகத்தான் நாரையாய்ப் பிறக்க விருப்பம் என்கிறார்.*

(8)

*அரசியல் கையில் இருந்தால்போதும். அதிகாரம் சேவகம் பண்ணும் ஆடம்பரமும் படாடோபமும் சுற்றிச் சுற்றிவரும். காரணம் என்ன?*

*அரசியலுக்கு வலதுபக்கம் பணம், இடது பக்கம் உல்லாசம்.*

*பிறகு கண்ணெப்படித் தெரியும் பயலுக்கு? வேண்டவே வேண்டாம் இந்தத் தொல்லை என்கிறார் ஆழ்வார்.*

*திருவேங்கடமலையில் ஒரு சுனையில் மீனாய் பிறந்து உலாவினாலே போதும் என்கிறார் பெருமாள்.*

"ஆனாத செல்வத்து
அரம்பையர்கள் தற்சூழ
வான்ஆளும் செல்வமும்
மண்அரசும் யான்வேண்டேன்;

*தேனார்பூஞ் சோலை*
*திருவேங் கடச்சுனையில்*
*மீனாய்ப் பிறக்கும்*
*விதியுடையேன் ஆவேனே!''*

**(ஆனாத - குறையாத, மேலும் மேலும் கொட்டும். தன்சூழ - சுற்றிச் சுற்றிவர. வான்ஆளும் செல்வம் - நானாவிதமான போகங்கள்.)**

(9)

திருமாலைக் கண்குளிரப் பார்க்க வேண்டும். கோவிந்தா! கோவிந்தா என்று கூவவேண்டும். அதுதான் எனக்குத் தேவை.

அதற்காக வேங்கடமலையில் என்னபிறவி கிடைத்தாலும் ஏற்றுக் கொள்கிறேன். ஒரு செண்பகச் செடியாய் நிற்கக் கொடுத்து வைத்தாலே போதும். மறக்குமுடியாத பாக்கியம் அது.

*''ஒண்பவள வேலி*
*உலவுதண் பாற்கடலுள்*
*கண்துயிலும் மாயோன்*
*கழலிணைகள் காண்பதற்கு*
*பண்பகரும் வண்டினங்கள்*
*பரந்தா்டும் வேங்கடத்து*
*செண்பகமாய் நிற்கும்*
*திருவுடையேன் ஆவேனே!''*

**(ஒண்பவள வேலி உலவு - பளபள என்று ஜொலிக்கும் பவளக்கொடி அசைந்தாடும். தண் - குளிர்ச்சி. கண்துயிலும் - யோக நித்திரை புரியும். பண்பகரும் - சுதிசேர்த்து முரலும்.)**

(10)

திருவேங்கடமலையில் ஆங்காங்கே காட்டாறுகள் ஓடும். சில இடங்களில் பள்ளத்தை நோக்கி அருவிபோலத் துள்ளிப் பாயும்.

அப்படி ஒரு காட்டாறாய்ப் பிறப்பெடுக்க எனக்கு வாய்ப்புக் கிடைக்காதா என்று ஏங்குகிறார் ஆழ்வார். அது கிடைத்தால் போதும், சந்திரவட்டக் குடைக்கீழ் இருந்து அரசாட்சி நடத்துவது தேவை இல்லை என்கிறார்.

*''வானாளும் மாமதிபோல்*
*வெண்குடைக்கீழ் வானவர்தம்*
*கோனாகி வீற்றிருக்கும்*
*கொள்கை யதுவேண்டேன்;*

*தேனார்பூஞ் சோலைத்*
*திருவேங் கடமலைமேல்*
*கான்ஆறாய்ப் பாயும்*
*கருத்துடையேன் ஆவேனே!''*

(மதி - சந்திரன். கோன் - அரசன். கானாறு - காட்டாறு. கருத்து கொள்கை, லட்சியம்.)

(11)

நமது பழவினை புதுவினை ஒவ்வொன்றையும் வேரறக் களையும் வித்தகன் திருமால்தான்.

கொஞ்சம் யோசித்துப் பார்த்தால் போதும், நம் காரியம் ஒவ்வொன்றிலும் ஒரு தன்னலம் இருக்கும். ஆணவமும் இருக்கும். துர்நாற்றம் அடிக்கும் அவை. செடிநாற்றம் என்று சொல்வார்களே அவைதாம் இவை.

நாற்றம் ஒழிய வேண்டும். மணம் கமழவேண்டும் என்றால் திருவேங்கடமுடையான் திருவருள்தான் துணை.

அதற்காக அவன் சந்நிதியில் வாசல் படியாய்க் கிடக்கிறேன் என்கிறார் பெருமாள்.

*''செடியாய வல்வினைகள்*
*தீர்க்கும் திருமாலே!*
*நெடியானே வேங்கடவா!*
*நின்கோயி லின்வாசல்*
*அடியாரும் வானவரும்*
*அரம்பையரும் நடந்தியங்கும்*
*படியாய்க் கிடந்துன்*
*பவளவாய் காண்பேனே!''*

(செடி - நாற்றம். வாசல் - வாசலில். அரம்பையரும் - ஆடவர் மட்டுமல்ல, பெண்டிரும் மிதித்தேறிப் போகும்படி. உன் பவளவாய் - பவளம் போன்ற வாயிதழ்களை.)

(12)

ஒரு பொருளின் மேல் மதுரச்சுவை ஊற ஊற ஆணவம் கரையும். ஆணவம் கரையக்கரைய நான் ஆண், நான் பெண் என்கிற வேற்றுமை ஒழியும்.

நம்மை வசப்படுத்திய பொருள் அதற்கு எதுவோ அதுதான் நாயகம், வசப்பட்டநாமோ அர்ப்பணிக்கப்படும் காணிக்கை.

நாயக நாயகி பாவம் என்று கவிஞர்கள் சொல்வது இதையே.

காதல் என்று வந்துவிட்டால் அதில் ஊடல் தானே பிரதானம். குலசேகரப்பெருமாள் நாயகியின் பாவனையில் நின்று திருமாலிடம் ஊடல் (பிகுப்) பண்ணுகிறார்.

"ஏர்மலர்ப் பூங்குழல்
ஆயர்மா தர்
எனப்பலர் உள்ளஇவ்
ஊரில்உன் தன்
மார்வு தழுவதற்கு
ஆசைஇன் மை
அறிந்தறிந் தேஉன்தன்
பொய்யைக்கேட் டுக்,
கூர்மழை போல்பனிக்
கூதல்எய் திக்
கூசி நடுங்கிநின்
கோலம் காண
வார்மணல் குன்றில்
புரளநின் றேன்
வாசுதே வாஉன்
வரவுபார்த் தே!"

(ஏர் - அழகு. குழல் - கூந்தல். உனக்கு ஆசைநாயகிகள் பலர் இருப்பது தெரியும். அதனால் மார்வுதழுவதற்கு ஆசை இன்மை அறிந்த - உன்னைத் தழுவுவதற்கு எனக்கு விருப்பமே இல்லை, ஆனாலும் உன் பொய்யை நம்பி அடைமழை நடுங்குவது போல் நடுக்கும் பனியில் உன்னை எதிர்பார்த்து ஒதுக்குப்புறமான ஒரு மணல் திட்டில் படுத்துப் படுத்து உருண்டேன்.)

மோசக்காரன் அல்லவா நீ?

(13)

கூடலில் வெறியானது மேலே மேலே ஏறும். அதைவிட அதிகமாக ஏறும் ஊடலில் வெறி.

கையை உதறுவாள், முகத்தை ஒரு வெட்டு வெட்டித் திருப்புவாள், பொலுபொலுவென்று கண்ணீர் உகுப்பாள் பெண்.

"நீரெல்லாம் ஓர் ஆண்பிள்ளை, உமக்குப் பெண்டாட்டி பிள்ளை, குடும்பம் வேறு கேடு என்று ஒரு போடுபோடுவாள்."

சுடுசரம் தகிப்பதுபோல் தகிக்கும் சொற்கள்.

*அது காதலின் பொது இயல்.*

*இனி, என்னைப் போல் எத்தனை பெண்களை ஏமாற்றித் தவிக்க விடுகிறீர் நீர் என்று திருமாலிடம் நேரில் நின்று உறுமுகிறார் ஆழ்வார்.*

*"கருமலர்க் கூந்தல்*
*ஒருத்திதன் னைக்*
*கடைக்கணித் தாங்கே*
*ஒருத்திதன் பால்*
*மருவி மனம்வைத்து,*
*மற்றொருத் திக்கு*
*உரைத்தொரு பேதைக்குப்*
*பொய்குறித் து,*
*புரிகுழல் மங்கை*
*ஒருத்திதன் னை*
*புணர்தி; அவளுக்கும்*
*மெய்யயன்அல் லை;*
*மருதிறுத் தாய்உன்*
*வளர்த்தியூ டே*
*வளர்கின்ற தால்உன்தன்*
*மாயைதா னே!"*

(ஒரு பெண்ணிடம் கண்ணடித்து (கடைக்கண்ணில்) ஏமாற்று கிறாய், ஒருத்தியை ஏமாற்றிக் கட்டிப்பிடித்து (மருவி) விட்டு விடுகிறாய், இன்னொருத்தியிடம் ஆகாசப்புளுகு புளிகித் தவிக்க விடுகிறாய். இப்படிப் பல பேரிடம் ஏமாற்றுகிறாய்! யாரிடந்தான் உண்மையாக அன்பு வைப்பாய்.

பொய்யாகவே தழுவி ஒரு த்தியை ஏமாற்றிவிட்டாய். புரிகுழல் - சுருண்ட கூந்தல், மருநிறுத்தாய் திருட்டுத் தனத்தை உள்ளத்துள் ஒளித்து வைத்திருப்பவனே! உன்வ ளர்த்தியூடு - உன் உடம்பு வளர்வது போலவே. உன்மாயை வளர்கின்றது - உன் பித்தலாட்டமும் சேர்ந்து வளர்கிறது.)

(14)

*ஊடல் உச்சத்துக்குப் போய்விட்டால் லஜ்ஜையைப் பற்றிய கவலை இருக்காது. சொற்கள் தாறுமாறாக வரும். தாராளமாகவே வரும்.*

*எனக்காகத் தூதுவந்த என் தோழியை இப்படிச் சீரழித்து விட்டாயே? இதுதான் உன்யோக்யதையா என்கிறாள் நாயகி.*

பாவம் கண்ணன் என்ன செய்வான்? பேந்தப் பேந்த விழிக்கிறான்.

*"தாய்முலைப் பாலில்*
*அமுதிருக் கத்*
*தவழ்ந்து தளர்நடை*
*இட்டுச்சென் று*
*பேய்முலை வாய்வைத்து*
*நஞ்சைஉண் டு*
*பித்தன்என் றேபிறர்*
*ஏசநின் றாய்!*
*ஆய்மிகு காதலோடு*
*யான்இருப் ப*
*யான்விட வந்தஎன்*
*தூதியோ டே*
*நீமிகு போகத்தை*
*நன்குகந் தாய்*
*அதுவும்நின் கோரம்புக்கு*
*ஏற்கும்அன் றோ?"*

(தாய்... உண்டு - தாய்ப்பாலைப் பருகாமல் பூதகியின் விஷப்பாலைப் பருகுவது போல் மார்பையே கடித்துக் கொன்றவன் கண்ணன். நன்கு உகந்தாய் - பூரணமாய் அனுபவித்தாய். தோரம்பு - போக்கிரித்தனம்.)

(15)

இந்த வீட்டு வாசல் வழியாகவே இன்னொருத்தியை வைத்துக் கொண்டு போகிறாயே அப்படியானால் உனக்கு எவ்வளவு மப்பு இருக்க வேண்டும்?

கண்ஜாடைகாட்டி அவளை உன் கையால் அழைக்கிறதை நான் பார்க் கத்தானே செய்தேன்.

இதில் முக்காடு என்ன வேண்டிக்கிடக்கிறது? அவளுடனேயே போய் குப்பையை வாரிப்போடு. இங்கு உனக்கு என்ன வேலை என்று அதட்டுகிறாள் நாயகி.

*"மின்னொத்த நுண்ணிடை*
*யாளைக்கொண் டு,*
*வீங்கிருள் வாய்என்தன்*
*வீதியூ டே*

*பொன்னொத்த ஆடைக்குள்*
*கூடலிட் டே*
*போகின்ற போதுநான்*
*கண்டுநின் றேன்;*
*கண்ணுற்று அவளைநீ*
*கண்ணாலிட் டு*
*கைவிளிக் கின்றதும்*
*கண்டுநின் றேன்!*
*என்னுக்கு அவளைவிட்டு*
*இங்குவந் தாய்?*
*இன்னும்அங் கேநட*
*நம்பிநீ யே!"*

(மின்ஒத்த நுண்ணிடையாள் - மின்னலை போல அப்படியும் இப்படியும் நெளிந்து ஒசிந்து நுணுகிய இடையை உடைய பெண். வீங்கு இருள்வாய் - கும்மிருட்டில். கூடல் - முக்காடு. கண்ணுற்று - பார்த்துப்பார்த்து, கண்ணாலிட்டு - பார்வையாலேயே சிமிட்டி அழைத்து. என்னுக்கு - ஏன்.)

(16)

*ஊடலில் நேரம் ஆக ஆகச் சூடுபிடிக்கும். சூடுதணிய வழி ஒன்றுதான்.*

*சீறி விழுகிறவ எதிர்க்காமல் ஒதுங்குவது. தோற்றுப் போனது போலப் பாவலாப் பண்ணுவது.*

*அப்படி இல்லாமல் சமாளிக்கப் பார்ப்பதும் இல்லை என்று சாதிப்பதும் கோபத்தைக் கொழுந்துவிட்டெரியவே செய்யும்.*

*கண்ணனிடம் ஊடுகிற பெண் சொல்கிறாள். போதுமையா போதும்! உம்முடைய பசுப்பு! ஏமாறுவதற்கு வேறு பொம்பளையைப் பாரும்! முதலில் இடத்தைக் காலிபண்ணும் என்றே பொரிந்து தள்ளுகிறாள். அவ்வளவு வசவையும் தாங்கி நிற்கிறான் கண்ணன்.*

*"பைஅர வின்அணைப்*
*பள்ளியி னாய்!*
*பண்டையோம் அல்லோம்யாம்;*
*நீஉகக் கும்*
*மையரி ஒண்கண்ணி -*
*னாரும்அல் லோம்*
*வைகிளம் சேரி*
*வரவொழி நீ!*

*செய்ய உடையும்*
*திருமுக மும்*
*செங்கனி வாயும்*
*குழலும்கண் டு*
*பொய்யொரு நாள்பட்ட*
*தேஅமை யும்*
*புள்ளுவம் பேசாதே*
*போகுநம் பீ!"*

(பை - படம், அரவு - பாம்பு, பண்டையோம் அல்லோம் - ஏமாந்தது அந்தக் காலம். மைஅரி ஒண்கண்ணினார் அல்லோம் - உன்புழுகை நம்பி ஏமாறுகிற பெண்களிடம் இதை வைத்துக்கொள். சேரி - பகுதி, பசப்பி ஏமாற்றலாம் என்று நினைக்காதே!)

(17)

மேலும் சொல்லுகிறாள் ஒருபெண்:

ஒதுக்குப்புறமாயுள்ள தோப்பில் மல்லிகைப் பந்தலின் கீழ் காத்திருக்கிறேன் என்றாய். மறந்துவிடாதே என்று கெஞ்சினாய்

உன்பேச்சை நம்பி நான் அங்கு வந்தேன். என்ன அநியாயம்? இன்னொருத்தியுடன் சல்லாபித்துக் கொண்டிருக்கிறாய் நீ!.

என்னைப் பார்த்தவுடன் கலங்கி வாடி ஓட்டம் பிடித்தாய் அவிழும் ஆடையைக் கையில் பிடித்துக்கொண்டே யோக்கியன் போல நழுவினாய்.

இன்னொருதடவை என்னை நீ தேடிவா...?

*"என்னை வருக*
*எனக்குறித் திட்டு*
*இனமலர் முல்லையின்*
*பந்தர்நீ ழல்,*
*மன்னி அவளைப்*
*புணரப்புக் கு*
*மற்றென்னைக் கண்டுழ -*
*றாநெகிழ்ந் தாய்;*
*பொன்னிற ஆடையைக்*
*கையில்தாங் கி*
*பொய்யச்சம் காட்டிநீ*
*போதியே னும்*

*இன்னம்என் கையகத்து*
*ஈங்கொரு நாள்*
*வந்தியேல் என்சினம்*
*தீர்வன்நா னே!"*

(நீழல் - நிழல் - அவளை - இன்னொருத்தியை. உழறா நெகிழ்ந் தாய் - கலங்கிநடுங்கினாய், பொய்யச்சம் காட்டி - ஒன்றும் தெரியா தவன் போல் பாவலா பண்ணி, பொய்வேஷம் போட்டு, வந்தியேல் - வந்தால் சிக்கினால், என்சினம் தீர்வன் - எனக்குவந்த ஆத்திரம் இன்னதென்று காட்டுவேன்.)

(18)

என்ன இருந்தாலும் கண்ணனை மறக்கமுடியவில்லை பெண்ணால்.

புல்லாங்குழலை வாயில் வைத்து மதுரமான இசையை அவன் அடிக்கடி எழுப்பிவருவான். அந்த இசையின் குழலொலியோ பெண்ணின் இதயத்தைக் குழைத்துக் குழைத்துப் பிசைந்துவிட்டது.

துய்ய செந்நிற ஆடையை இடுப்பில் கட்டி இருப்பான் கண்ணன். அழகிய காட்டுமலர்களை மாலையாகத் தொடுத்து மார்பில் போட்டிருப்பான், மயில் பீலியும் அதோடு சேர்ந்து ஒளிரும்.

ஐந்தாறு பெண்களோடு சேர்ந்து அவன் ஆடுவதும் பாடுவதும், அடடா...?

*"மங்கல நன்வன*
*மாலைஊ டே*
*வயங்கு மயில்தழைப்*
*பீலிசூ டி,*
*பொங்கிள ஆடை*
*அரையில் சாத்தி*
*பூங்கொத்து காதில்*
*புணரப்பெய் து*
*கொங்கு நறுங்குழ -*
*லார்களோ டு*
*குழைந்து குழலினிது*
*ஊதிவா ராய்!*
*எங்களுக் கேஒரு*
*நாள்வந்தூ த*
*உன்குழல் இன்னிசை*
*போதரா வோ?"*

(வனமாலைஊடு - காட்டு மலர்களுடன், நறுங்குழலாரோடு - இளமகளிருடன். ஊதிவராய் - அடிக்கடி குழலூதி வரத்தானே செய்கிறாய் கண்ணா! அப்படியானால் எங்களுக்காக ஒருநாள்வந்த கானாமிர்தம் பொழியக்கூடாதா? என்ன! எங்களுக்குக்கென்றால் குழலிலிருந்து இசைவராதா?)

(19)

ஒரு குழந்தைக்குத் தாயாகிறதுதான் பெண்ணுக்குப் பாக்கியம். உதரத்தில் வைத்துக் காத்த தெய்வ மலரைக் கையில் எடுத்துக் கண்குளிரப் பார்ப்பதில் பெண்களுக்கு தனி இன்பம்.

அதைவிட இன்பம் ஒன்று உண்டென்றால் குழந்தையைப் பாலூட்டிச் சீராட்டி வளர்ப்பது தான்.

மையிட்டுப் பொட்டிட்டு குழந்தையைத் தாலாட்டத் தாலாட்டத் தாயின் உள்ளம் உணர்ச்சி மயமாய்ப் பொங்கும்.

இனி, கண்ணனைப் பெற்றெடுத்த தாய் தேவகி

தேவகியினிடம் கண்ணன் இருந்தால் உயிருக்கு ஆபத்து என்று தெரிந்தது. குழந்தை பிழைத்தால் போதும் என்று கண்ணனை யசோதை வளர்க்க அங்கே விட்டுவிட்டாள் தேவகி.

அதனால் பெற்றவளுக்கு வளர்க்கும் பாக்கியம் இல்லை. தொட்டிலில் போட்டுத் தாலாட்டுகிற பாக்கியம் கூட எனக்கு இல்லையே என்று கலங்குகிறாள் தேவகி.

குலசேகரப்பெருமான் தேவியாகமாறிப் பேசுகிறார். கவி உள்ளம் கூடுவிட்டுக் கூடுபாயும். கோபிகையாகவும் மாறும். தேவகியாகவும் மாறும்.

*"ஆலை நீள்கரும்பு*
*அன்னவன் தாலோ!*
*அம்பு யுத்தடக்*
*கண்ணினன் தாலோ!*

*வேலை நீர்நிறத்(து)*
*அன்னவன் தாலோ!*
*வேழப் போதகம்*
*அன்னவன் தாலோ!*

*ஏல வார்குழல்*
*என்மகன் தாலோ!*
*என்றென் றுன்னைஎன்*
*வாயிடை நிறைய*

*தால்ஒ லித்திடும்*
*திருவினை இல்லாத்*
*தாய ரில்கடை*
*ஆயின தாயே!"*

(வேலை - கடல், வேழப்போதகம் - ஆண்யானை, ஏலவார் குழல் - மணக்கும் நீண்டதலைமுடி. தால் - தாலாட்டு. வாயிடை - வாசல். தால் ஒலித்திடும் திருவினை - தாலாட்டுப்பாடும் பாக்கியம்.)

(20)

குழந்தைக்குப் பால்கொடுக்கும்போது தாயின் உடம்பு முழுவதும் இன்பம் ஊறும். மென்தளிர் போன்ற இளம்கையால் தாயின் மார்பைக் குழந்தை பிடிக்கும். பிடித்தபடியே வாய்வைத்து அமிர்தத்தைப் பருகும் குழந்தை. அப்பொழுது குழந்தையின் நீலமணி போன்ற சின்னஞ்சிறுகண்களைப் பார்த்துப் பார்த்து மயங்குவாள் தாய்.

பெற்றெடுத்தும் பிரயோசனம் இல்லை தேவகிக்கு. பாவம் புலம்புகிறாள்.

*"குழக னே!என்தன்*
*கோமளப் பிள்ளாய்!*
*கோவிந் தா!என்*
*குடங்கையில் மன்னி*
*ஒழுகு பேரெழில்*
*இளம்சிறு தளிர்போல்*
*ஒருகை யால்ஒரு*
*முலைமுகம் நெருடி,*
*மழலை மென்நகை*
*இடைஇடை அருளா*
*வாயி லேமுலை*
*இருக்கஎன் முகத்தே*
*எழில்கொள் நின்திருக்*
*கண்ணினை நோக்கம்*
*தன்னை யும்இழந்*
*தேன்இழந் தேனே!*

(பேர் எழில் ஒழுகு இளம்தளிர் - அழகுஒழுகும் பசுந்தளிர். மழலை மென்நகை - புன்முறுவல். எழில் - அழகு கண்ணின் நோக்கம் தன்னையும் இழந்தேன் - உன் அழகிய கண்களை நோக்கி நோக்கி மகிழும் ஆனந்தத்தை இழந்த பாவி நான்!)

(21)

பெண்ணுள்ளத்தில் ஆழமான நிலைகளில் கூட ஒரு தேட்டம் இருக்கிறது. நாயகனை லட்சியமாக வைத்துச் செயல்படுகிற காரியந்தான் அது.

இனி, குழந்தைக்கு ஆபரணம் பூட்டி அலங்காரப்படுத்துவாள். அப்படியே கட்டி அணைத்து முத்தம் கொடுப்பாள் அப்பொழுது குழந்தை பார்க்கிற பார்வையும், பூக்கிற புன் முறுவலும், சிமிட்டுகிற சிமிட்டும் நாயகனை நாபகப்படுத்தும்.

கட்டைவிரலை வாய்க்குள் கொடுத்து குழந்தை சுவைப்பது கூட நாயகன் மயமாகவே தெரியும்.

எப்படி மறக்க முடியும் குழந்தையை

*"மருளும் நின்திரு*
*நெற்றியில் சுட்டி*
*அ சைதர, மணி*
*வாயிடை முத்தம்*
*தருத லும்உன்தன்*
*தாதையைப் போலும்*
*தகவு கண்டுகொண்டு*
*உள்ளம் குளிர,*
*விரலைச் செஞ்சிறு*
*வாயிடைச் சேர்த்து*
*வெகுளி யாய்நின்று*
*உரைக்கும்அவ் வுரையும்*
*திருவி லேன்ஒன்றும்*
*பெற்றிலன் அந்தோ*
*தெய்வ நங்கை*
*அசோதைபெற் றாளே!"*

(மருளும் - மயக்கும் - சுட்டிமணி அசைதர - நெற்றிச் சுட்டி அசைய, தகவு - தோற்றம், வடிவு, வெகுளியாய் - கோபம் வந்தவனாய். உரைக்கும் அவ்உரையும் - கத்துகிற கத்தும் எல்லாம் உன் அப்பன் தான்.

தெய்வநங்கை - புண்ணியம் செய்த பெண்மணி யசோதை - நானில்லை யசோதை!)

(22)

அனுபவம் ஒன்று இருந்தால் போதும். உணர்ச்சியை அது அழுத்தும். அழுத்த அழுத்த ஒளி பிறக்கும். அவ்வளவுதான் நாடகம் குதித்துக் கொண்டு ஓடிவரும்.

அவ்வளவும், பாவனைதான். அதாவது பகற்கனவுதான், இந்தப் பாவனையையே கற்பனை என்று சொன்னார்கள் புலவர்கள் நாளாக ஆக கற்பனை என்னும் சொல் புளுகு, பெரும்புளுகு என்னும் பொருளில் மாறிவிட்டது, தவறான போக்குத்தான் அது.

மாசற்ற உண்மை என்றால் அது இந்தக் கற்பனைதான். கோபி கையாய், தேவகியாய்ப் பகற்கனவுகண்ட ஆழ்வார். இப்பொழுது தசரதனாகக் காண்கிறார்.

வனவாசம்போன மகனை நினைந்துவருந்தகிறான் தசரதன்.

*''பூமருவு நறும்குஞ்சி*
*புன்சடையாப் புனைந்து, பூந்*
*துகில்சேர் அல்குல்*
*காமருவு விழலுடுத்து,*
*கலன்அணியாது அங்கங்கள்*
*அழகுமா றி,*
*ஏமருவு என்புதல்வன்*
*யான்இன்று செலத்தக்க*
*வனந்தான்சேர்ந் தான்*
*தூமறையீர்! இதுதகவோ!*
*சுமந்திரனே வசிட்டனே*
*சொல்லீர்நீ ரே!*

(நறும் குறிஞ்சி - அழகிய தலைமுடி, புன்சடையாகவும் - வறண்ட சடையாகவும். துகில் - ஆடை, பட்டாடை, அல்குல் - அடிவயிறு. காமருவு விழல் உடுத்து - காட்டில் உதிர்ந்த சுள்ளிகளையும் பட்டைகளையும் வைத்துத் தைத்துக் கட்டவும், ஏ - அழகு, சொல் லுங்கள் என்று புலம்புகின்றார் தசரதன்.)

(23)

சூரிய குலத்துக்கே பிரகாசம் கொடுக்கத் தோன்றியவன் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி.

அவன் தோன்றியது அயோத்தி, காட்சி கொடுப்பதோதில்லைச் சித்ரகூடம் என்கிறார் ஆழ்வார்.

*''அங்கண்நெடும் மதிள்புடைசூழ்*
*அயோத்தி என்னும்*
*அணிநகரத்து; உலகனைத்தும்*
*விளக்கும்சோ தி*

*வெங்கதிரோன் குலத்துக்கோர்*
*விளக்காய் தோன்றி,*
*விண்முழுதும் உயக்கொண்ட*
*வீரன்தன் னைத்*
*செங்கண்நெடும் கருமுகிலை,*
*இராமன் தன்னை*
*தில்லைநகர்த் திருச்சித்ர*
*கூடம்தன் னுள்*
*எங்கள்குல முதல்வனைஎம்*
*பெருமான் தன்னை*
*என்றுகொலோ கண்குளிரக்*
*காணும்நா ளே!"*

(அங்கண்நெடும் மதில் - அகன்றபெரிய கோட்டை, வெங்கதி ரோன்குலம் - சூரியவம்சம், விண்முழுதும் உயக்கொண்ட வீரன் - ராட்சதர்களின் பிடியிலிருந்து மண்ணுலகை மட்டுமன்று விண்ணுல கையும் மீட்டு வாழவைத்தவன் ராமன்.)

(24)

*ஓங்கி வளர்ந்த கரும்பாறை மலை பெண்ணுரு எடுத்தால் எப்படி இருக்கும். அப்படி அடாவடியாயிருந்தாள் தாடகை.*

*தாடகையை வீழ்த்தி மண்ணில் உருட்டுவது என்பது எளிதான செயலா என்ன? அரிய பெரிய செயல் அது. அதை விஷ்வாமித்திரரின் யாக காரியம் நிறைவேறுவதற் பொருட்டு செய்து முடித்தான் ராமச்சந்திர மூர்த்தி?*

*அவனை எங்கும் பார்க்கலாம். தில்லைச் சித்ர கூடத்திலோ கண்குளிரப் பார்க்கலாம்.*

*"வந்தெதிர்ந்த தாடகைதன்*
*உரத்தைக் கீறி*
*வருகுருதி பொழிதர,வன்*
*கணைஒன்றே வி,*
*மந்திரங்கொள் மறைமுனிவன்*
*வேள்வி காத்து*
*வல்லரக்கர் உயிருண்ட*
*மைந்தன் காண்மின்!*
*செந்தளிர்வாய், மலர்நகைசேர்*
*செழுந்தண் சோலைத்,*
*தில்லைநகர் திருச்சித்ர*
*கூடம்தன் னுள்*

அந்தணர்கள் ஒருமூவா
யிரவர் ஏத்த
அணிமணிஆ சனதிருந்த
அம்மான்தா னே!"

(உரம் - மார்பு, குருதி - ரத்தம். கணை - அம்பு, செந்தளிர்வாய் - தில்லையைச்சுற்றி உள்ள சோலைகளுக்கு, தளிர்தான் வாய், மலர் நகை - மலர்களே பற்கள்.)

(25)

கைகேசியின் கட்டளைப்படி வனவாசம் போனான் ராமன். குகன் மூலம் கங்கையைத் தாண்டினான்.

தேடி காட்டுக்கே வந்துவிட்ட பரதனிடம் ராஜ்ய பாரமும் பாதுகையும் வழங்கினான். காட்டில் சித்ரகூடம் என்னும் இடத்தில் தங்கினான்.

தில்லை நகரிலும் சித்ர கூடந்தான் அவன் வீற்றிருக்கும் இடம். ஒரு தடவை தரிசித்தால் போதும். தேவர்களுக்கும் தேவர்களாய் வாழ்வார்கள் தரிசித்தவர்கள்.

"தொத்தலர்பூஞ் சுரிகுழல்கை -
கேசிசொல் லால்
தொன்நகரம் துறந்து, துறைக்
கங்கைதன் னைப்
பத்தியுடைக் குகன்கடத்த
வனம் போய்ப் புக்கு
பரதனுக்குப் பாதுகமும்
அரசும்ஈந் து,
சித்ரகூ டத்திருந்தான்
தன்னை, இன் று
தில்லைநகர்ச் திருச்சித்ர
கூடம்தன் னுள்
எத்தனையும் கண்குளிரக்
காணப்பெற் ற
இருநிலத்தார்கரு இமையவர்நேர்
ஒவ்வார்தா மே!

(தொத்து - கொத்து, தொல்நகர் - அயோத்தி, பத்தி - பக்தி, கடத்த - படகுமூலம் கடத்திவிட, பாதுகம் - திருவடிதாங்கி, இமையவர் - தேவர்கள்.)

(26)

தில்லைச்சித்ர கூடத்தில் பக்தர்கள் கூட்டம் கூட்டமாய் நடமாடுகிறார்கள். அவர்கள் பாதம் படப்பட தில்லைச்சித்ரகூடம் புனிதம் பெற்று விடுகிறது. ஒவ்வொரு துளி மண்ணும் பொன் னாய்ப் பூத்து விடுகின்றன. அதுமட்டுமா? இந்த உலகமே உயர்ந்து விட்டது.

அகத்தியர் கொடுத்த வாளைப் பெற்றுக்கொண்ட ராமன் விராதனைக் கொன்றான். சூர்ப்பணகையின் மூக்கைச் சீவி எறிந்தான். கரதூடணர்களை அழித்தான். மாரிசனை வீழ்த்தினான்.

அந்த ரரமன் - கோதண்டராமன் தங்கி அருள் பாலிக்கும் இடம் சித்ர கூடம்.

"வலிவணக்கும் வரைநெடுந்தோள்
விராதன் கொன்று,
வண்தமிழ்மா முனிகொடுத்த
வரிவில்ஏந் தி
கலைவணக்கும் நோக்கரக்கி
மூக்கை நீக்கி,
கரனோடு தூடணர்தம்
உயிரைவாங் கி,
சிலைவணக்கி மான்மடிய
எய்தாள் தன்னை
தில்லைநகர்த் திருச்சித்ர
கூடம்தன் னுள்
தலைவணக்கிக் கைகூப்பி
ஏத்த வல்லார்
திரிதலால் தவம்உடைத்துத்
தரணிதா னே!"

(வலிவணக்கும் - எதிரிகளைப் பணிய வைக்கும். வரை - மலை, தமிழ்முனி - அகத்தியர், கலைவணக்கும் நோக்கு அரக்கி - பார்க்கிற பார்வையில் கல்லையே வெந்து குழையவைத்து விடுவாள் சூர்ப்பணகை. சிலைவணக்கி - வில்லிவளைத்து; மான்மறி - மாரீச மான்.)

**குறிப்பு:** ஒரு மகான் பிறந்த இடம் - நடமாடிய இடம் புண்ணிய பூமியாக மாறுவது சரித்திரம் கண்ட உண்மை. "மகாத்மா காந்தி பாதம்படாத இடம் இந்தியாவில் இல்லை. அவர் பாதம்பட்ட ஒவ்வோர் இடமும் மக்கள் வழிபடும் கோவில்களாக

மாறி விட்டன.'' என்று பண்டித நேரு இந்த உண்மையைக் குறிப்பிடுகிறார்.

(27)

ராமன் என்றால் ராமன்தான். அவன் கல்யாணராமன், ஜானகிராமன், கோதண்டராமன். எல்லாவற்றுக்கும் மேலாக ராமராமன்.

மனைவியைப் பறிகொடுத்த நிலையிலும் ஒரு பறவை (சடாயு)யின் உடல் மேல் விழுந்து கதறிக்கதறிக் கூப்பாடு போட்டானே!

பறவையைப் பறவையாகவா நினைத்தான் அவன்?

அவன் நாமந்தான் பிணி தீர்க்கும் மருந்து. அவன் பக்தர்களை வழிபட்டாலே போதும்.

''மனம்மருவு வைதேகி
பிரியல் உற்றுத்,
தளர்வெய்திச், சடாயுவை
குந்தத்து ஏற்றி,
வனம்மருவு கவியரசன்
காதல் கொண்டு,
வாலியைக்கொன் றிலங்கைநகர்
அரக்கர்கோ மான்
சினம்அடங்க மாருதியால்
சுடுவித் தானைத்
தில்லைநகர்த் திருச்சித்ர
கூடந்தன் னுள்
இனிதமர்ந்த அம்மானை
இராமன் தன்னை
ஏத்துவார் இணைஅடியே
ஏத்துவே னே!''

(வைதேகி - சீதை, வைகுந்தத்து ஏற்றி - தந்தைக்கு செய்ய வேண்டிய ஈமக்கடன்களைச் செய்து. கவியரசன் - சுக்ரீவன், சினம் அடங்க - ஆணவம் தோற்க, மாருதியால் - அனுமானால், இணை அடியே - திருவடிகளையே.

(28)

அவதார புருஷன் என்றால் அது ராமச்சந்திர மூர்த்திதான். கடலில் குறுக்கே அணைகட்டினான், ராவணனைத் தொலைத்துக்

கட்டினான். தொலைத்துக் கட்டினானே தவிர ராஜ்யத்தை எடுத்துக் கொள்ளவில்லை, அதை விபீஷணனிடமே கொடுத்துவிட்டான் ராமச்சந்திரபிரபு.

இலங்கையை எடுத்து அரசாளாவிட்டாலும் பக்தர்கள் உள்ளத்தை அரசாளத்தான் செய்கிறான். அவன் அரசாளும் அரசுதான் அரசு. அதை அனுபவிப்பதோ பேரரசு.

*"குரைகடலை அடல்அம்பால்*
*மறுகஎய் து,*
*குலைகட்டி, மறுகரையை*
*அதனால்ஏ றி,*
*எரிநெடுவேல் அரக்கரொடும்*
*இலங்கைவேந் தன்*
*இன்னுயிர்கொண் டவன்தம்பிக்கு*
*அரசும்ஈந் து,*
*திருமகளோடு இனிதமர்ந்த*
*செல்வன்ஆ ய*
*தில்லைநகர்த் திருச்சித்ர*
*கூடந்தன் னுள்*
*அரசமர்ந்தான் அடிசூடும்*
*அரசைஅல் லால்*
*அரசாக எண்ணேன்மற்று*
*அரசுதா னே!"*

(குரைகடல் - சப்திக்கும் கடல். குலை - அணை. எரிநெடுவேல் - தீச்சுடர் போல் பிரகாசிக்கும் வேல். திருமகள் - பிராட்டி.)





# திருமங்கை (மன்னன்) ஆழ்வார்

(1)

தஞ்சைமாவட்டம் திருவையாறை ஒட்டி இருக்கிறது திருக்காட்டுப்பள்ளி என்னும் ஊர்.

அந்த ஊரைச்சேர்ந்த மிகப்பெரிய பண்ணையார் - குறுநில மன்னர் போன்றவர் திருமங்கை ஆழ்வார்.

அழுத்தமான வைணவ பக்தர்.

வைணவ அடியார்களை வரவேற்று உபசரித்து விருந்தளிப்பதையே வாழ்க்கையாக நடத்தி வந்தார் ஆழ்வார்.

கூட்டம் கூட்டமாய் வர ஆரம்பித்துவிட்டது விருந்து.

வயல் வருமானம் தவிர வேறு வருமானம் இல்லை ஆழ்வாருக்கு.

அன்னதானமோ பெருகிப்பெருகிக் கட்டுக்கு அடங்காமலே போய்விட்டது.

அதனால் திருமங்கை ஆழ்வாருடைய சொத்தெல்லாம் கரைந்துவிட்டது.

வறுமைக்கு ஆளாகிவிட்டோமே என்று தளரவில்லை ஆழ்வார். வழிப்பறி செய்தார். அந்த வருமானத்தில் அன்னதானம் நடந்தது.

ஆழ்வாரின் உறுதிப்பாட்டைச் சோதிக்க திருவரங்கப்பெருமானே லட்சுமி தேவியோடு வழிப்போக்கராய் வந்தார்.

புத்தம்புதிய புதுமாப்பிள்ளை புதுப்பெண் கோலத்தில் வந்தனர் திருமாலும் திருமகளும்.

அவர்களையும் மடக்கி வழிப்பறி செய்தார் ஆழ்வார்.

எல்லாம் அடியார்களுக்கு அமுதுபடி செய்யத்தான்.

பரம பக்தராக இருந்துகொண்டே வழிப்பறி, கொள்ளை முதலிய செயல்களை ஊக்கமாக நடத்தினார் ஆழ்வார்.

அதனால்தானோ என்னவோ வைணவர்கள், இவரைத் திருமங்கை மன்னன் என்றே குறிப்பிடுகிறார்கள்.

திருமங்கை ஆழ்வார் என்று சொல்வதைவிட திருமங்கை மன்னன் என்று சொல்வதில்தான் பொருள் செறிவு இருப்பதாக நினைக்கிறார்கள்.

திருமங்கை ஆழ்வார் பாடிய பாசுரங்கள் ஆயிரம் இருக்கும்.

ஆனாலும் வைணவர்களிடம் திருமங்கை ஆழ்வார் என்று பேச்சுக்கொடுத்தால் போதும். உடனே,

*குலந்தரும், செல்வம்*
*தந்திடும், அடியார்*
*படுதுயர்*
*எல் லாம்*
*நிலந்தரம் செய்யும்,*
*நீள்விசும்(பு) அருளும்,,*
*நினைபவர் நெஞ்சினை*
*உருக் கி*
*வலந்தரும், மற்றும்*
*தந்திடும், பெற்ற*
*தாயினும் ஆயின*
*செய் து*
*நலம்தரும் சொல்லை*
*நான் கண்டு கொண்டேன்*
*நாராய ணாஎன்னும்*
*நா மம்.*

என்று அவர்கள் நாவிலிருந்து வரும்பாட்டு, வைணவ உலகம் முழுவதையும் அப்படி ஆட்டிப்படைக்கிறது திருமங்கை மன்னனின் பாசுரம்.

(2)

இனி, காட்டுக்கு வந்த ராமசந்திர மூர்த்தியை நினைந்து உருகினான் குகன்.

ராமன் பெரிய சக்கரவர்த்தி, குகனோ ஏழை வேடன்.

படிப்பில்லாத காட்டு மிராண்டி குகன். ஆனாலும் குகனை உடன்பிறந்த சகோதரனாக மதித்தான் ராமன்.

நான் உனக்கு அண்ணன், நீ என் தம்பி என்றான் ராமன்.

இதுகூட அதிசயம் இல்லை.

பக்கத்திலிருந்த பிராட்டி (சீதை)யைச் சுட்டிக்காட்டி இவள் உன்னுடைய அண்ணி என்றே சொல்லிவிட்டான் ராமன்.

குகனுடைய அன்பும் பண்பும் ராமனுடைய உள்ளத்தை உருக்கி விட்டன. இல்லை என்றால், என் உயிர் அனையாய் நீ என்று வேடனை அரசகுமாரன் கட்டித்தழுவ முடியுமா? அரசர்குல மாதே வியை ஒரு வேடனிடம் இவள் உனக்கு மதினி (அண்ணி) என்று உறவுமுறை கூறமுடியுமா?

ராமபிரானுடைய கருணையும் அரவணைப்பும் நெடுகிலும் மக்களைப் பரவசப்படுத்தி வந்துள்ளன.

எல்லாவகைப்பட்ட மனிதர்களின் உள்ளங்களையும் அந்த அரு ளும் அன்பும் தூய்மைப்படுத்தி வந்துள்ளன.

திருமங்கை ஆழ்வார் அந்த அருமையையும் எளிமையையும் எண்ணி எண்ணிக் கரைகிறார்.

எப்படி என்று பாருங்கள்

*ஏழை ஏதலன்*
*கீழ்மகன் என்னா(து)*
*இரங்கி மற்றவற்(கு)*
*இன்னருள்சுரந்து,*
*மாழை மான்மட*
*நோக்கிஉன் தோழி,*
*உம்பி எம்பி, இங்(கு)*
*உயிர்த்துணை ஆய*
*தோழன் நீஎனக்(கு)*
*என்றன்று சொன்ன*
*சொற்கள் வந்தடி*
*யேன்மனத்(து) இருக்க,*
*ஆழி வண்ணநின்*
*அடிஇணை அடைந்தேன்;*
*அணி பொ ழில்திரு*
*அரங்கத்தம்மா னே!*

ராமச்சந்திர மூர்த்தியின் கருணையும் தியாகமும் திருமங்கை ஆழ்வாரின் உள்ளத்தை உருக்கிப் பரவசப்படுத்தின. அதுபோலவே திருமங்கை ஆழ்வாரின் பாசுரங்கள் பக்தர்களின் உள்ளங்களை உருக் கிப் பரவசப்படுத்தி வந்துள்ளன.

(3)

திருமங்கை ஆழ்வார் பிறந்தது கள்ளர்குலம்.

எல்லா இனத்தார்களும் திருமங்கை ஆழ்வாரை மதித்து வழிபட் டார்கள்.

இவரது சொந்தப்பெயர் கலியன், அதை விட்டுவிட்டார்கள் பக்தர்கள்.

ஆலிநாடன், குறையில் ஆளி, மங்கையர்கோன், மங்கை வேந்தன், அருள்மாரி என்றெல்லாம் புதுப்புதுப் பட்டங்கள் சூட்டி வாழ்த்தினார்கள்.

எல்லாவற்றுக்கும் மேலாக நம்மை ஆண்டு பரிபாலிக்கும் பேராளன் என்னும் பொருளில் (ஆள்வார்) ஆழ்வார் என்றே போற்றி வருகிறார்கள்.

அரசன், அமைச்சர், பண்ணையார், முதலாளி, அறிஞர், கலைஞர்கள் மட்டுமல்ல, வேதங்களையும் மந்திரங்களையும் விட்டு இறங்கவே மாட்டோம் என்கிற படேபடே பண்டிதர்கள்கூட நம் குறை தீர்க்க வந்த கோமான் (குறையில் ஆளி) என்றும், திருமங்கை மன்னன், திருமங்கை ஆழ்வார் என்றும் போற்றிப் புகழும் பேறுபெற்றவர் இவர்.

இந்தளூரில் எழுந்தருளிய பெருமாள் மீது திருமங்கை ஆழ்வார் மனம் உருகிப்பாடி உள்ளார்.

அந்தப் பாசுரங்களை அனுபவித்த பக்தர் ஒருவர் என்ன சொல்கிறார் என்று பாருங்கள்.

திருமங்கை ஆழ்வார் பாசுரங்களைப் படித்தவர்கள் பூமியில் நடமாடினாலும் அவர்கள்தான் வானவர்கள்.

தேவர்களுக்கெல்லாம் தலைமைதாங்கும் தேவாதி தேவர்கள் என்றால் அவர்கள்தாம்.

***ஏரார் பொழில்சூழ்***
***இந்த ளூரில்***
***எந்த பெருமா***
***னைத்,***
***தாரார் புறவின்***
***மங்கை வேந்தன்***
***கலியன் ஒலிசெய்***
***த***
***சீரார் இன்சொல்***
***மாலை கற்றுத்,***
***திரிவார் உலகத்***
***தில்***
***ஆரார்? அவரே***
***அமரர்க் கென்றும்***
***அமரர் ஆவா***
***ரே!***

இப்படி ஒரு தனியன் (விமர்சனம்) வரவேண்டும் என்றால் சமுதாயம் முழுவதும் பாசுரங்களை ஆர்வத்தோடு பார்த்திருக்க வேண்டும். அனுபவித்திருக்க வேண்டும்.

சமுதாய உணர்வு காத்திரமாக இல்லை என்றால் இப்படித் திடமாகச் சொல்ல வழியில்லை.

பக்தர்களுக்கு ஆழ்வாரின் பாசுரங்களில் அளவற்ற நம்பிக்கை.

நம்பிக்கை ஊற ஊற தமிழின் நயம், வேகம் எல்லாம் கண்களுக்குப் புலனாயின. அது காரணமாகவே

***'சீரார் இன்சொல் மாலை'***

என்று சொல்ல முடிகிறது.

சீரார் என்றால் நடனமும் தாளமும் நிறைந்த என்று பொருள், (சீர் - தாளம்) இன்சொல் மாலை என்றால் இசை மணம் கமழும் பாடல் என்று பொருள்.

நடன கதிகளோடும் இசை எடுப்புகளோடும் தமிழ்ப் பாடல்கள் சேர்ந்து பரிமளிக்கின்றன. அந்தச் சதுரப்பாட்டை மக்களுக்கு விளங்க வைத்துவிட்டது திருமங்கை ஆழ்வாரின் பாசுரங்கள்.

(4)

தெய்வாம்சம் பொருந்திய இசையும் நடனமும் தமிழோடு தோய்ந்து கிடக்கிற செம்மாப்பு, திருமங்கை ஆழ்வாருக்கே நேரில் வந்து தரிசனம் தந்தது. அதிசயத்தில் மூழ்கிப் போனார் திருமங்கை ஆழ்வார்.

அதிசயப் பெருக்கில் இறைவனிடமே சொல்கிறார் ஆழ்வார்.

பெருமானே! உமக்கு விருப்பம் இருந்தால் தமிழின் அற்புத அதிசயங்களை உமக்குப் பாடிக்காட்டுகிறேன் நான்.

படிக்க வருகிறீரா என்னிடம்?

***கண்ண நின்தனக்***
***குக்குறிப் பாகில்***
***கற்க லாம் தமி***
***ழின்பொருள் தானே!***

இறைவனிடமே இப்படிக் கேட்க வேண்டும் என்றால் தமிழானது எப்படி எல்லாம் தரிசனம் கொடுத்திருக்க வேண்டும் ஆழ்வாருக்கு.

(5)

திருமங்கை ஆழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், பொய்கையாழ்வார் முதலிய அருளாளர்கள் பாடப் பாட நாட்டைப் பிடித்திருந்த சனியன் ஒழிந்தது.

எங்கும் ஒரே ஆனந்தம். பக்தியானது வெள்ளப்பெருக்கெடுத்து நாலா திசையிலும் பரந்து பெருகியது.

பாட்டு, கூத்து, தேர், திருவிழா, குடும்பம், சுற்றம், நாடு, சமுதாயம், அன்பு, ஆதரவு என்று விதவிதமாக ஆனந்தம் பெருகியது.

இனி, திருமாலிடம் பக்தி கொண்டு பரவசமடைந்து பாடிய அருளாளர்களில் ஒரு சிலரை ஆள்வார்கள் என்று மக்கள் போற்றினார்கள்.

ஆழ்வார்கள் பலர். அவர்களில் பன்னிரண்டு ஆழ்வார்களைத் தனியே பிரித்தெடுத்து அவர்கள் பாடிய பாசுரங்களைப் பிரபந்தம் என்று பாராட்டினார்கள்.

திவ்யப்பிரபந்தம் என்றும் உச்சிகுளிர உபசரித்தார்கள்.

பன்னிரு ஆழ்வார்களின் பாசுரங்கள் கிட்டத்தட்ட நாலாயிரம்

அதனால் நாலாயிர திவ்யப்பிரபந்தம் என்று ஒரு நூலாகச் சேர்த்து வைத்துக்கொண்டார்கள்.

இனி, இந்தப் பன்னிரண்டு ஆழ்வார்களுக்கும் முன்பே - நீண்ட நெடுங்காலத்துக்கு முன்பிருந்தே அருளாளர்கள் பலர் திருமால் மேல் பாடி இருக்கிறார்கள்.

சங்கநூல்கள் என்னும் எட்டுத்தொகையுள் ஒன்று (எழுபது) பரிபாடல் என்னும் தொகைநூல். பரிபாடல் என்னும் அந்த நூலிலேயே பல பாடல்கள் திருமால் துதியாக உள்ளன. இனி நற்றினை என்னும் தொகை நூலின் கடவுள் வாழ்த்துப்பாடலும் திருமால் துதியாகவே இருக்கிறது.

பேரண்டம் முழுவதும் திருமால்தான். திகிரியைக் (சக்கரம்) கையிலேந்திய திருமாலின் திருமேனியைக் கற்பனை செய்து பார்த்தால் எப்படி இருக்கும்?

பூமிதான் பாதம், ஆகாயந்தான் தலை, சமுத்திரந்தான் உடை, சூரியசந்திரர்களே கண்கள்...

***மாநிலம் சேவடி***
***யாகத் தூநீர்***
***வளைநரல் பௌவம்***
***உடுக்கை யாக,***
***விசும்புமெய் யாகத்***
***திசை கை யாக***
***பசுங்கதிர் மதியமொடு***
***சுடர்கண் ணாக***

*இயன்ற எல்லாம்*
*பயின்றகத்(து) அடக்கிய*
*வேத முதல்வன்*
*என்ப;*
*தீதற விளங்கிய*
*திகிரி யோனே.*

வளைநரல் பௌவம் - சங்கு முழங்கும் கடல். பௌவம் - சமுத்திரம், விசும்பு - ஆகாயம், மதி - சந்திரன், சுடர் - சூரியன். இயன்ற எல்லாம் - அண்டபிண்ட சராசரங்கள் அவ்வளவையும். பயின்று அகத்து அடக்கிய முதல்வன் - முறைப்படி தன்னுள் வைத்துக் காக்கிற பரம்பொருள். திகிரியோன் - சக்கரத்தைக் கையிலேந்திய திருமால்.

*இத்துதிப் பாடலைப் பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார்.*

*தாம் பாடிய பாரதத்திலும் பல பாடல்களை திருமால் துதியாக அவர் இயற்றி உள்ளார்.*

*அவற்றில் ஒரு பாடல்*

*தேனோங்கு சோலைத்*
*திருவேங் கடம்என்றும்,*
*வானோங்கு சோலை*
*மலைஎன்றும், - தானோங்கு*
*தென்னரங்கம் என்றுமே*
*வாய்தான் திறந்தொருகால்*
*சொன்னவர்க்கும் உண்டோ*
*துயர்.*

(சோலை - திருமாலிருஞ்சோலை என்னும் அழகர்மலை. மதுரைப் பக்கம் உள்ளது. புகழ் பெற்ற வைணவத்தலம். தான் ஓங்கு தென்னரங் கம் - தானே முளைத்தெழுந்த திருவரங்கம்.

*இப்படிப் பல பாடல்கள் பாரதத்தில்.*

(7)

*இனி ஆழ்வார்களின் காலம் ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன் - ஆயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு உள்.*

*பரிபாடல், நற்றிணை, பெருந்தேவனார் காலம் ஆயிரத்து எண் ணூறு ஆண்டுகளுக்குமுன். அப்படியானால் திருமால் பற்றிய துதிப் பாடல்கள் சங்காலத்திலேயே ஏராளமாக இருந்திருக்கின்றன.*

*கிடைத்தவை சில பாடல்களே.*

இனி, சங்க காலத்துக்கு மிகமிக முற்பட்ட காலத்திலேயும் - இரண்டாயிரத்து ஐந்நூறு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பும் திரு மால் பற்றிய துதிப்பாடல்கள் ஏராளமாக இருந்திருக்கின்றன.

அற்புதமான பாடல்கள் அவை.

இசையும் நடனமும் கொலுவீற்றிருக்கும் அத்தாணி மண்டபங் கள் அந்தப்பாடல்கள்.

ஆழமான, நுட்பமான அரிய பெரிய தத்துவ நிலைகளை மிகமிக எளிதாக நாடகநிலையில் வைத்து விளக்கும் அற்புதப் பாடல்கள் அவை.

ஆனால் காலப்போக்கில் பலபல பாடல்கள் மறைந்து விட்டன. ஒருசில பாடல்களே நம் கைக்குக் கிடைத்துள்ளன.

அதுவும் சிலப்பதிகாரம் பாடிய இளங்கவேடிகளின் புண்ணியத் தால்தான்.

இளங்கோவடிகள் தாம் பாடிய நீண்ட அகவல் பாக்களால் ஆன சிலப்பதிகாரத்தில் ஆங்காங்கே சில வரிப்பாடல்களை. பழமையான இசைமயமான நடன உருக்களைப் பொதித்து வைத்துள்ளார்.

கதைப்போக்குக்கு ஒத்த பாடல்களைத் தேடி எடுத்துப் பதித்து வைத்துள்ளார்.

மிகப்பூர்வமான பாடல்கள் அவை. ஆய்ச்சியர்குரவை என்னும் பகுதியில் அவர் அப்படி எடுத்துவைத்த பாடல்கள் திருமால் துதியாக உள்ளன.

அதில் ஒரு பாடல்.

பேரண்டம் முழுவதும் திருமாலின் உந்திக்கமலத்திலிருந்து உண் டானதுதான்.

பிரளயகாலத்தில் அது அப்படியே அவன் உந்திக்கமலத்தில் ஒடுங்கிநிற்கிறது.

அவன் நீலமேக சாமளவண்ணன். அவன் கண்களும் திருப்பாதங் களும், வாயும் செந்தாமரை மலர்களாய் உள்ளன.

பார்த்தால் அவனையல்லவா பார்க்க வேண்டும்.

இனிப்பாடல்,

**தானனன தன்னனன**
**தன்னனன தன்னனன**
**பெரியவனை, மாயவனைப்,**
**பேருலகம் எல்லாம்**

*விரிகமல உந்தியுடை*
*விண்ணவனைக்; - கண்ணும்,*
*திருவடியும், கையும்*
*திருவாயும் செய்ய*
*கரியவனைக் காணாத*
*கண்ணென்ன கண்ணே!*
*கணணிமைதது‌க காணபாாதம*
*கண்ணென்ன கண்ணே!*

(8)

இனி, ஆத்திரத்தில் புத்தி கெட்டுவிட்டது கம்சனுக்கு.

எப்படியாவது கண்ணனைத் தீர்த்துக்கட்டிவிட வேண்டும் என்று திட்டம் போட்டான் கம்சன். அவனுடைய திட்டங்களையெல்லாம் தட்டி நொறுக்கி விட்டான் கண்ணன்.

அந்தக் கண்ணன்தான் கொடிய பாவியாகிய துரியோதனனைத் தேடி பாண்டவர்களுக்காக நடந்து போனான் தூது.

தன்னை நம்பினவர்களுக்காக எத்தனை எத்தனை தியாகம் பண்ணுகிறான் கண்ணன் என்று உலகமே ஒன்றாய் நின்று புகழ்ந்தது.

நம்முடைய பங்குக்கு நாமும் வாழ்த்த வேண்டாமா அவனை? வாழ்த்தாத வாய் ஒரு வாயா?

பாடல்:

*மடம்தாழும் நெஞ்சத்துக்*
*கஞ்சனார் வஞ்சம்*
*கடந்தானை, நூற்றுவர்பால்*
*நால்த்திசையும், போற்ற,*
*படர்ந்தா ரணம்முழங்கப்*
*பஞ்சவர்க்குத் தூது*
*நடந்தானை ஏத்தாத*
*நாஎன்ன நாவே?*
*நாரா யணாஎன்னா*
*நாவென்ன நாவே!*

(நூற்றுவர் - துரியோதனக் கூட்டம். படர்ந்து ஆரணம் முழங்க - வேதமே முழங்கிப்பாராட்ட. பஞ்சவர் - பாண்டவர்.

பக்திரசத்தைப் பிழிந்து பாடலாய் வடித்து விடுகிறது தமிழ்.

(9)

இனி இறைவனிடமே கிண்டல் பண்ணியும் கேலி பேசியும் உல்லாசங்காட்டுகிற பாடல்.

**கடல் நிறவண்ணனே! கண்ணனே!**

"திருப்பாற்கடலையே கடைந்தவன் நீ. மலையை மத்தாகப் போட்டு, பாம்பை தாம்புக்கயிறாகச் சுற்றி கடலையே கடைந்த உன்திருக்கரங்கள் — கடைந்து அமிர்தத்தை எடுத்த திருக்கரங்கள், உறிப்பானைக்குள் ஏன் நுழைய வேண்டும்."

நுழைந்து வெண்ணெயை ஏன் திருட வேண்டும்.

திருடினதால்தானே உரலோடு சேர்த்துக் கட்டப்பட்டாய் நீ. இது என்ன வளையாட்டு?

*பாடல்*

*தானனன தானனன*
*தானனை தானன தன்*
*வடவரையை மத்தாக்கி,*
*வாசுகியை நாணாக்கி,*
*கடல்வண்ணன்! பண்டொருநாள்*
*கடல்வயிறு கலக்கினையே,*
*கலக்கியகை யசோதையார்*
*கடைகயிற்றால் கண்டுண்கை;*
*மலர்க்கமல உந்தியாய்*
*மாயமோ மருட்கைத்தோ?*

வடவரை - மாமேருமலை - வாசுகி - ஆதிசேடனின் தம்பி - வானத்துக்கும் பூமிக்குமாக எழுந்து நிற்கும் பெரிய சர்ப்பம்.

கடல் வண்ணன் - நீல நிறவண்ணனே. கடைகயிறு - தயிர் கடையும் தாம்புக்கயிறு. மலர்கமலஉந்தி - தாமரைமலரை ஒத்த கொப்பூழ், மருட்கை - அதிசயம். நம்பமுடியாத வியப்பு.

(10)

இனி இன்னொரு பாட்டு. அணுவுக்கும் அணுவாய் இருப்பவன் நீ. அப்படிச் சிறுத்தஉனக்கா உலகையே அள்ளி வயிற்றில் போடுகிற அளவுக்கு பெரும் பசி!

சரி, அது போகட்டும்.

ஈரேழ் பதினான்கு உலகங்களையும் வயிற்றுள் போட்டுமா பசி அடங்கவில்லை உனக்கு? அதன் பிறகும் வெண்ணெயைத் திருடி உண்டாயே நீ?

***அறுபொருள் இவனென்றே***
***அமரர்கணம் தொழுதேத்த***
***உறுபசிஒன்று இன்றியே***
***உலகளைய உண்டனையே!***

*உண்டவாய் யசோதையார்*
*உறிவெண்ணெய் தானுண்டல்*
*வண்துழாய் மாலையாய்!*
*மாயமோ மருட்கைத்தோ.*

அறுபொருள் - அணுவில் அணுவாய் தேய்ந்து தேய்ந்து ஒன்றாம் பொருள் - பரம்பொருள்.

இவன் என்றே அமரர்கணம் தொழுது ஏத்த - பரம்பொருள் இந்தத்திருமாலேதான் என்று ஞானிகள் போற்ற. உறுபசிஇன்றி - பசியே இல்லாதிருந்தும். உலகு அளைய உண்டனையே - உலகம் முழுவதையுமே உருட்டித்திரட்டி வாயில் போட்டாயே, அது ஏன்? அதற்கும் மேலே வெண்ணெயை எடுத்துச் சாப்பிடுவதென்பது வேடிக்கைதானே.

(11)

*கடவுள் தத்துவத்தோடு இப்படிக் கட்டிப்புரண்டு விளையாட வேண்டும். அதுதான் பக்தி. பக்தர் பரம்பொருளைத் தன்னொத்த மனிதனாகவே வைத்து வியைாடுகிறார்.*

*இளமையும் குறும்பும் கொஞ்சிவிளையாடும் உல்லாசத்தில் வைத்து ஊஞ்சலாட்டிக்கிறார் பக்தி என்னும் தீராக்காதலை.*

*அது எப்படி என்று பாருங்கள். மேலாடை, நகை, வளையல் முதலியவற்றைக் களைந்து ஒரு பொட்டலமாக வைத்தாள் ஒரு இளம்பெண். உள்ளாடையோடு ஆற்றில் இறங்கினாள்.*

*மூழ்கி மூழ்கி ஆனந்தமாக நீராடினாள். நீருள் மூழ்கிப் பெண்ணானவள் திளைக்கிற நேரம் பார்த்து அவள் பொட்டலத்தை எடுத்து மரத்தின் மேலேறி ஒளிந்து கொண்டான் கண்ணன்.*

*ஒரு கொம்பில் ஒய்யாரமாக உட்கார்ந்து கொண்டே நீராடும் பெண்ணின் அழகைப் பார்த்துப் பார்த்துப் புளகாங்கிதம் அடைந்தான்.*

*நீராடி முடிந்ததும் கைகளால் உடம்பை மூடியவண்ணம் படித்துயில் ஏறிவருகிறாள் பெண்.*

*அப்பொழுது எதிர்பாராத வகையில் திடுதிப்பென்று பெண்ணின் எதிரில் வந்து நின்றான் கண்ணன்.*

*பதறிப்போனாள் பெண்.*

*வெட்கம் வந்தது பெண்ணுக்கு. உடம்பில் உள்ள ரத்தம் முழுவதும் முகத்துக்கு வந்துவிட்டது போலச் சிவந்துவிட்டன கன்னங்கள்.*

*கண்ணும் மூக்குமே சிவந்துவிட்டன. இரண்டு கைகளாலும் முகத்தை மூடிமறைக்கிறாள் பெண்.*

குனிந்து தரையைப்பார்த்தபடியே கைகளால் முகத்தை மறைக்கிறாள் பெண்.

அப்பொழுது அவள் முகத்தில் அலைபாய்ந்த உணர்ச்சிகளை என்னவென்று சொல்ல?

*தையல் கலையும்*
*வளையும் இழந்தே*
*கையில் ஒளித்தாள்*
*முகம்என் கோயாம்!*

பெண்ணின் இக்கட்டான நிலை பரிவையே உண்டாக்கி விட்டது கண்ணனுக்கு.

குறும்புத்தனம், விளையாட்டுபுத்தி, அசட்டுத்துணிச்சல் எல்லாம் உருகிக்கரைந்து விட்டன அந்தப்பரிவில்.

பதறிப் போனான் கண்ணன். கையும் காலும் நடுங்கின. உடம்பே விதிர் விதிர்த்து விட்டது கண்ணனுக்கு

இனிப்பாடலின் முழுஉருவம்

*தையல் கலையும்*
*வளையும் இழந்தே*
*கையில் ஒளித்தாள்*
*முகம்என் கோயாம்!*
*கையில் ஒளித்தாள்*
*முகம்கண்(டு) அழுங்கி*
*மையல் உழந்தாள்*
*வடிவென் கோயாம்.*

என்னத்தைச் சொல்ல? நாணத்துக்கும் கூச்சத்துக்கும் ஆளான அந்தச் செங்கமல முகத்தைச் சொல்லவா? தன் செயலுக்கு வருந்தி வெட்கப்பட்ட கண்ணனுடைய (அலங்) கோலத்தைச் சொல்லவா?

எதை எப்படிச் சொல்ல?

பக்தரின் வியப்பு - அற்புதரசம், கவியாய் உருவெடுத்து நிற்கிறது.

பழமைக்கும் பழமையான காலத்தைச் சேர்ந்தவை பாடல்கள். ஆனால் புதுமைக்கும் புதுமையாய் மிளிர்கின்றன.

(12)

இனி ஆழ்வார்கள் காலத்தை ஒட்டிப் பல பக்தர்கள் பாடிய பாசுரங்களில் சில.

எனக்குத்தான் பெருமாள் நெருக்கம். காரணம் அவர் ஒருவருக்குத்தான் நான் அடிமை.

இப்படி வருகிறது ஒருபாடல்:

என்றும் திருமாற்கே
ஆளாவேன்; எம்பெருமான்
என்றும் எனக்கே
பிரானாவான்; - என்றும்
பிறவாத பேராளன்
பேர்ஆ யிரமும்
மறவாது வாழ்த்துகஎன்
வாய்

அற்புதமான பாடல்.

தானே விளைந்து வந்துவிட்டதோ என்று சொல்லம்படி இருக்கிறது பாடல். தமிழே பாடலாக விளைந்து வந்ததோ என்று சொல்லவும் தோன்றுகிறது.

(13)

இனி, மோட்சம் என்றால் கடவுள் தத்துவமேதான்.

கடவுள் தத்துவத்தை உணர உணர பாரம் குறையும். கட்டிப் போட்டிருந்த பிணி ஒவ்வொன்றாய்க் கழலும்.

அது கழலக்கழல இன்பந்தான்.

இன்பம் பொங்கித்ததும்புவதுதான் மோட்சம் - விடுதலை - அதாவது வீடுபேறு என்பது அதுதான்.

அண்ணாந்து மேலே பார்த்தால் ஆகாயம். போகப் போகப் போய்க் கொண்டே இருக்கும் அது.

பூமியின் எதிர்நிலையில் உள்ளவர்களுக்கோ ஆகாயம் என்று நாம் பார்த்தது பாதலம். அதாவது கீழ்.

அப்படியானால் உண்மையில் மேல் (உயரம்) என்றோ, கீழ் (ஆழம்) என்றோ இல்லை.

மேலும் இல்லை, கீழும் இல்லை. எங்கும் ஒரே தன்மைத்தாய் இருக்கிறது பேரண்டம்.

கடலின் அடி ஆழத்துள் கிடக்கிறவன் கடலின் வடிவத்தைப் பார்க்க முடியுமா? பேரண்டத்தில் எங்கோ ஒரு மூலையின் விளிம்பில் - அணுவளவு ஓரத்தில் கிடக்கிற மனிதனால் எப்படிப் பார்க்க முடியுமு பேரண்டத்தை?

கோவிந்தா கோவிந்தா என்று கதற வேண்டியதுதான்.

கதறிக் கண்ணீர்விட வேண்டியதுதான். அந்த ஆனந்தக் கண்ணீர் வழியாகப் பார்க்கிறவர்களுகுகு ஒரு சாயலில் தெரியும் மோட்சம்.

*அதாவது இறைவன் கொலுவிருக்கும் நிலை (மாயோன்பதி) தெரியலாம்.*

*இனிப்பாடல்*

***ஆழம் உடைமையின்***
***ஆழியாம் - அந்தரத்து***
***வாழ நிமிர்தலில்***
***மந்தரமாம் - ஏழ்உலகும்***
***தத்தளிக்கும் வண்ணத்தால்***
***தாயாம்செந் தாமரைக்கண்***
***பைந்தெரியல் மாயோன்***
***பதி.***

(ஆழி - சமுத்திரம். மந்தரம் - மாமேருமலை, பைந்தெரியல் மாயோன் - பசிய துளபமாலயணிந்த திருமால் பதி - வைகுந்தம். மோட்சவீடு.

*பாடலின் போக்கைப் பாத்தால் ஆழ்வார்கள் காலத்துக்கு முற்பட்ட மிகப்பழமையான பாடலாகத் தெரிகிறது.*

*என்றும் திருமாற்கே எனத்தொடங்கும் பாடலும் அப்படியே தெரிகிறது.*

(14)

*இனி திருமாலின் அழகில் - கண்ணைக் கவரும் அவர் மேனியின் வண்ணத்தில் ஈடுபட்டு உள்ளம் கரையும் நிலை.*

*திருமாலிடமே வியந்து கேட்பதாக ஒரு மயக்க நிலை. அது பாடலாய் எப்படி வருகிறது என்று பாருங்கள்.*

***"நீல மழைமுகிலோ,***
***நீலமணிக் குன்றமோ,***
***கோலம் நிறைந்த***
***குரைகடலோ, - சோலைஇளம்***
***காயா வனமோ,***
***கழுநீரோ கண்ணமங்கை***
***மாயா உனது***
***வடிவு"***

**மழைமுகில் - இருண்டு கறுத்த மேகம், குன்றம் - மலை, கோலம் நிறைந்த குரைகடல் - அலைகளால் கோலம் போட்டு அழகுபார்க்கும் கடல். குரைகடல் - ஆரவாரம் பண்ணும் கடல். காயாவனம் - காயாம்பூச்சோலை. கழுநீர் - கருங்குவளைமலர். (திருக்) கண்ண மங்கை என்னும் ஊரில் எழுந்தருளியிருக்கும் பெருமானே உமது**

திருமேனியின் வண்ணம் எப்படி?

(15)

ஒரு சிறு முள் தைத்தாலே போதும். அப்பா, அம்மா என்று கூப்பாடு போடுகிறோம். எண்சாணுடம்பையும் முறுக்கிக் கசக்கி வேதனையைக் கொட்டுகிறோம்.

முருகா, முருகா என்று புன்முறுவல் பூத்துப் புளகாங்கிதமா அடைகிறோம். முள்தைத்தவுடன்.

ஆனால் காந்திமகான் இருந்தார்.

நேருக்கு நேராக நின்று ஒருவன் அவரைத் துப்பாக்கியால் சுட்டான்.

அவர் பார்த்துக் கொண்டிருக்கவே சுட்டான். ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என்று குண்டுகள் அடித்தன. நெஞ்சையே பிளந்தன.

அப்பா, அம்மா, என்றா கதறினார்! ஐயையோ, ஐயையோ என்றா கூப்பாடு போட்டார்?

அமைதியாக, ஆனந்தமாக, ராம், ராம் என்று புன்முறுவல் பூத்தார் காந்திமகான்.

ராம் என்பதை இரண்டெழுத்துக்கள் கொண்ட வெறும் சொல் லாக நினைக்கவில்லை காந்தியடிகள்.

ராமனாகவே நினைத்தார்.

ராமனையோ, தசரதராஜ குமாரனாக நினைக்கவில்லை அவர்.

சகல தத்துவங்களுக்கும் அடிப்படையான சத்தியமாகவே (பரம் பொருளாகவே) பார்த்தார். சத்தியத்துக்கு எத்தனையோ பெயர்கள். அவற்றில் ஒன்று ராமன் (ராம்).

தசரதன் தன்மகனுக்கு அந்தப் பெயரைச் சூட்டினான்.

நமக்கு நம்தாய் தந்தையர் உமையொருபாகம் சிவப்பிரகாசம், மெய்யப்பன், சத்தியமூர்த்தி கந்தசாமி என்றெல்லாம் பெயர் வைக்கத் தானே செய்தார்கள்.

தசரதனும் அப்படியே தன் மகனுக்கு ராமன் என்று பெயரிட் டான்.

அந்த ராமனும் வைத்த பெயரை ஏமாற்றவில்லை.

சீலத்தாலும், தியாகத்தாலும் தெய்வாம்சத்தைக் காட்டுபவனா கவே விளங்கினான்.

இனி, பரம்பொருளை - மாசற்ற மெய்ம்மையைப் பரிபூரணமா கப் பார்த்தவர் காந்திமகான்.

தம் வாழ்க்கையையே ஞானவேள் வியாக்கிப் பார்த்தவர் காந்திம கான்.

அதனால் அவர் மனம் முழுவதும் தேகம் முழுவதும் ராம் ராம் என்னும் மந்திரமாய் நிறைந்திருந்தது.

ஆங்கில ஆசிரியர் ஒருவர் சொன்னார்; "காந்திமாதிரி ஒரு பொம்மையைச் செய்து அதை எந்த இடத்தில் ஊசி கொண்டு குத்தினாலும் அது ராம், ராம் என்றுதான் தியானிக்கும்'' என்று.

பக்தர்கள் என்றால் கடவுள் தத்துவத்தை மெய்யுணர்வால் கண்டு திளைக்கிறவர்கள். அப்பொழுது மந்திரம் என்னும் ஒலி உருவாக உதித்து வரும் மெய்யுணர்வு.

இந்த உண்மையை,

*"திருச்சிலம்(பு) ஓசை*
*ஒலிவழி யேசென்று*
*நிருத்தனைக் கும்பிடென்(று)*
*உந்தீ பற;*
*நேர்பட அங்கேநின்று*
*உந்தீபற;*

என்று முன்னோர்கள் கண்டு சொல்லி இருக்கிறார்கள்.

மகாத்மா காந்தியை எப்படி ராம் ராம் என்பது பிசைந்து பிசைந்து குழைத்ததோ, அப்படியே நாராயணாய என்னும் மந்திரம் வைணவ அடியார்களைக் குழைத்திருக்கிறது.

இனி பக்தர் ஒருவர் நாராயணாய என்னும் மந்திரத்தில் அடைகிற பரவசத்தைப் பாருங்கள்.

***தானனன தானன***
***தான தானன***
***தான தானன***
***தான தன்***
***வான்சொல்லு மே,புவி***
***சொல்லு மே,மறை***
***சொல்லு மே,நிறை***
***சேடன் வாய்***
***தான்சொல்லு மே, முனி***
***வோர்பெ ரும்சபை***
***சொல்லுமே,அயன்***
***சொல்லு மே,***

*தேன்சொல்லி பங்கிறை*
*சொல்லு மே,திசை*
*சொல்லு மே,திசை*
*யாம லே:-*
*நான்சொல்ல வும் எளி*
*வந்த வாநா*
*ராய ணா*
*நாராய ணா*

வான் - ஆகாயம் (தேவர்கள்) புவி - மண்ணுலகம். மனிதர்கள் உள்ளிட்ட உயிரினம். மறை - பாடல்கள். நிறைசேடன் - ஆதிசேடன். வான வெளியில் கிடக்கும் பால் வீதிக்கு அடையாளப் பெயர் ஆதிசேஷன்.

அயன் - பிரம்மா, தேன் சொல்லிங்கு இறை - சிவபெருமான். மதுரமான தேன் போல் தித்திக்கும் உமையம்மையின் மழலை மொழி. உமையொருபாகனாகிய சிவன். திசையாமல் - திகைக்காமல்.

*இவ்வளவுக்கு மத்தியில் எனக்குமல்லவா அந்த மந்திரத்தை உச்சரிக்கும் பாக்கியம் கிடைத்துவிட்டது என்று பரவசப்படுகிறார் பக்தர்.*

(16)

*இனி இன்னொரு பாட்டு*

*நாராயணா நாராயணா என்னும் ஒலி வழியாக நாராயணனைக் கண்டு களித்தால் போதும்.*

*அப்படிக் களிப்படைகிறவர்கள் கோவில் கட்ட வேண்டாம். குளம் வெட்ட வேண்டாம்.*

*காணிக்கை செலுத்தவும் வேண்டாம். உண்டியலில் போடவும் வேண்டாம். ஆனால் அதில் ஈடுபடவிடாதபடி தடுக்கிறதே மடத்தனம் (அறியாமை). அந்த அறியாமையை உண்டியலில் கொட்டிவிட வேண்டும்.*

***"நாராய ணாய***
***நமஎன்று விண்ணோடு***
***பாராளும் பாதம்***
***பணிந்தேத்தும் ஆறறியேன்;***
***காராரும் மேனிக்***
***கருணா கரமூர்த்திக்(கு)***
***ஆரா தனைஎன்***
***அறியாமை ஒன்றுமே"***

எப்படி வருகிறது பாட்டு.

விண்ணுக்கும் மண்ணுக்கும் சிறகடித்துக் கொண்டல்லவா வருகிறது பாட்டு.

பாடலை அனுபவித்துப் பாடிக்காட்டும் ரசிகமணி. டி.கே.சி.

கம்பரைத் தவிர வேறு யாரால் இப்படிப் பாடமுடியும் என்று கேட்பார்கள்.

எல்லாம் அவன் செயலே என்று உணர்ந்து ஒன்றுவதல்லவா முறை (ஆறு).

அது வரவில்லையே எனக்கு!

**கார் ஆரும் மேனி - நீல மேகவண்ணன். ஆராதனை - தீபத்தட்டில் போடுகிற காணிக்கை. அறியாமை ஒன்றுமே - ஆணவம் ஒன்றுதான்.**

வேறு என்ன இருக்கிறது என்னிடம் என்பது கருத்து.

அது சிரிக்கச் சிரிக்கத் தாளம் போட்டு வருகிறது பாட்டில்.

*(17)*

எல்லாம் உன் செயல்தான். என்செயல் ஒன்றும் இல்லை என்று பிரகடனம் பண்ணியது யானை.

ஆதி மூலமே என்று பிரகடனம் பண்ணியது யானை. இல்லையென்றால் முதலையின் வாயிலிருந்து விடுபட முடியுமா யானையால்.

அன்பர்களின் குரல் கேட்டு ஓடிவருவான் பெருமான். அவன் வேதங்களுக்கு அகப்படமாட்டான்.

வேதங்கள் தேடத்தேட ஓடி ஒளிவான் - முன்னே முன்னே ஓடுவான்.

ஆனால் ஆணவமே இல்லாத அப்பாவிப் பசுக்களுக்கோ பின்னாலேயே வருவான். என்ன அதிசயம்.

*"மூலப் பழமறைக்கு*
*முன்னேயும் காணலாம்.*
*காலிக்குப் பின்னேயும்*
*காணலாம் - மால்யானை*
*முந்தருளும் வேத*
*முதலே! என அழைப்ப*
*வந்தருளும் செந்தா*
*மரை."*

**காலி - பசு (மந்தை) பழமறை - பூர்வான ஞானநூல்கள். செந்தாமரை - தாமரைமலர். போன்ற திருவடிகள். அதாவது தண்ணென்ற திருவருள்.**

(18)

*யானைக்கு இருக்கிற புத்தி மனிதனுக்கு இல்லை. இருந்தால் ஒவ்வொரு வினாடியும் பயந்து பயந்து சாவானா மனிதன்.*

*எங்குமாய் எல்லாமாய் நிறைந்திருக்கிறான் பெருமான்.*

*பெருமானை நினைத்தாலே போதும். மளமளவென்று பாடல் கள் ஓடிவரும்.*

*மனமே! நினைக்கத்தான் நீ இருகுகிறாயே. பாடத்தான் வாயிருக் கிறதே!*

*பிறகு ஏன் புத்திகெட்டுப் பதறுகிறாய்.*

***நாவுண்டு, நீஉண்டு,***
***நாமம் தரித்தோதப்***
***பாஉண்டு நெஞ்சே!***
***பயம்உண்டோ - பூஉண்டு***
***வண்டுறங்கும் சோலை***
***மதிளரங்கத் தேஉலகை***
***உண்டு,உறங்கு வான்ஒருவன்***
***உண்டு. (நெஞ்சேபயமுண்டோ)***

பூஉண்டு - பூவிலுள்ள தேனைக்குடித்து, வண்டு உறங்கும் - அந்தப் பூவிலேயே படுத்து உறங்குமாம் வண்டு.

மதிள் - மதில். உலகை உண்டு உறங்குவான் - பிரளயத்தில் உலகைக் காப்பாற்ற அப்படியே எடுத்து அதை வயிற்றுள் போட்டு வைத்துக்கொண்டான் பெருமான்.

*அவன் நிம்மதியாகப் படுத்து உறங்கும் இடம் திருவரங்கம். அவன் நமக்குத்துணையாக இருக்கத்தானே செய்கிறான்.*

*இத்தனையும் இருக்க ஏன் பயப்பட வேண்டும்.*

(19)

*கடைசியாக ஒரு பாட்டு*

*இலங்கைக்குள் போக கடலில் ஒரு அணைகட்ட வேண்டிஇருந் தது.*

*கட்டுமானத்துக்கு இடையூறு செய்த வண்ணமாக இருந்தது கடல்.*

*ராமனுக்குக் கோபம் வந்தது.*

*அக்கினிமயமான அம்பை எடுத்து வில்லில் பூட்டினான். சமுத்தி ரத்தைக் குறிவைத்து அம்பை ஏவினான்.*

*அம்புபோய் அடித்தவேகத்தில் தூள் தூளாய்ச்சிதறிவிட்டது சமுத் திரம்.*

பூமியைத் தாங்கிக் கொண்டிருக்கும் திசை யானைகள் எட்டுமே குலைபதறிவிட்டன.

அப்படி அம்பை எய்த அந்த ராமபிரான் குடியேறி அமர்ந்திருக்கும் இடம் திருக்குறுங்குடி.

நெல்லை மாவட்டத்தில் வள்ளியூர், களக்காடு, நான்கு நேரிவட்டத்தில் உள்ள புண்ணிய ஸ்தலம்.

ராமபிரானைத் தரிசிக்க பக்தர் ஒருவர் வருகிறார் திருக்குறுங்குடிக்கு.

வரும்வழி எல்லாம் வயல்வெளிகள். அங்கே சிதறிக்கிடக்கின்றன முத்துக்கள். பசுமையான வாய்க்கால் வரப்புகளில் அமர்ந்த கொக்குகள் அவற்றைக் கொத்தி வாயில் போடுகின்றன.

ஆனால் தொண்டைக்குழிக்குள் இறக்க முடியவில்லை முத்துக்களை.

கொக்குகளுக்குக் கண்விழி பிதுங்குகின்றன. திணறித் திண்டாடிக் கக்குகின்றன முத்துக்களை.

பக்தர் இவ்வளவையும் பார்த்தார். அனுபவித்தார். மறக்க முடியவில்லை அதிசயத்தை.

ராமபிரானைப் பற்றிச் சொல்லுகிறபொழுது இந்தக் காட்சியைச் சேர்த்து வைத்துத்தான் சொல்ல வேண்டி இருக்கிறது.

எப்படிச் சொல்கிறார் பக்தர் என்று பாருங்கள்.

*தன்னன தன்னன*
*தன்னன தன்னன*
*தனனன தன்.*

*திக்கயம் எட்டும்*
*துக்கம்உற் றுத்திடுக்-*
*கிட்டல ற,*

*மைக்கடற் குள்சரம்*
*தைக்கவிட் டோற்கிடம்:-*
*மாமது ர*

*இக்குமுற் றிக்கனுச்*
*சுற்றுவிட் டுத்தெறித் -*
*திட்டமுத் தைக்*

*கொக்குமொக் கிக்கக்கி,*
*விக்கும்அச் சோலைக்*
*குறுங்குடி யே!*

திக்கயம் - திசையானைகள், துக்கம் உற்று திடுக்கிட்டு அலற - ஆபத்துக்கு ஆளாகிவிட்டோமே என்று பயந்து கதற, மைக்கடல் - கருங்கடல், சரம்தைக்க விட்டோன் - அம்பை எய்த ராமன். மாமதுரம்) - மிக்க சுவையோடு கூடிய.

இக்கு - கரும்பு, கணுச்சுற்றுவிட்டு - விளைந்து முற்றிய தால் வெடித்து, மொக்கி - விழுங்கி - அது முடியாமல், கக்கிவிக்கும் - கக்கி அதன் தொண்டை வறண்டு விக்கலெடுக்கும். குறுங்குடி - திருக்குறுங்குடி

*முதலிலிருந்து கடைசி வரை ஒரே வல்லோசைதான் பாட்டில்.*

*ஆனாலும் தங்குதடையில்லாமல் சுகமாய் இழுத்துக்கொண்டு போகிறது பாடலின் தாளக்கட்டு.*

*வல்லோசையில்தான் பாட வேண்டும் என்றோ மெல்லோசை யில்தான் பாட வேண்டுமென்றோ உண்மையான கவிஞர்கள் திட்டம் போட்டுப் பாடுவதில்லை.*

*அனுபவமானது எந்த முறையில் உணர்ச்சியை அழுத்துகிறதோ, அந்த முறையில் ஓசைவரும். வல்லோசையாகவோ மெல்லோசையா கவோ, கலந்தோ, விரவியோ வரும்.*

*அதற்கும் கவிஞருக்கும் சம்பந்தம் இல்லை. உணர்ச்சிக்கு உரு வம் கொடுக்கிற தமிழின் காரியம் அது.*

*இனி, கண்ணன் என்றும், ராமன் என்றும் நாராயணன் என்றும், கோவிந்தன் என்றும், திருமாலைப் பற்றிப் பக்தர்கள் எத்தனையோ பாடல்களைப் பாடி இருக்கிறார்கள்.*

*தொலைந்தவை அதிகம். கிடைத்தவை கொஞ்சம். ஆனாலும் கிடைத்த பாடல்களில் சிலவற்றைத்தான் இங்கு கொடுத்திருக்கிறோம்.*

*பிள்ளைப்பெருமாள் ஐயங்கார், பரம பக்தர். அருள் பெற்ற கவிஞர். அவர் பாடல்கள் தனி நூலாக வரும்.*

*இனி, மகாகவி கம்பர் தம்முடைய காவியத்தில் திருமால் பற்றிப் பக்திமயமான பாசுரங்கள் பல பாடி உள்ளார்.*

*கடவுள் வாழ்த்தாகவும், துதிப்பாடல்களாகவும், இராமாவதா ரத்தை அனுபவித்துத் திளைத்துப்பாடி இருக்கிறார் கம்பர்.*

*அந்தப் பாடல்களைத் தொகுத்து வெளியிட்டால் அது ஒரு பெரிய நூலாக இருக்கும்.*

*பாசுரங்களை அன்பர்கள் அனுபவிக்க, அனுபவிக்க ஒவ்வொன் றாய் அவை வெளிவரும்.*

# தனியன்கள்

ஆழ்வார்களின் பாடல்களை அனுபவித்துப் பரவசப்பட்டிருக்கி றார்கள் பக்தர்கள்.

பரவசம் பாடலாய் உருவெடுத்துள்ளன. அப்பாடல்களுக்கு தனி யன்கள் என்று பெயர் வழங்கி உள்ளனர்.

அத்தகைய தனியன்கள் சிலவற்றுக்கு இங்கே விளக்கம் கொடுத்து வெளியிடுகிறோம்.

இதுதவிர நம்மாழ்வாரின் பாசுரங்களை அனுபவித்த மதுரகவி ஆழ்வார் நம்மாழ்வாரைப்பற்றியும் அவர் பாசுரங்கள் பற்றியுமே பாடினார். அப்பாடல் தொகுதிகளுக்குக் கண்ணி நுண்சிறுத்தாம்பு என்று பெயர். அதுபற்றிய விளக்கம் முன்பகுதியில் இருக்கிறது.

இனி, சடகோபரந்தாதி என்றொரு நூல், அதில் நம்மாழ்வார் பாசுரங்கள் பற்றி அற்புதமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. அதிலிருந்து நான்கு பாடல்களை விளக்கத்துடன் இங்கு சொல்லி இருக்கிறோம்.

மேலும் ராமானுஜர் நம்மாழ்வாரின் பெருமையை அவர் ஊரு டன் சேர்த்து வைத்துப்பாடிய பாடலும், வேறுசில பாடல்களும் இங்கு இடம் பெறுகின்றன.

ஏனைய ஆழ்வார்கள் பற்றிய சில தனியன்களும் இங்குக் கொடுக்கப்பட்டுள்ளன.

(1)

முதலில் நம்மாழ்வாரை ஸ்ரீமந்நாராயணனுடன் ஒப்பிட்டு ஒரு பக்தர் பாடிய பாடல்.

பெருமானே! உமக்குத் தோள்கள் இரண்டுதானே! எப்படி நான்கு வந்தன. மாலைவகுளம்தானே? துளபம் எப்படிக் கிடைத்தது? நீர்சட கோபரா? ஸ்ரீமந்நாராயண மூர்த்தியா? ஒன்றும் விளங்கவில்லையே.

இப்படி அதிசயபாவத்தில் வருகிறது பாடல்.

***"சேமம் குருகையோ?***
***செய்யதிருப் பாற்கடலோ?***
***நாமம் பராங்குசனோ?***
***நாரணனோ? - தாமம்***
***துளவோ வகுளமோ?***
***தோளிரண்டோ நான்கும்***
***உளவோ பெருமான்***
***உனக்கு?"***

(சேமம் - தங்கும் இடம், குருகை - திருக்குருகூர், ஆழ்வார் திருநகரி, நாமம் - திருப்பெயர், தாமம் - மாலை.)

(2)

இனி, சடகோபர் அருளிய திருவாய் மொழி முதலிய பாசுரங்களே உண்மையான கவிகள் என்றும், அவை போல் பரதத்துவ உண்மையை எடுத்துச்சொல்ல வந்த வேறு பாடல்கள் வெறும் போலி என்றும் அடித்துச் சொல்கிறது ஒரு பாட்டு.

அது வருமாறு;

*"ஈஆ டுவதோ*
*கருடற்கு எதிரே?*
*இரவிக்கு எதிர்மின்*
*மினிஆ டுவதோ?*

*நாயா டுவதோ*
*உறும்இப் புலிமுன்*
*நரிகே சரிமுன்*
*நடைஆ டுவதோ*

*பேயா டுவதோ*
*அழகூர் வசிமுன்*
*பெருமான் வகுளா*
*பரணன் அருள்கூர்ந்(து)*

*ஓவாது உரைஆ*
*யிரமா மறையின்*
*ஒருசொற் பெறுமோ*
*உலகின் கவியே!"*

(கருடற்கு எதிர் ஈ ஆடுவதோ - கருடனுக்கு இணையாக ஆட முடியுமா ஈயால்? இரவி - சூரியன், கேசரிமுன் - சிங்கத்தின் எதிரில் ஊர்வசி - தெய்வப்பெண். ஓவாது - தொடர்ந்து, மறை - வேதம்.)

(3)

இனி வேறொரு பாடல் -

ராமானுஜர் தென்திசை நோக்கி வருகிறார். நம்மாழ்வார் அவதரித்த புண்ணியத்தலத்தை - திருக்குருகூரைத்தரிசிக்க வேண்டும் என்று.

ஊரின் எல்லைக்கு வந்தவுடனேயே ராமானுஜருக்குப் பக்திப்பரவசம் உண்டாகிவிட்டது. உணர்ச்சிவசப்பட்டு விட்டார் ராமானுஜர். அப்பொழுது வருகிறது பாட்டு -

*"இதுவோ திருநகரி!*
*ஈதோ பொருனை!*
*இதுவோ பரமபதத்(து)*
*எல்லை! - இதுவோதான்*
*வேதம் பகர்ந்திட்ட*
*மெய்ப்பொருளின் உட்பொருளை*
*ஓதும் சடகோபன்*
*ஊர்"*

(பொருனை - தாமிரபரணி ஆறு, பரமபதம் - வைகுந்தம். வேதம் பகர்ந்திட்ட - உண்மையான ஞானம் எடுத்துச் சொல்கிற. மெய்ப்பொருளின் உட்பொருள் - கடவுள் தத்துவம். ஓதும் - பாடும், சடகோபன் ஊர் - ஆழ்வார் திருநகர்).

அற்புதமான தனியன்கள். பக்தியானது உருண்டு திரண்டு நம் கண்முன் நிற்கிறது.

(4)

இனி, சடகோபரந்தாதியிலிருந்து சில பாடல்கள்.

திருமாலுக்குக் கிடைத்த யோகமே யோகம் என்று வியக்கிறார் பக்தர்.

எங்கோ ஓர் இடத்தில் மாடுமேய்த்துத் திரிந்தவர் பெருமாள்! அவருக்கோ இப்பொழுது சகல அண்டங்களும் சொந்தம்.

அதற்கடையாளமாக ஆயிரம் ஆயிரம் பொன்முடிகள்.

அதுமட்டுமா, பரந்தாமன், மகாவிஷ்ணு, நாராயணன், நெடுமால், கண்ணன், ஸ்ரீராமன் என்று ஆயிரக்கணக்கில் பட்டங்கள். அதுவும் போதாது என்று ஆயிரம் ஆயிரம் துளபமாலைகள்.

எல்லாவற்றுக்கும் மேலாக நம்மாழ்வார் பாடிய பாசுரங்கள் ஆயிரம் வேறு.

எல்லாம் அந்தச் செங்கமலநாச்சியார் புண்ணியம்!

இனிப்பாடல்

*"சேரா தனஉள*
*வோ!திருச் சேர்ந்தார்க்கு/*
*வேதம்செப் பும்*
*பேர்ஆ யிரம், பொன்*
*முடிஆ யிரம், நறை*
*பெய்துள வத்*
*தார்ஆ யிரம்நம்*
*திருக் கூர்சட*
*கோபன்சொன் ன*

*ஆரா அமுத*
*கவிஆ யிரம்அவ்*
*அரியினுக் கே!*

(திருசேர்ந்தார்க்கு - லட்சுமி கடாட்சம் பெற்றவர்களுக்கு, சேராதன உளவோ - கிடைக்காதது உண்டா? எல்லாம் கிடைக்கும். இதோ அதற்கு சாட்சி! அவ்அரியினுக்கு - எங்கோ கிடந்த திருமாலுக்கு லட்சுமி கடாட்சத்தால் கிடைத்தவை, நறை - தேன். ஆரா அமுத கவி ஆயிரம் - திகட்டாத அமிர்தம் அனைய பாசுரங்கள் ஆயிரம்.)

குறிப்பு: *அடடா!* யோகம் என்றால் திருமாலுக்குக் கிடைத்த யோகமல்லவா யோகம். ஒரு பாடலுக்கு என்ன பாடுபடுகிறது உலகம்? இவருக்கோ ஆயிரம் பாடல்கள்.

(5)

கடவுள் தத்துவம் என்று ஒன்று, அது எங்கும் நிறைந்தது. அது தான் பல்வேறு தோற்றங்களில் காட்சி தருகின்றது, அதுதான் உண்மை.

அதற்குத்தான் பரம்பொருள் என்று பெயர். இந்த அற்புதத்தை எடுத்துச்சொல்வது திருவாய் மொழி ஒன்றுதான் என்று துள்ளிக்குதிக் கிறார் பக்தர்.

ஏனைய வேதங்களுக்கும் இந்த உண்மை ஞானத்துக்கும் சம்பந் தமே இல்லை என்கிறார்.

அவை காற்று, அக்னி, இந்திரன் என்று எதை எதையோ பேசுபவை, மெய்மை ஞானத்துக்குச் சம்பந்தம் இல்லாதவை அவை என்கிறார் பக்தர்.

இனிப்பாடல்:

*"சாதிக்கு மோபர*
*தத்துவத் தைச்!சம*
*யத்திருக் கைச்*

*சேதிக்கு மோ!ஒன்றைச்*
*சிந்திக்கு மோ!அத*
*னைத்தெரி யப்*

*போதிக்கு மோ! எங்கும்*
*ஓங்கிப் பொதுநிற்கும்*
*மெய்யைப் பொய்யைச்*

*சோதிக்கு மோஉங்கள்*
*வேதம்? எங் கோன்தமிழ்ச்*
*சொல்என வே!"*

(உங்கள் வேதம் எங்கோன் தமிழ்சொல் என - உங்களுடைய தத்துவ விளக்கங்கள் நம்மாழ்வார் பாசுரம் போல - பரதத்துவத்தை சாதிக்குமோ - கடவுள் தத்துவத்தை வைத்துச் சுட்டிக்காட்ட முடியுமா? சமயத்து இருக்கை சேதிக்குமோ - அடிப்படையான மூலதத்துவத்தை இழைஇணையாக எடுத்துக்காட்ட முடியுமா? சேதித்தல் - பிரித்துச் சோதனை செய்தல் - ஒன்றை சிந்திக்குமோ - தெய்வம் ஒன்றே என்னும் யோசனை உண்டா? துணிச்சல் உண்டா? இது பொய், இது மெய் என பிரித்தறியத்தான் திராணிஉண்டோ? ஏன் வீணாக நம்மாழ்வாரோடு போட்டி போடுகிறீர்கள்? உங்கள் விவகாரம் வேறு. தனி. இது தனி என்பது கருத்து).

(6)

*நம்மாழ்வார் அவதரித்ததால் தமிழுக்கே பெருமை. பாஷைக ளின் சக்ரவர்த்தி தமிழ்தான் என்று ஆகிவிட்டது. அது மட்டுமா? மோட்சத்துக்கு அப்படி ஒரு பாதை, இப்படி ஒரு பாதை என்று வழிகள் பல இருந்தன. இப்பொழுது அவை எல்லாம் போய்விட்டன. மோட்சம் என்றால் அதற்குப்பாதை ஒன்றுதான் என்று ஆகிவிட்டது. அவ்வளவுக்கும் மேலாக ஓர் அதிசயம்!*

*நரகலோகம் என்கிற ஒன்று இல்லாமலே போனதுதான்.*

*இனிப்பாடல்:*

*"மொழிபல வாயும்*
*தமிழ்சிறப் புற்றது,*
*முத்திஎய் தும்*

*வழிபல வாய்விட்டு*
*ஒன்றா யது,வழு*
*வாநர கக்*

*குழிபல வாயின*
*பாழ்பட் டதுகுளிர்*
*நீர்ப்பொரு னை*

*சுழிபல வாய்ஒழு*
*கும்குரு கூர்எந்தை*
*தோன்றலி னே!"*

(பொருனை - தாமிரபரணி நதி. எந்தை தோன்றலின் - நம்மாழ்வார் அவதரித்த காணத்தால். வழிபலவாய்விட்டு ஒன்றாயது - சமயங்கள் பலவாக இருப்பினும் லட்சியம் ஒன்று என்பது விளங்கிவிட்டது. பாழ்பட்டது - தூர்ந்துபோயின.)

குறிப்பு: மகான் ஒருவரின் அவதாரம் என்னென்ன அதிசயங்களை உண்டாக்குகின்றன.

(7)

இனிக் கடைசியாக ஒரு பாட்டு.

வேதங்கள் எவ்வளவுதான் குய்யோ முறையோ என்று கதறி அழைத்தாலும் - தேடி அலைந்தாலும் இறைவன் அவைகளுக்கு அகப்படமாட்டான். உண்மையை உணர்ந்த ஞானிகள் - பிரம்மதேவனுக்கு நிகரான ஞானிகளின் ஆராய்ச்சிக்குள்ளும் சிக்கமாட்டான்.

ஆனால் நம்மாழ்வாரின் ஒவ்வொரு பாசுரத்திலும், பாசுரத்தின் ஒவ்வொரு வரியிலும், ஒவ்வொரு சீரிலும் எம்பெருமனார் சப்பணம் போட்டு உட்கார்ந்திருக்கிறார்.

பாடலை விட்டு, பெருமானால் ஓர் அடிகூட எடுத்து வைக்க முடியாது. அக்கம் பக்கம் நகரமுடியாது என்கிறார் பக்தர்.

*''வேதத்தின் முன்செல்க,*
*மெய்யுணர்ந் தோர்விரிஞ்*
*சன்முத லோர்*
*கோதற்ற ஞானக்*
*கொழுந்தின்முன் செல்க;*
*குணம் கடந் த*
*போதக் கடலெம்*
*குருகூர்ப் புனிதன்*
*கவியின் ஒரு*
*பாதத்தின் முன்செல்லு*
*மோ தொல்லை மூலப்*
*பரஞ்சுட ரே!''*

(விரிஞ்சன் - பிரம்மா. கோதுஅற்ற - குற்றமற்ற, ஐயம் திரிபு இல்லாத, ஞானக்கொழுந்து - மெய்ஞ்ஞானியர், குணம்கடந்த - பேதம் இல்லாத, போதக்கடல் - ஞானக்கடல், குருகூர்ப் புனிதன் - நம்மாழ்வார். பாதம் - அடி வரி. செல்லுமோ - நகர முடியுமா? தொல்லை மூலப்பரஞ்சுடர் - சகலவற்றுக்கும் ஆதாரமாய் இருக்கிற மூல நாயகன்.)

குறிப்பு: திருவாய் மொழிக்கு மதிப்புரை என்றால் இதுவல்லவா மதிப்புரை. படித்து அனுபவித்த ஆனந்தத்தில் எழுந்த மதிப்புரை. ஏதோ கட்டுரை எழுத வேண்டும். அதன் மூலம் ஆராய்ச்சி வல்லுநர் என்று பட்டம் பெற வேண்டும் என்பதற்காக எழுதிய மதிப்புரை அன்று.

*"இன்னமிழ்தம் ஊட்டுகேன் இங்கேவா பைங்கிளியே!*
*தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமான் - பொன்னம்*
*சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோன் எங்கள்*
*குலசே கரன்என்றே கூறு!"*

(அமிழ்தம் - பாற்சோறு. ஊட்டுகேன் - ஊட்டிவிடுகிறேன். பொன்னம்சிலை - அழகிய வில். சேரலர் கோன் - குலசேகரப் பெருமாள்!)

(6)

*இனி பெரியாழ்வார் பற்றிய தனியன் ஒன்று.*

*"மின்னார் தடமதில்சூழ் வில்லிபுத்தூர் என்றொருகால்*
*சொன்னார் கழற்கமலம் சூடினோம் - முன்நாள்*
*கிழிஅறுத்தான் என்றுரைத்தோம்; கீழ்மையினில் சேரும்*
*வழிஅறுத்தோம் நெஞ்சமே வந்து."*

(மின்ஆர் தடம்மதில் - மின்னல்போல் ஒளிவிடும் பொன்மயமான விசாலமான கோட்டை. தடம் - விசாலம், கழல் கமலம் - திருவடித்தாம ரைகளை.

பெரியாழ்வார் பிறந்தது ஸ்ரீவில்லிபுத்தூர். அந்த ஊர்ப்பெயரைக் கேட்டாலே பக்தி ஊறும். முன்நாள் - முன்பு ஒருசமயம் கிழி அறுத்தான் - பாண்டியனின் தமிழ்ச்சங்கத்தில் புலவர்களை வென்று பொற்கிழி பெற்றவர் ஆழ்வார். வந்து - மறுபடி பிறந்தால் கீழான குணம் ஒன்றும் நம்மிடம் ஒட்டாது.)

(7)

*இனி, சூடிக்கொடுத்த நாச்சியார் என்று போற்றப்படும் ஆண் டாள் மேல் பாடிய தனியன்கள்.*

*ஆண்டாள் பெரியாழ்வாரின் வளர்ப்பு மகள், ஆண்டாளுக்கும் ஊர் ஸ்ரீவில்லிபுத்தூர்தான்.*

*அடடா என்னென்ன சிறப்பு ஸ்ரீவில்லிபுத்தூருக்கு?*

*இதோ பாடல் -*

*"கோதை பிறந்தஊர், கோவிந்தன் வாழும்ஊர்,*
*சோதி மணிமாடம் தோன்றும்ஊர் - நீதியால்*
*நல்லபத்தர் வாழும்ஊர், நான்மறைகள் ஓதும்ஊர்*
*வில்லிபுத்தூர் வேதக்கோன் ஊர்!"*

(கோதை - ஆண்டாள், கோவிந்தன் - திருமால், பத்தர் - பக்தர்கள். நான்மறை - நான்கு வகைப்பட்ட வேதங்கள்.)

குறிப்பு: கோதை பிறந்த காரணமாக ஸ்ரீவில்லிபுத்தூருக்கு எத்தனையோ பெருமைகள். கோவிந்தனே அங்கு வந்து குடி ஏறிவிட்டான். நாச்சியாரின் பாடல்களைக் கேட்டு அனுபவிக்க, இனி, வேறென்ன வேண்டும்?

(8)

நாச்சியார் பாடிய பாடல்கள் நூற்றி எட்டு. அவற்றில் திருப்பாவை என்னும் முப்பது பாடல்களும் அற்புதமானவை. தெய்வாம்சம் நிறைந்தவை.

ஆண்டுதோறும் புண்ணிய மாதமாகிய மார்கழியில் தினந்தோறும் திருப்பாவைப் பாடல்களைப் பாடி அனுபவிப்பார்கள்.

பாடப்பாடச் செய்த பாவங்கள் கரையும். புண்ணியம் பெருகும்.

திருப்பாவைப் பாடல்களைப்பாடி அனுபவிக்கவில்லை என்றால், பாடாதவர்கள் பூமிக்குப் பாரந்தான்.

இனிப்பாடல் -

*"பாதகங்கள் தீர்க்கும், பரமன் அடிசேர்க்கும்,*
*வேதம் அனைத்துக்கும் வித்தாகும் - கோதைதமிழ்*
*ஐயைந்தும் ஐந்தும் அறியாத மானிடரை*
*வையம் சுமப்பதுவும் வம்பு."*

(கோதை தமிழ் - நாச்சியாரின் பாடல்கள். அதாவது ஆண்டாளின் திருப்பாவைப் பாடல்கள், தமிழ்ப்பாடல், ஐயைந்து - இருபத்து ஐந்து அதனுடன் ஐந்து சேர்க்க ஆக முப்பது.

முப்பது பாடல்களும் புண்ணியத்தைப் பெருக்கும். இறையருள் கூட்டும்.

அறியாத மானிடரை - ஆனால் இது தெரியாத மனிதர்களை - பாடி அனுபவிக்காதவர்களை, வையம் சுமப்பது வம்பு - பூமாதேவி தாங்கி வைத்திருப்பதே அநாவசியம்.)

குறிப்பு: ஒருவன் வாழ்கிறான் என்றால் உணர்வுடன் செயல்படுவது தானே! உணர்வே இல்லை என்றால்!

(9)

திருவேங்கடமுடையான்தான் எனக்கு நாயகன். நான் அவனுடைய அடிமை என்று உறுதி பூண்ட ஆண்டாளே, தன் கூந்தலில் சூடிய மாலையை பெருமானுக்குக் கொடுத்த நாச்சியார்த் தாயே!

உம்முடைய தெளிவும் உறுதியும் எங்களுக்கு வேண்டும். உறுதி யிலிருந்து பிறழக்கூடாது நாங்கள். அந்த ஒரு வரம் எங்களுக்குக் கொடுத்தால் போதும் என்கிறார் பக்தர் ஒருவர்.

இனிப்பாடல் -

*"சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே! தொல்பாவை*
*பாடி அருளவல்ல பல்வளையாய்! - நாடிநீ*
*'வேங்கடவற்கு என்னை விதிஎன்ற இம்மாற்றம்*
*நாம்கடவா வண்ணமே நல்கு."*

(தொல்பாவை - திருப்பாவைப் பாடல்கள், தொல் - பழமை, பழமையான மரபை ஒட்டியது பாவைப்பாடல்கள், பல்வளையாய் - பலநிற வளையலணிந்த மாதரசியே! நாடி - ஆராய்ந்து தெளிந்து, என்னை வேங்கடவற்கு விதி என்ற - திருவேங்கடமுடையானுக்கே என்னைத் தத்தம் பண்ணுக, என்று சொல்லிய அந்த உறுதிப்பாட்டை நாம் கடவாவண்ணம் - நாங்களும் மீறாமல் பின்பற்றும்படி நல்கு - அருள் பாலிப்பாயாக.)

குறிப்பு: *பக்தரிடம் ஒன்றை வேண்டுகிறார் இன்னொரு பக்தர் என் றால் அது இதாகத்தான் இருக்கும்!*

(10)

*ராமானுஜ முனிவர் பரம பக்தர். உத்தம ஞானி. ஆண்டாளின் பாசுரங்களில் மனத்தைப் பறிகொடுத்தவர்.*

*பாடல்களில் பொங்கிவழியும் உணர்ச்சிப் பாடுகளை நேருக்கு நேராகப் பார்க்கிறவர். அந்தந்தச் சந்நிதானங்களில் நின்று தியானிக்கிற வர்.*

*பாடல்களை உள்ளுணர்வோடு நோக்க நோக்க ஒளி பிறந்தது. ஆண்டாளையே நேருக்கு நேராகப் பார்த்து வணங்கிப் பரவசப்படும் நிலை அடிக்கடி ராமானுஜருக்கு ஏற்பட்டது.*

*கண்ணில் நின்ற காட்சி அப்படியே மனத்துள் போய் நின்றுவி டும். அதனால் எங்குபோனாலும் ஆண்டாளின் தெய்வீகக் காட்சி அப்படி அப்படியே கண்முன் வந்து நிற்கும் ராமானுஜருக்கு.*

*இதோ ராமானுஜரின் தனியன் -*

***"மெல்லிய பஞ்சடி***
***யும்துவர் ஆடையும்***
***மேகலை யும்,***

*வல்லியை வென்ற*
*மருங்கும்முத் தார*
*வனமுலை யும்,*
*சொல்லியல் வண்மைச்சீ*
*வில்லிபுத் தூர்அம்மை*
*தோள்அழ கும்,*
*முல்லையை வென்ற*
*நகையும்எல் லாம்என்தன்*
*முன்நிற்கு மே!...”*

(பஞ்சுஅடி - பஞ்சு போன்ற மெல்லிய பாதம். இல்லை. செம்பஞ் சுக் குழம்பு பூசிய பாதம். துவர் ஆடை - காவி உடை. மேகலை - ஒட்டியாணம். வல்லி - பூங்கொடி, மருங்கு - இடை முத்து ஆரம் - முத்துவடம். சொல்லியல் வண்மை - புகழுக்கு ஏற்ற தகுதி. நகை - புன்முறுவல்)

குறிப்பு: *மனத்தில் நிற்கும் காட்சி மறையவே மறையாது.*





# ஸ்ரீராமானுஜர் நூற்றந்தாதி

மகாத்மா காந்தியைப்பற்றி ஒரு சினிமாப்படம் சில ஆண்டுக ளுக்கு முன் வந்தது. அந்தப்படத்தை எடுத்தவர் ஆங்கிலேயர். அட்டன்பாரோ என்பது அவர் பெயர்.

உலகப்புகழ் பெற்ற நடிகர் ஒருவரைக் காந்தியாக நடிக்கும்படி அவர் வேண்டினார். அவ்வளவுதான் பாம்பை மிதித்தவன் எப்படிப்ப தறுவான். அப்படிப் பதறிப்போனார் நடிகர்.

''நான் யார்? காந்தி யார்? நான் குடிப்பேன், கூத்தடிப்பேன், அற்பத்தனமான செயல்களில் ஈடுபடுவேன், யோக்கியன் போல நடந்து கொள்வேன். இந்த நிலையிலுள்ள நானா காந்தியாக நடிப் பது? முடியவே முடியாது'' என்று சொல்லிவிட்டார் உலகப்புகழ் பெற்ற நடிகர்.

என்னடா இது? எடுத்த எடுப்பிலேயே இப்படித் தடங்கல் வருகிறதே என்று திகைத்தார் படம் எடுக்கிறவர். ஆனாலும் அவர் மனம் தளரவில்லை.

''வேறொரு புகழ்பெற்ற நடிகரிடம் போனார். காந்தி படத்தில் காந்தியாக நடிக்கும்படி வேண்டினார்.

நடிகர் ஒப்புக்கொண்டார். ஆனால் ஒரு நிபந்தனை போட்டார். அது என்ன நிபந்தனை?

நான் காந்தியாக நடிக்கவேண்டும் என்றால் என் நடிப்பு முடிகிற வரை நான் குடிக்கக்கூடாது. புகைக்கக்கூடாது. மற்றச் சில்லரைச் சேட்டைகளிலும் நான் ஈடுபடக்கூடாது.

இன்றிலிருந்து ஆறுமாத காலத்துக்காவது அந்தப் பழக்கத்தை விடாமல் தொடர்ந்து கடைப்பிடித்து வந்தால்தான் அந்த மாயப்பிசாசு கள் என்னைவிட்டுப் பூரணமாக ஓடும். அதன்பிறகு காந்தியாக வேஷம் போட்டு நடித்தால் பொருந்தும். அதனால் ஒப்பந்தம் ஆனதிலிருந்து ஆறுமாத அவகாசம் தேவை'' என்றார்.

அப்படியே வைத்துக்கொள்வோம் என்று ஒப்புக்கொண்டார் படம் எடுப்பவர்.

நடிகரும் காந்தியாக நடித்தார். படமும் வெளிவந்தது. உலகம் எல்லாம் கண்டு களித்துப் பரவசப்பட்டது. எதற்கும் இளகாத லட் சோப லட்சம் கல்நெஞ்சங்கள் எல்லாம் இந்தப்படத்தைப் பார்த்தபின் இளகி உருகிவிட்டன.

வெள்ளைக்காரனாக இருந்தாலும் - ஏன் ஒரு நடிகராகவே இருந்தாலும் பெரியவர்களை எப்படி மதிக்க வேண்டும் என்கிற சீலம் சிலரிடம் இருக்கவே செய்கிறது.

கள்ளங்கபடம் இல்லாமல் ஆன்றோர்களையும் சான்றோர்களை யும் மதிக்க வேண்டும். கன்றைக்கண்ட பசுவைப்போல - காதலியைக் கண்ட காதலனைப்போல உத்தமர்களைப் பார்த்த மாத்திரத்திலேயே உள்ளமானது உருகிக்கரைய வேண்டும். ஏன் அவர்களை நினைத்த மாத்திரத்திலேயே மனம் கரைந்து மறுக வேண்டும்.

அப்படி உருகிக் கரைகிற பண்பாட்டுக்குத்தான் பக்தி என்று பெயர்.

பக்தி இல்லை என்றால் வேறு என்ன இருந்தும் பிரயோசனம் இல்லை. தனி மனிதனாகட்டும் - அவன் எவ்வளவுதான் உயர உயரப்பறந்தாலும் பக்தி இல்லை என்றால் உருப்படமாட்டான்.

நாடும் அப்படித்தான் வற்றாத வளம் கொழிக்கும் மாபெரும் நாடாக இருந்தாலும் பக்தி என்கிற ஒன்று அங்கு இல்லை என்றால் அது உருப்படவே செய்யாது.

கருணை, நீதி, ஊக்கம், நம்பிக்கை, ஆனந்தம் எல்லாவற்றுக்கும் அடிப்படையான மூல மந்திரம் பக்திதான்.

இனி, மகான் இராமானுஜர் பக்தியின் அவதாரம். அவருடைய தூய அன்பையும் தியாகத்தையும் ஞானத்தையும் சாண் கொண்டும் முழம் கொண்டும் அளந்து காட்டமுடியாது.

மாசு மறுவற்ற வேறு உத்தமர்களை அளவுகோலாக வைத்துத் தான் இராமானுஜரின் தெய்வீகப் பண்பாட்டை அளந்து பார்க்க வேண்டும்.

அது எப்படி? எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னால் பிறந்த மகாத்மா காந்தி என்று இராமானுஜரைக் குறிப்பிட வேண்டும். இல்லை என்றால் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அவதரித்து இருபதாம் நூற்றாண்டின் மத்தியப் பகுதிவரை நடமாடிய இராமானுஜர்தான் காந்திமகான் என்று சொல்ல வேண்டும்.

மகாத்மாவோ நம்மோடு பழகி உறவாடிய இராமானுஜர். இரா மானுஜரோ நம் கட்புலன்களுக்குப் புலனாகாத மகாத்மா காந்தி.

வேறு எப்படி இனம் காணமுடியும். இராமானுஜரை?

இராமானுஜரின் வாழ்க்கையை ஊன்றிப்படித்தால் போதும். நமது உள்ளத்திலுள்ள அழுக்குகள் எல்லாம் கரைந்து ஓடிவிடும். அருவியில் அடிபட்டு ஓடுவதுபோல ஓடிவிடும்.

குழந்தைகளுக்குச் சொல்லிக்கொடுக்க வேண்டிய பாடம் இராமா னுஜர் போன்ற உத்தமர்களின் வரலாறுகளே.

ஆனால் நாம் அதையா செய்கிறோம். கோட்டை கொத்தளங் களை இடித்தவர்கள், குளங்களையும் மதகுகளையும் உடைத்தவர்கள், ஊர்களைத் தீயிட்டுப் பொசுக்கியவர்கள், காட்டையும் நாட்டையும் அழித்தவர்கள், கற்பைச் சூறையாடியவர்கள், குழந்தைகளை மந்தை மந்தையாக நிற்கவைத்துச் சித்ரவதை செய்தவர்கள், கண்ணைத் தோண்டியவர்கள், காதை அறுத்தவர்கள் இவர்களை எல்லாம் வீரர்கள் என்றும் சூரர்கள் என்றும் பாராட்டி எழுதுகிறோம்.

நம்முடைய குழந்தைகளையே அவற்றைப் படிக்கும்படி பாட மாக வைத்துக் கொல்லாமல் கொல்கிறோம்.

இராமானுஜர் வரலாறு நம்கையில் இருக்கத்தானே செய்கிறது. இராமானுஜர் போன்ற உத்தமர்கள் பலருடைய வரலாறும் அடுக்கடுக் காக இருக்கத்தானே செய்கின்றன. அவைகள் அல்லவா படிக்க வேண்டிய பாடங்கள். இவைகளை வைத்து எத்தனை நாடகங்கள் போடலாம். கதைகள் எழுதலாம். ஏன் நவீனங்கள் கூடப்புதிது புதிதாக எழுதலாம். ஆனாலும் நம்முடைய அறிவு ஜீவிகளுக்கு அது முடிகிறதா?

சினிமாப் படம் எடுப்பவர்கள் கூட சமூக சீர்திருத்தப்பணி சம்பந்தமான கதைக்குப் பரக்கப் பரக்க விழிக்கிறார்கள். அங்கும் இங்குமாய் ஓடுகிறார்கள்.

இராமானுசர் வரலாற்றில் இல்லாத சமூக சீர்திருத்தப்பணியா?

எப்படியோ நம் கண்களைக் கட்டிவிட்டது விதி. காட்டில் சுற்றிச் சுற்றி அலையத் துரத்தி துரத்தி அடிக்கிறது அந்தப் பாழும் விதி.

பொல்லாத விதியின் கொடுமைக்கு முன்னால் நாம் யார்?

இனி இராமானுஜர் போன்ற அருளாளர்களின் இயல்பு வர்ண னையில் சிக்காது. கற்பனைக்குள் அடங்காது.

நம் வாழ்க்கையில் எத்தனையோ அனுபவங்கள் உண்டாகின்றன. உணர்ச்சியோடு ஒட்டிய உண்மை அனுபவங்களாகவே அவை உதிக்கின்றன. ஆனால் பல அனுபவங்களைச் சொற்களால் வெளிப்படுத்த முடிகிறதில்லை. சொல்லுக்குள் அந்த அனுபவங்களைத் திணித்து வைத்த உடனேயே அவற்றுக்கு உயிரில்லாது போய்விடுகிறது.

தண்ணீருக்குள் கிடக்கிறவரை துள்ளி விளையாடிய மீன் தரைக்கு வந்த மாத்திரத்தில் சுருண்டு விழுவது போல நெஞ்சுக்குள் நீச்சலடிக்கும் உணர்வுகள் சொல்லுக்குள் வந்த மாத்திரத்தில் சுண்டுவாதத்தில் துடிப்பது போல் தடுமாறுகின்றன.

இசையின்மூலம் அந்த உணர்வுகளை ஓரளவு - அதாவது அரைகுறையாகக் காட்டலாம். அபிநயத்தில் வைத்து அழுத்த அழுத்த அவற்றின் முகம் தெரியும். ஆனால் அடையாளம் தெரியாது.

பிறகு எப்படித்தான் மெய்யுணர்வை வெளியில் கொண்டுவந்து நிறுத்துவது?

அதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு.

கவியின் மூலம் அதற்கு உருவமும் உயிரும் கொடுக்க முடியும்.

வேறு மொழிகளில் உள்ள கவி பற்றி நமக்குத் தெரியாது. தமிழ்ப்பாடல் என்றால் அதில் வெறும் சொல் மட்டுமல்ல. பழுத்துத் தேன் சொட்டும் இசையும், ஊடுருவி நோக்கும் அபிநயமும் சேர்ந்தே உருவாகின்றன.

தாளம், இசை, உண்மை எல்லாம் ஒன்றாய் நின்று புது அவதாரம் - கவி அவதாரம் எடுக்கிறது.

அதனால் கவியின் மூலம் அதிநுட்பமான மெய்யுணர்வுகள் கூட ஜெகஜோதியாய்ப் பிரகாசிக்கின்றன.

இராமானுஜரின் கருணையையும் தியாகத்தையும் அனுபவித்த திருவரங்கத்து அமுதனார் நூறு கட்டளைக்கலித்துறைப் பாடல்கள் மூலம் மெய்யுணர்வைக் கொட்டுகிறார். அந்த நூறு பாடல்களுக்கு இராமானுஜர் நூற்றந்தாதி என்று பெயர்.

அதிலிருந்து இருபத்து நான்கு பாடல்களை எடுத்து - அனுபவித்த அனுபவத்திலிருந்து இங்கே கொடுக்கிறோம்.

ஒவ்வொரு பாடலும் தெய்வ கடாட்சம். அன்பர்கள் அனுபவித்து இன்புற வேண்டுகிறோம்.

(1)

இராமானுஜர் பற்றிய நினைப்பு இருந்தால் போதும். மறக்க முடியாது அவரை. வார்த்தைக்கு வார்த்தை அவர் பெயர் வரும். நினைப்பும் சொல்லும் இணைய இணைய ஆனந்தமாக இருக்கும் வாழ்க்கை. வெறுப்பே தட்டாது. எப்பொழுதும் உற்சாகமாகவே இருக்கும் வாழ்க்கை.

இனிப்பாடல் -

*"பூமன்னு மாது*
*பொருந்திய மார்பன்*
*புகழ்மலிந்த*
*பாமன்னு மாறன்*
*அடிபணிந்து உய்ந்தவன்,*
*பல்கலை யோர்*
*தாம்மன்ன வந்த*
*இராம னுசன்சர*
*ணாரவிந் தம்*
*நாம்மன்னி வாழநெஞ்*
*சேசொல்லுவோம்அவன்*
*நாமங்க ளே"*

(பூமன்னு மாது பொருந்திய மார்பன் - இதயத்தோடு இதயமாக எப்பொழுதும் சேர்த்து வைத்து திருமகளை அனுபவிக்கும் திருமால் - பூ - (செந்) தாமரை மலர். பா - பாடல். மாறன் - நம்மாழ்வார். பல்கலையோர்தாம் மன்ன வந்த - கலை நலம் மிக்க சான்றோர் நிலைத்துவாழ அவதரித்த (இராமானுசர்) சரணாரவிந்தம் - தாமரைம லர் போன்ற திருவடிகள்.)

குறிப்பு: திருமால் ஞாபகந்தான் நம்மாழ்வாருக்கு. இராமானுஜருக்கோ நம்மாழ்வார் ஞாபகம். நமக்கும் அப்படி ஒரு ஞாபகம் வேண்டுமே. இராமானுஜரை மறவாது வைத்திருந்தால் போதும்.

(2)

திருமங்கை ஆழ்வார் கொஞ்சம் முரட்டு ஆசாமி. ஆனால் அரங்கநாதனும் அவன் அடியார்களும் என்றால் புஷ்பத்தை விட மிருதுவாய் நெகிழ்ந்துவிடும் திருமங்கையாழ்வாரின் உள்ளம்.

தினந்தோறும் திருமாலடியார்களுக்கு அன்னதானம் பண்ணினார் ஆழ்வார். அதற்காக வழிப்பறி கொள்ளை இவற்றில் கூட ஈடுபட்டார்.

திருமாலிடமே வழிப்பறி செய்து அந்தப்பணத்தில் அடியார்களுக்கு அன்னதானம் செய்தவர் ஆழ்வார்.

அடியார்கள் என்றால் அவருக்குக் கண்கண்ட தெய்வம். மற்றவர்களை மதிக்க மாட்டார். அப்படி ஓர் அழுத்தம்.

அந்தத் திருமங்கை ஆழ்வாரை சதா நினைந்து தியானிக்கிறவர் இராமானுஜர். அந்த இராமானுஜரை நினைந்து நினைந்து இன்புறுவது தான் நான் செய்த அருந்தவம் என்கிறார் திருவரங்கத்தமுதனார்.

*"கள்ளார் பொழில்தென்*
*அரங்கர் கமலப்*
*பதங்கள் நெஞ் சில்க்*

*கொள்ளா மனிசரை*
*நீங்கிக், குறையல்*
*பிரான்அடிக் கீழ்*

*விள்ளாத அன்பன்*
*இராமா னுசன்மிக்க*
*சீலம்அல் லால்*

*உள்ளாதென் நெஞ்சொன்று*
*அறியேன் எனக்குற்ற*
*பேரியல் பே!"*

(கள் ஆர் பொழில் - தேன் சொட்டும் பூஞ்சோலை, குறையல் பிரான் - திருமங்கையாழ்வார். விள்ளாத அன்பன் - மறவாத பக்தன். இராமானுசன் மிக்க சீலம் அல்லால் உள்ளாது என் நெஞ்சு - 'ராமானுஜரின் பெருமையைத் தவிர வேறு ஒன்றையும் என்மனம் எண்ணாது, ஒன்று அறியேன் - வேறு என்ன தெரியும் எனக்கு, எனக்கு உற்ற பேரியல்பு - நான்பெற்ற புண்ணியம் வேறொன்றையும் தெரியாத துதான்.

(3)

பொய்கை ஆழ்வார் பரமபக்தர், மாசற்ற காட்சி உடையவர். விஞ்ஞான பூர்வமான மெய்ஞ்ஞான உண்மையைத் தமிழ்ப் பாடல்களாய் வடித்து இறக்கியவர். அவருடைய பாடலைப் பாடப்பாட அகஇருள் நீங்கும். அகஇருளால் விளையும் தொல்லைகள் ஓடிவிடும். சோதிமயமான தூண்டாமணி விளக்குகள்தாம் ஆழ்வாரின் பாடல்கள்.

*"வையம் தகளியா வார்கட லேநெய்யா*
*வெய்ய கதிரோன் விளக்காக - செய்ய*
*சுடராழி யான்அடிக்கே சூட்டினன் சொல் மாலை*
*இடராழி நீங்கிடுமே னெறு"*

என்று முதல் பாடலிலேயே தீபத்தட்டேந்தி ஆராதனை செய்தவர் பொய்கை ஆழ்வார்.

பொய்கையாழ்வார் ஏற்றி வைத்த திருவிளக்கு இராமானுஜர் உள்ளத்துள் நின்று வாடாமல் ஒளிவீசுகிறது. இராமானுஜரின் இந்த நோக்கம் - பார்வை, ஒளி நமக்கு விளங்கினால் போதும். அந்த வினாடியே பேரின்பந்தான்.

*"வருத்தும் அகஇருள்*
*- மாற்றும்எம் பொய்கைப்*
*பிரான், மறைப் பைங்*

*குருத்தின் கொழுந்தையும்,*
*செந்தமிழ் தன்னையும்*
*கூட்டிஒன் றத்*

*திரித்தன்று எரித்த*
*திருவிளக் கைத்தன்*
*திருஉளத் தே*

*இருத்தும் பரமன்*
*இராமா னுசன்என்*
*இறையவ னே!"*

(வருத்தும் அக இருள் - தொல்லை கொடுத்துக் கொண்டே இருக்கும் ஆணவம், திரித்து - திரியாய்த் திரித்து.)

*(4)*

இராமானுஜரை விட்டால் வேறுகதி இல்லை. உற்றதுணை என்றால் அவர் ஒருவர்தான்.

காரணம் இது ஒன்றுதான். நம்மாழ்வாரை நாடறிய - உலகறியச் செய்தவர் இராமானுஜர். நம்மாழ்வாரோ மெய்ஞ்ஞானத்தை உல குக்கு வழங்கியவர், ஏழை எளிய மக்கள் கூட உணரும்படி நுட்பமான தத்துவ உண்மைகளை அள்ளி அள்ளிக் கொடுத்தவர் நம்மாழ்வார்.

பேருண்மையை ஆயிரக்கணக்கான பாடல்களின் மூலம் வழங்கி யவர் நம்மாழ்வார்.

இராமானுஜர் இல்லை என்றால் நம்மாழ்வாரின் அருமையையும் பெருமையையும் மக்கள் அனுபவிக்க முடியுமா?

*"எய்தற்கு அரிய*
*மறைகளை ஆயிரம்*
*இன்தமி ழால்*

*செய்தற்கு உலகில்*
*வரும்சட கோபனைச்*
*சிந்தையுள் ளே*

*பெய்தற்கு இசையும்*
*பெரியவர், சீரை*
*உயிர்களெல் லாம்*

*உய்தற்கு உதவும்*
*இராமா னுஜர்எம்*
*உறுதுணை யே"*

(எய்தற்கு அரிய மறை - சாதாரணமானவர்களால் நெருங்க முடியாத ஆழமான தத்துவ நுட்பங்கள், இன்தமிழ் - இனிய பாடல்கள். செய்தற்கு உலகில் வரும் சடகோபன் - பாசுரம் பாடவே அவதரித்தவர் நம்மாழ்வார். பெய்தற்கு இசையும் பெரியவர் - நம்மாழ்வாரை நம் இதயத்தோடு இதயமாகச் சேர்த்துவைக்க வந்த இராமானுசர்.)

(5)

நம்முடைய வாழ்வு, வளம், உற்றார், உறவினர், ஏன் நாம் வழிபடு தெய்வமும் கூட பாடல்கள்தாம். நம்மாழ்வாரின் பாசுரங்களில்தான் அவ்வளவும் உள்ளன.

இராமானுஜர்தான் இந்த உண்மையை நமக்குச் சுட்டிககாட்டினார் என உள்ளத்தில் கரைந்து உணர்ச்சியானது மருவமருவ இராமானுஜர் அமிர்தமாகத் தித்திப்பார். அவரை நினைக்க நினைக்க நெஞ்சில் தேன் கசியும்.

*"உறுபெரும் செல்வமும்,*
*தந்தையும், தாயும்,*
*உயர்குல மும்,*
*வெறிதரும், பூமகள்*
*நாதனும், மாறன்*
*விளங்கிய சீர்*

*நெறிதரும் செந்தமிழ்*
*ஆரண மேஎன்றிந்*
*நீள்நிலத் தோர்*
*அறிதர நின்ற*
*இராமா னுசன்எனக்கு*
*ஆராமு தே!"*

வெறிதரும் பூமகள் நாதன் - திருமால். மணங்கமழும் செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளின் துணைவன். மாறன் - நம்மாழ்வார்.

(6)

நாதமுனிகள் என்று ஒரு மகான். இராமானுஜருக்கு முன்பே நம்மாழ்வாரின் பாசுரங்களைத் தேடிப்பிடித்துத் தொகுத்து அருளி னார். அந்த நாதமுனிகளைத் தெய்வமாய் மதிக்கிறவர் ராமானுசர்.

*"ஆரப் பொழில்தென்*
*குருகைப் பிரான்அமு*
*தத்திரு வாய்*
*ஈரத் தமிழின்*
*இசைஉணர்ந் தோர்கட்கு*
*இனிய; அவன்*
*சீரைப் பயின்றுய்யும்*
*சீலங்கொள் நாத*
*முனியைநெஞ் சால்*
*வாரிப் பருகும்*
*இராமா னுசன்என்தன்*
*மாநிதி யே!"*

(7)

அடடா! எனக்குக் கிடைத்த யோகந்தான் யோகம். இராமானசரை நினைத்தாலும் இன்பம். சொன்னாலும் இன்பம். வேறு ஒன்றிலும் தேட்டம் இல்லை. அப்படிப் பூரணமாய் நிறைந்து விட்டது என்னுள் ஆனந்தம்.

*"நெஞ்சில் கறைகொண்ட*
*கஞ்சனைக் காய்ந்த*
*நிமலன்,நங் கள்*

*பஞ்சித் திருவடிப்*
*பின்னைதன் காதலன்*
*பாதம்நண் ணா*
*வஞ்சர்க்கு அரிய*
*இராமா னுசன்புகழ்*
*அன்றிஎன் வாய்*
*கொஞ்சிப் பரவகில்*
*லாதென்ன வாழ்வின்று*
*கூடிய தே.''*

'குருகைப்பிரான் - ஆழ்வார் திருநகரில் அவதரித்த நம்மாழ்வார், கறை - வஞ்சனை. பின்னை - நப்பின்னை, பஞ்சித்திருவடி - பஞ்சு போன்ற இளந்தளிர்ப்பாதம். நண்ணா - சேராத.)

(8)

*மின்வெட்டுப் போல பளிச் சென்றடிக்கும் உண்மை. அப்படி அது அடித்த மாத்திரத்தில் ஆட்டமும் பாட்டமும் வந்துவிடும்.*

*பொருளின் கனபரிமாணத்தைப் பற்றி - எடையைப் பற்றிய உண்மை தெரிந்தஉடன் சும்மா இருக்க முடிந்ததா ஆர்க்கிமிடிசால்? ஒரேகா, ஒரேகா என்று ஏதன்ஸ் நகரமே எதிரொலிக்கும்படி கூப்பாடு போட்டுக்கொண்டு தெருவழியே ஓடி வந்துவிட்டார் ஆர்க்கிமிடீஸ்.*

இனி இராமானுசருக்குமுன் தெய்வம் பல பல என்று இருந்தன. இராமானுஜர் மூலம் கண்கண்ட தெய்வம் திருமால் ஒருவர்தான் என்று விளங்கிவிட்டது.

*அடடா! இராமானுசர் இல்லை என்றால் இன்னமும் இருட்டில் துழாவிக் கொண்டுதானே இருப்போம் என்று புத்தியில் ஈடுபட்டவு டன் துள்ளிக் குதிக்காதா உள்ளம்.*

*அந்தத் துள்ளலைப் பாடலில் பார்க்கலாம்.*

***"இன்பம் தரும் பெரு***
***வீடுவந்து எய்தில் என்?***
***எண்ணிறந் த***

***துன்பம் தருநிர***
***- யம்பல சூழில்என்?***
***தொல்உல கில்***

*மன்பல் உயிர்கட்கு*
*இறையவன் மாயன்*
*எனமொழிந்த*
*அன்பன் அனகன்*
*இராமா னுசன்எனை*
*ஆண்டவ னே''*

(வீடு - மோட்சம், நிரயம் - நரகம், மன்பல் உயிர்கட்கு - மனித குலம் முழுதுக்கும். இறையவன் மாயன் - தெய்வம். திருமால் ஒருவர்தான்.)

குறிப்பு: இராமானுசர் துணை கிடைத்துவிட்டது. நரகத்தைப் பற்றியோ மோட்சத்தைப்பற்றியோ ஏன் நான் இனிக் கவலைப்பட வேண்டும் என்பது கருத்து.

கரை புரண்டோடும் வெள்ளத்தை எப்படித் தடுப்பது? மடையைத் தகர்த்துக்கொண்டு - அதன்மேல் தாவி, ஏறி பாய்ந்தோடி வரும் வெள்ளம்.

ஆனந்தப் பெருக்கும் அப்படி ஏறிக்குதித்துத் தாவி ஓடிவரும். ஒரு பாடலோடு நில் என்றால் அது நிற்குமா? தோள்மேல் கைபோட்டு அடுத்த பாட்டு, அதற்கும் அடுத்தபாட்டு என்று தொடர்ந்து வரத்தானே செய்யும் அது.

*(9)*

''இராமானுசரை உணர்ந்து அனுபவிக்கும் மெய்யடியார் கூட்டத்தோடு கூட்டமாய் நான் என்று கலப்பேன் என்று ஏங்குகிற பாவனையில் வருகிறது ஆனந்தம்.

*''கூட்டும் விதிஎன்று*
*கூட்டும்கொ லோ?தென்*
*குருகைப் பிரான்*
*''பாட்டென்னும் வேதப்*
*பசுந்தமிழ் தன்னைத்தன்*
*பத்திஎன் னும்*
*வீட்டின்கண் வைத்த*
*இராமா னுசன்புகழ்*
*மெய்யுணர்ந் தோர்*
*ஈட்டங்கள் தன்னைஎன்*
*நாட்டங்கள் கண்டின்பம்*
*எய்துதற் கே''*

(பத்தி - பக்தி, நாட்டம் - கண். மெய்யடியார் கூட்டத்தைக் கண்டு இன்பத்தில் திளைக்க என்று கிட்டுமோ வாய்ப்பு என்கிற ஏக்கம் பாடலின் எதுகையிலும் மோனையிலும் தெளிவாய்க் கிடக்கிறது.)

*(10)*

*தமிழைப் படிக்காதவன் உருப்படமாட்டான். இராமானுசரின் பெருமையை உணர்ந்து பக்தியோடு அவர் திரு நாமத்தை உச்சரிக்காத வனும் உருப்படமாட்டான்.*

*அவன் என்னத்தைத் தேடி என்ன பலன்?*

*"சொல்லார் தமிழ்ஒரு*
*மூன்றும், சுருதிகள்*
*நான்கும்" எல் லை*
*இல்லா அறநெறி*
*யாவும் தெரிந்தவன்,*
*எண்ணருஞ் சீர்*
*நல்லார் பரவும்*
*இராமா னுசன்திரு*
*நாமம்நம் பிக்*
*கல்லார் அகலிடத்*
*தே:-எது பேறென்று*
*காமிப்ப ரே"*

(தமிழ் மூன்றும் - பாட்டு, இசை, தாளம் ஆகிய மூன்று. எல்லையில்லா அறநெறி - உண்மையைத் தவிர வேறொன்று இருந் தால் அல்லவா அதற்கு எல்லை உண்டு. அறநெறி - சத்திய மார்க்கம். எதுபேறு என்று காமிப்பர் - எதை எதையோ தேடி அலைவார்கள்.)

(11)

*இராமானுசரிடமே நேருக்கு நேராக கேட்கிறார் பக்தர். "உம்மை விட்டால் எனக்கு வேறு கதி இல்லை. அன்புக்குக் காரணம் என்ன வேண்டிக்கிடக்கிறது. அன்புதான் அன்புக்குக் காரணம். என்னை நீர் ஏற்றுக் கொண்டுவிட்டீர். அதுபோதும் எனக்கு.*

*இராமானுசரே! உம்முடைய பெருமையை வார்த்தைகளால் எடுத்துச்சொல்ல முடியுமா?*

***"பேறொன்று மற்றில்லை***
***நின்சரண் அன்றி,அப்***
***பேறளித்தற் கு***

*ஆறொன்றும் இல்லை, மற்று*
*அச்சரண் ஒன்றென்று*
*மெய்ப்பொரு ளைத்*
*தேறும் அவர்க்கும்*
*எனக்கும் உனைத்தந்த*
*செம்மைசொல் லால்*
*கூறும் பரம்அன்று*
*இராமா னுச! மெய்ம்மை*
*கூறிடிலே.*

*(பேறு - பாக்கியம், நின்சரண் - உன்னுடைய அருள். திருவடி. ஆறு - வழி.)*

(12)

இராமானுஜர் புகழ் திக்கெட்டும் பரவியது. அதற்குக் காரணம் அவர் கருணைதான். அந்தக் கருணைதான் ஒன்றுக்கும் உதவாத என்னையும் அவர் பக்தனாக உயர்த்தியது. அதே கருணைதான் நம்மாழ்வார் பாடல்களை உலகெல்லாம் பரப்பியது. அதனால் மக்களுக்கு உண்மை துலங்கியது.

*"கூறும் சமயங்கள்*
*ஆறும் குலையக்;*
*குவலயத் தே*

*மாறன் உரைத்த*
*மறைஉணர்ந், தோனை*
*மதிஇலியேன்*

*தேறும் படிஎன்*
*மனம்புகுந் தோனைத்,*
*திசைஅனைத் தும்*

*ஏறும் குணனை*
*இராமா னுசனை*
*இறைஞ்சின னே"*

*சமயம் - மதம், குவலயம் - உலகம், ஏறும்குணன் - ஓங்கி உயர்ந்த புகழுடையோன்.)*

(13)

நான் தனியாக இல்லை. என் கூடவே இருக்கிறார் இராமானுசர். மக்கள் குலத்துக்கே ஒரு தீர்ப்பு வழங்கிய நீதிபதி இராமானுசர். தெய்வம் என்றால் திருமால் ஒருவர்தான் என்னும் மாறாத தீர்ப்பு அது! அந்த நீதிபதியே என் கூட இருக்கும்போது எனக்கு ஏது பயம்?

*"இறைஞ்சப் படும்பரன்*
*ஈசன் அரங்கன்என்று*
*இவ்உல கத்து*
*அறம்செப்பும் அண்ணல்*
*இராமா னுசன்என்*
*அருவினை யின்*
*திறம்செற்று இரவும்*
*பகலும் விடாதென்தன்*
*சிந்தையுள்ளே*
*நிறைந்தொப் பறஇருந்*
*தான்எனக் காரும்*
*நிகர்இலை யே!"*

(14)

திருவருள் என்பதற்கு ஒரு அடையாளப் பெயர்தான் திருவடி என்பது. அது மனத்துள் பூத்து மணம் கமழும் அருள். அதனால் அதற்கு பூதி - விபூதி என்றெல்லாம் மாற்றுச்சொற்கள் உண்டு.

அருள் மயமானவர் இராமானுஜர். ஆனால் அவருடைய எதிரி கள். அதாவது பொய்யர்கள், புரட்டர்கள் எல்லோரும் இராமானுஜர் என்னும் பெயர் கேட்ட உடனேயே குலை பதறுவார்கள்.

அவர்களுக்குக் கோடை இடி போன்றவர். ஆனால் உத்தமர்களின் உள்ளத்தில் உண்மையை நவநவமாய்ப் பூத்துப் பூத்து மணக்கசெய்வப் பவர். பொய்யை நிர்மூலம் பண்ணும் அவர் (அன்பர்களின்) பொடிப் பொடித்தவறுகளைப் பொருட்படுத்தவே மாட்டார். தவறை கண்ட பின்பும் கூட — எடுத்துச்சொன்னாலும் புன்முறுவல் பூத்து அதை மன்னித்து விடுவார்.

அதுதானே அருள் - திருவருள்

***உதிப்பன உத்தமர்***
***சிந்தையுள், ஒன்னலர்***
***நெஞ்சம்அஞ் சிக்***

*கொதித்திட மாறி*
*நடப்பன, கொள்ளைவன்*
*குற்றமெல் லாம்*
*பதித்தஎன் புன்கவிப்*
*பாவினம் பூண்டன*
*பாவுதொல் சீர்*
*எதித்தலை நாதன்*
*இராமா னுசன்தன்*
*இணையடி யே"*

(15)

"உங்கள் இராமானுஜர் என்ன செய்துவிட்டார்". என்று சிலர் கேட்கக்கூடும். அவர்களிடம் சொல்லக் கூடியது" செய்ய வேண்டியதை எல்லாம் இராமானுசர் செய்து முடித்துவிட்டார். பாக்கி என்னய்யா இருக்கிறது? என்று.

அடிப்படையான உண்மை ஒன்று, அதை ஆயிரம் விதமாக வைத்துப் பித்தலாட்டம் பண்ணினார்கள் மதவாதிகள். அவர்கள் கதிகலங்க உண்மை ஒன்றே என்று நிலைநாட்டினார் இராமானுஜர். அது ஒன்று போதாதா?

அற்பனிலும் அற்பனாகிய என்னையே ஒரு பொருளாக மதித்து எனக்கும் உண்மையைக் காட்டினாரே இராமானுஜர்! அதைவிட வேறு என்ன வேண்டும்?

இராமானுஜர் மூலம்தான் தெளிவும் உறுதியும் புதுப்பிறவி எடுத்தன. அதனால் அவரை உலகம் கொண்டாடுகிறது. திருவரங்கப் பெருமானே எமக்கு உற்ற துணை நீர்தான் என்று இராமானுஜரைச் சேர்த்துக்கொண்டார்.

*"பார்த்தான் அறுசம*
*யங்கள் பதைப்பஇப்*
*பார்முழு தும்*
*போர்த்தான் புகழ்கொண்டு,*
*புன்மையி னேன்இடைத்*
*தான்புகுந்து*
*தீர்த்தான் இருவினை,*
*தீர்த்துஅரங் கன்செய்ய*
*தாள்இணை யோடு*

*ஆர்த்தான் இவைஎம்*
*இராமா னுசன்செய்யும்*
*அற்புத மே!"*

(புன்மையினேன் இடைத்தான் புகுந்து தீர்த்தான் இருவினை - அற்பனாகிய என்னுள் வந்து அமர்ந்து என் வினைப்பயன்களை ஒழித்துக் கட்டினான்.

(16)

இராமானுஜர் ஒன்றுமே செய்ய வேண்டாம். சும்மா இருந்தாலே போதும். மதப்பித்தாலட்டம் ஒடுங்கும். பக்திக்கு உல்லாசம் வரும்.

*"நாட்டிய நீசச்*
*சமயங்கள் மாண்டன,*
*நாரண னைக்*
*காட்டிய வேதம்*
*களிப்புற் றது,தென்*
*குருகைப் பிரான்*
*வாட்டம் இலாவண்*
*தமிழ்மறை வாழ்ந்தது;*
*மண்ணுல கில்*
*ஈட்டிய சீலத்து*
*இராமா னுசன்தன்*
*இயல்புகண் டே"*

செய்யதாள் - செம்மையான திருவருள் - திருவடித்தாமரை என்பது உபசாரம். களிப்புற்றது - ஆனந்தத்தில் திளைத்தது. தமிழ் மறை - பாசுரப்பாடல்கள்.)

(17)

காய் கனிகள் நறுக்க வீட்டில் கருவி ஒன்று உண்டு. அது இல்லை என்றால் மனைவாழ்க்கை முடமாகிவிடும். அதனால் அதற்கு அரிமனை என்று பெயர்.

பெண்டுகளின் உற்ற துணையாக விளங்கும் அரிமனையை வைத்து ஒருவர் குரல் வளையையும் நறுக்கி விடலாம். உபயோகிக்கிற முறையைப் பொருத்து இருக்கிறது நன்மையும் தீமையும்.

எல்லாம் இறைவன் மயம் என்பது அடிப்படையான உண்மைதான், இதை உணர உணர ஆனந்தம் ஊறும்.

ஆனால் இதில் ஒரு ஆபத்தும் உண்டு. நான் கடவுள் மயம் என்று ஒரு பஞ்சமா பாதகனும் சொல்லலாம். சொல்லிக்கொண்டே எல்லாம் இறைவன் செயல் என்று அட்டூழியமும் பண்ணலாம்.

நீரில் குமிழி கலப்பது போல் நானும் இறைவனோடு கலந்து மருவுவேன் என்றும் சவால் விடலாம் அவன்.

அப்படி ஒரு பித்தலாட்டத்துக்கும் வசப்படத்தானே செய்கிறது அத்வைதம் என்னும் உண்மை! - விபரீத உண்மை!

அந்தப் பித்தலாட்டத்தைத் தவிடுபொடியாக்கியவர் இராமானுசர்.

*"பேதையர் வேதப்*
*பொருளிதென்று உன்னி,*
*பிரமம்ஒன்று என்று*
*ஓதி,மற் றெல்லா*
*உயிரும்அஃது, என்னுயிர்*
*மெய்யைவிட் டு,*
*ஆதிப் பிரானொடு*
*ஒன்றாம் எனச்சொல்லும் அவ்*
*அல்லல்எல் லாம்*
*வாதில்வென் றான்எம்*
*இராமா னுசன்மெய்*
*மதித்திட வே"*

(பேதையர் - பைத்தியக்காரர்கள். பிரமம் ஒன்று என்று ஓதி - எல்லாம் கடவுள் மயம் என்று சொல்லி, உயிர் மெய்யை விட்டு - உடலைவிட்டு நீங்கியஉயிர். தொல்லைவாதியர் - விதண்டாவாதம் செய்கிறவர்கள். தாரணி - உலகம். கூழ் - சாப்பாடு. அதாவது ஆணவம். நாழ் - பிறவிப்பிணி).

(18)

*இராமானுசர் அவதரித்ததால் பித்தலாட்டத்தின் வாயில் மண்விழுந்தது. உத்தமர்கள் தலைநிமிர்ந்தார்கள். படிப்புக்கே உரிய ஆணவம் வாலைச் சுருட்டி மடங்கிப்பின்வாங்கி விட்டது.*

*"வாழ்வற் றதுதொல்லை*
*வாதியர்க்கு, என்றும்*
*மறையவர் தம்*
*தாழ்வற் றது,தவம்*
*தாரணி பெற்றது,*
*தத்துவ நூல்*

*கூழற் றது, குற்றம்*
*எல்லாம் பதித்த*
*குணத்தினேற் கும்*
*நாழற் றதுநம்*
*இராமா னுசன்தந்த*
*ஞானத்தி னே''*

(19)

இராமானுஜமுனிவரே! அதைச்செய்கிறேன், இதைச் செய்கிறேன். இது நான் கட்டிய வீடு, இது நான் பார்த்த பார்வை என்று மயங்கும் என் மயக்கம் எல்லாம் கரைந்துவிட்டன. உம்முடைய அருள்வெள்ளம் அடையாளம் இல்லாதபடி கரைத்துவிட்டது அவற்றை. அது மட்டுமா? என் பழவினைப் பாக்கி முழுவதும் உம்முடைய கருணை என்னும் கணக்கில் வரவு வைத்துச் சரி செய்யப்பட்டுவிட்டது.

இனி என்ன வேண்டும் எனக்கு!

இப்படிச் சொல்லிப் புளகாங்கிதம் அடைகிறார் திருவரங்கத்து அமுதனார்.

*''சார்ந்ததென் சிந்தைஉன்*
*தாளிணைக் கீழ்,அன்பு*
*தான்மிக வும்*
*கூர்ந்ததுஅத் தாமரைத்*
*தாள்களுக்கு, உன்தன்*
*குணங்களுக் கே*
*தீர்ந்ததென் செய்கை,முன்*
*செய்வினை எல்லாம்நீ*
*செய்வத னால்*
*போர்ந்தது; செய்ய*
*இராமா னுசஎம்*
*பெருந்தகை யே''*

**(உன்தன் குணங்களுக்கே - உம்முடைய அருளிலும் தியாகத்திலும், தீர்ந்தது என் செய்கை - என்னுடைய காரியம் என்னும் என் இறுமாப்பு இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது. முன் செய்வினை எல்லாம் - என் பழவினைப் பாரம் முழுவதும். நீ செய்வதனால் போர்ந்தது - உம்முடைய அனுக்கிரகத்தால் போய்விட்டது.)**

*(20)*

இராமானுசரின் மாசற்ற ஞானத்தையும் அருள்மயமான நீதியையும் உணர்ந்து அனுபவிக்கிற கூட்டம் - மெய்யடியார் கூட்டம் ஒன்று உண்டு. நாடு முழுவதும் நடமாடியது அத்தொண்டர்குழாம்.

அந்த மெய்த்தொண்டர் கூட்டத்தில் இடம் கிடைப்பது கடினம். அதில் கிடைத்ததென்றால் அது வைகுந்தத்தில் இடம் பிடித்த மாதிரி தான்.

கன்றைத் தாய்ப்பசு மதிப்பது போல அன்பர்களை மதித்து உபசரிக்கிறவர் இராமானுஜர். அன்பன் என்றால் போதும். குலம், கோத்திரம், அறிவு, அறியாமை, வயது, தகுதி எதுவும் அங்கு தலைகாட்ட முடியாது.

அப்படி ஒரு இடத்தைப் பிடித்து விட்டால் எப்படி இருக்கும் மனசுக்கு.

இதோ வருகிறது பாடல்:

*"கைத்தனன் தீய*
*சமயக் கலகரை,*
*காசினிக் கே*
*உய்த்தனன் தூய*
*மறைநெறி தன்னைஎன்று*
*உன்னிஉள் ளம்*
*நெய்த்தஅன் போடிருந்து*
*ஏத்தும் நிறைபுக*
*ழோருட னே*
*வைத்தனன் என்னை*
*இராமா னுசன்மிக்க*
*வண்மைசெய் தே"*

**(கைத்தனன் - வெறுத்து ஒதுக்கினார். யாரை? தீய சமயக்கலகரை - மதத்தின் பேரால் கலகம் செய்யும் போக்கிரிகளை, காசினிக்கே - இந்த உலகம் முழுதுக்கும். உய்த்தனன் - சீதனமாக வழங்கினார். எதை? தூய மறைநெறிதன்னை - சுத்தமான நீதியோடு கூடிய மெய்ப்பொருளை. உன்னி - இராமானுசரின் இந்த அற்பு தங்களை எண்ணி.**

**உள்ளம் நெய்த்த அன்போடு - மனம் முழுவதும் தேனாகத் தித்திக்கும் பக்திப் பரசவத்துடன், ஏத்தும் நிறைபுகழோர் - பாராட்டி வாழ்த்தும் சான்றோர்கள்.)**

(21)

ஒருவருடைய வீரம், கொடை, அன்பு முதலிய பண்புகளை அனுபவிக்க அனுபவிக்க ஆனந்தம் உண்டாகும்.

அதோடு அவருடைய சீலத்தையும் தியாகத்தையும் நினைத்து விட்டாலோ ஆனந்தத்துக்கு வெறியே உண்டாகிவிடும்.

அந்த வெறி உச்சிக்கே ஏறிவிடும்.

இராமானுஜரை அப்படிப் பார்க்கிறார் பக்தர். அது எப்படிப் பாடலாய் வருகிறது பாருங்கள்.

''இராமானுஜ முனியே! வைகுந்தம், திருப்பாற்கடல், திருவேங் கடம், பெருமாள், அவன் புகழ் இவை எல்லாம் உமக்கு எப்படியோ அப்படித்தான் எனக்கு நீரும் உமது செயலும்''

பக்தருடைய பரவசத்தை எப்படி வாங்கி எப்படிக் கொடுக்கிறது தமிழ் என்று இனிப்பார்க்கலாம்.

*''நின்றவண் கீர்த்தியும்,*
*நீள்புன லும்நிறை*
*வேங்க டப்பொற்*
*குன்றமும், வைகுந்த*
*நாடும், குலவிய*
*பாற்கட லும்*
*உன்தனக் கெத்தனை*
*இன்பந் தருமோமற்று*
*அத்தனை யும்*
*என்தனக் கும்தரும்*
*இராமா னுச!நின்*
*இணையடி யே''*

(நின்றவண் கீர்த்தி - அவதாரங்களில் ஏற்பட்டு நிலைபெற்று நிற்கிற புகழ், நீள்புனல் - யமுனைத்தீர்த்தம்).

(22)

கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அலைய லாமா? இராமானுசர் நம்மோடிருக்கிறார். நம் கையிலிருக்கிறார். ஆனாலும் கடவுளைக் காணவில்லையே! அவர் எங்கே போனார்.

எப்போது வருவார் என்று ஆவலில் பறக்கிறோமே நாம். இது பேதமை இல்லையா?

உலகம் எல்லாம் நீக்கமற நிறைந்து கிடக்கிறது இந்தப் பேதைமை.

யாரைத்தான் விட்டு வைக்கிறது விதி!

*"பொய்யைச் சுரக்கும்*
*பொருளைத் துறந்திந்தப்*
*பூதலத் தே*
*மெய்யைப் புரக்கும்*
*இராமா னுசன்நிற்க:-*
*வேறுநம் மை*
*உய்யக் கொளவல்ல*
*தெய்வம்இங்கு யாதென்று*
*உழன்றவ மே*
*ஐயப் படாநிற்பர்*
*வையத் துள்ளோர்தம்*
*அறிவிழந் தே!"*

பொய்யைச் சுரக்கும் பொருளைத் துறந்து - அல்ப இச்சைகளை உதறி எறிந்துவிட்டு, மெய்யைப் புரக்கும் இராமானுசன் - நிரந்தரமான நெறிமுறைகளைப் பாதுகாத்தவர் இராமானுஜர் அவரை மறந்துவிட்டு யார் யாரையோ தேடுகிறோம் நாம்.

(23)

ராமானுசரைப் பார்த்தமாத்திரத்திலேயே நான் மனுசனாகி விட்டேன். மனுசனிடம் இருக்க வேண்டிய அத்தனை பண்புகளும் ஒவ்வொன்றாய் என்னிடமிருந்து ஜொலிக்க ஆரம்பித்து விட்டன. அவ்வளவையும் எப்படிச்சொல்ல. ஆனாலும் ஒன்றிரண்டு சொல்கிறேன்.

***"கண்டுகொண்ட டேன்எம்***
***இராமா னுசன்தன்னைக்;-***
***காண்டலு மே***
***தொண்டுகொண் டேன்அவன்***
***தொண்டர்பொற் தாளில்,என்***
***தொல்வினை வெந்***

*விண்டுகொண் டேன்,அவன்*
*சீர்வெள்ளை வாரியை*
*வாய்மடுத் து*
*உண்டுகொண் டேன்இன்னும்*
*உற்றன ஓதில்*
*உலப்பிலை யே!"*

(என் தொல்வினை வெந் - என் முந்தைய வினைப்பயன்களின் கொடுமையை. விண்டு கொண்டேன் - கிள்ளி எறிந்து விட்டேன். அவன் சீர் வெள்ளைவாரியை - ராமானுஜரின் கருணை மயமான திருப்பாற்கடலை, மொண்டு கொண்டேன் - அள்ளி அள்ளிப் பருகுகி றேன். உற்றனஓதில் உலப்புஇலை - அனுபவங்களைச் சொல்லச் சொல்ல ஆனந்தத்தான். அலுப்பே இல்லை).

(24)

*இராமானுச முனிவரை உணர்ந்த பெரியவர்கள் குழந்தை போல் துள்ளி விளையாடுவார்கள். இராமானுசரின் புகழைப்பாடிப் பாடி ஆடுவார்கள்.*

*அவர்கள் துள்ளி விளையாடும் இடம் என்னுடைய உள்ளந்தான் எனகிறார் கவிஞர். காரணம் அந்தப் பெரியோர்களை உள்ளத்துள் வைத்து சதாவழிபடுவதுதான் என்தொழில் என்கிறார்.*

*"செழுந்திரைப் பாற்கடல்*
*கண்துயில் மாயன்*
*திருவடிக் கீழ்*
*விழுந்திருப் பார்நெஞ்சில்*
*மேவும்நல் ஞானி,நல்*
*வேதியர் கள்*
*தொழுந்திருப் பாதன்*
*இராமா னுசனைத்*
*தொழும்பெரி யோர்*
*எழுந்திரைத்து ஆடும்*
*இடம்அடி யேனுக்கு*
*இருப்பிட மே".*

அற்புதமான பாடல்கள்.

இராம வீரப்பன்
(முன்னாள் அமைச்சர்)

9, திருமலை சாலை,
சென்னை-600 017.
தொலைபேசி: 8266866

நாள்: 12-12-98

"தமிழ் மொழி, தமிழ் இலக்கியம், தமிழ் நுண்கலைகள் ஆகிய அனைத்திற்கும் ஒரு சின்னமாக விளங்கியவர் டி.கே.சி..."

"டி.கே.சி. செய்த இலக்கியத் தொண்டில் ஒரு பெரிய சிறப்பு என்னவென்றால், அவருடைய தமிழ் படித்தவருக்கும், பாமரருக்கும் புரிகிற எளிய தமிழாக இருந்தது. பேச்சுத் தமிழை இலக்கிய விளக்கத்திற்குப் பயன்படுத்தி வெற்றி கொள்ளலாம் என்பதை மெய்ப்பித்தவர் டி.கே.சி..."

ஏறத்தாழ 10, 15 ஆண்டுகளுக்கு முன்பு நான் இப்படி 'ரசிகமணி டி.கே.சி' அவர்களைப் பற்றி எழுதியவைகளையெல்லாம் மீண்டும் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டிய கட்டாயம் எனக்கு அண்மையில் ஏற்பட்டது.

காரணம் அவரது புகழ் வாய்ந்த அடிச்சுவட்டில் மனம் தோய்ந்து வழி நடந்து வரும் திரு. வித்வான் ல. சண்முகசுந்தரம் அவர்களது மூன்று நூல்களை நான் படிக்க நேர்ந்ததுதான்.

'நட்சத்திரவட்டம்', 'தங்கக்கோபுரம்', 'பொன்னூஞ்சல்' என்ற அவரது மூன்று கட்டுரைத் தொகுதிகளும், எனக்கு மீண்டும் 'ரசிகமணி'யின் தனித்த பார்வையையும், மொழி நடையையும் திறனாய்வுத் திறத்தையும் நினைவூட்டின.

அவரது முத்தான மூன்று கட்டுரைத் தொகுப்புகளும் தமிழ் இலக்கியத்தின் ஆழ, அகலங்களை தொய்வற்ற இனிய நடையில் நமக்குத் தொட்டுணர்த்துகின்றன.

வித்வான் சண்முகசுந்தரம், நூல்களை அதிகம் கற்றிருக்கிறார். ஆனால் அதைவிட அதிகமாக மனிதர்களைக் கற்றிருக்கிறார் என்பதற்கு, இவரது நூல்கள் சான்று கூறுகின்றன.

கற்றது மட்டுமா? ஏதோ ஒரு கோணத்தில் அந்த மனிதர்கள் அனைவரையுமே அவர் அமைதியாக ரசித்திருக்கிறார். (ரசிகமணியின் வழி வந்தவரல்லவா!) ஆழ்ந்து சிந்தித்திருக்கிறார். அந்தச் சிந்தனாபூர்வமான ரசனையே இவரது எழுத்துக்களின் அடிநாதம்.

உன்னதமான இதய இலட்சியங்களின் வரி வடிவ வெளிப்பாடுதான் உண்மையான இலக்கியமாகும். உலகமெங்கும் வரலாற்று பூர்வமாக நிலை நிறுத்தப்பட்டுள்ள இலக்கிய நியதி இதுதான்.

அந்தவகையில் வித்வான் ல. சண்முகசுந்தரத்தின் படைப்புகளை நாம் சுலபமாக இனம் கண்டுகொள்ள முடிகிறது. அவற்றின் மூலம் அவரது இதயமும் நமக்குப் புரிந்து விடுகிறது.

*இராம வீரப்பன்*